கொண்டிருக்கு மென்னப்பட்டது. வண்டுகள் தேனையே போக்யமாகக் கொண்டிருப்பது போல* உளங்கனிந்திருக்குமடியவர் தங்களுள்ளத்து ஊறிய தேனாகிய பகவத் விஷயத்தையே போக்யமாகக் கொண்டிருக்கும் பாகவதர்கள் இசையை [கீர்த்தியை]ப் பாடும்படி யெழுந்தருளியிருப்பர்கள் ஆசாரியர்கள்.

இங்ஙனே மற்றும் பல பொருத்தங்களும் காணத்தக்கன ... ... 8

## 9. ஸ்ரீராமாயணத்தில் ஓர் அபூர்வ விஷயம்

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் யுத்தகாண்டத்தின் .தொடக்கத்தில் ஒரு முக்கியமான விஷயம் விடுபட்டுப் போயிருப்பதாகச் சில பெரியார் கருதுகின்றார்கள்.அதாவது,ஸுந்தரகாண்டத்தில்-அனுமான் இலங்கயிற்புகுந்து அந்நகரின் பல பகுதிகளையும் இடித்துக் கொளுத்திப் பாழாக்கி விட்டமை விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றது. இலங்கையின் அமைப்பு முழுவதும் அனுமானால் மிகவும் சிதிலமாக்கப்பட்டொழிந்ததென்பதில் யாருக்கும் விவாதமிருக்க ப்ரஸக்தியில்லை.

பிறகு ஸ்ரீராமபிரான் இலங்கைக்கு எழுந்தருளிப் போர் புரிந்த காலத்து அங்கே என்ன இருந்தது? ஏற்கெனவே அனுமானுடைய வீரத்திற்குஇலக்காகிச் சுடுகாடாகியொழிந்த இலங்கையை ஸ்ரீராமபிரான் மறுபடியும் தான் சுடுகாடாக்கினான் என்பதில் பொருத்தமுமில்லை, அதிசயமுமில்லையே.

கம்பராமாயணத்தில் யுத்தகாண்டத்தில் இராவணன்மந்திரப்படலத்தின் முதலில் சில செய்யுட்கள் அமைந்திருக்குமாறு நோக்கத்தக்கது. அவற்றுள்,

(முதல் செய்யுள்)

**பூவருமயனொடும் புகுந்து பொன்னகர், மூவகையுலகினும் அழகுமுற்றுற**
**ஏவினவியற்றினன். கணத்திலென்பரால், தேவருமருள்கொளத்**
**தெய்வத்தச்சனே**

தெய்வத்தச்சன் [மயன், அல்லது விச்வகர்மா] அனுமனால் எரியுண்ட இடங்களைச் செப்பனிட்டு எல்லாவுலகத்திலுமுள்ள ஸகல நகரங்களிற் காட்டிலும் அந்த லங்காபுரி மிகவும் அழகு பெற்றுத் தோன்றுமாறு செய்தான் என்கிற இச்செய்யுள்.

அதற்கடுத்த செய்யுள்

**பொன்னினும் மணியினும் அமைந்த பொற்புடை, நன்னகர் நோக்கினான் நாகம்**
**முன்னையினழகுடைத் தென்று மொய்கழல், மன்னனுமுவந்து தன் நோக்கினான்**
**முனிவுமாறினான்.**



(கருத்து) வீரக்கழலையணிந்த இராவணன் நவமணிகளுமழுத்தி இயற்றப்பெற்ற அழகுடைய தனது இலங்காபுரியைக் கண்டு வானுலகத்துள்ள நகரத்தையும் பார்த்து, அந்தத் தேவலோகத்து நகரத்திற் காட்டிலும் இப்போது தெய்வத்தச்சன திருத்திய தனது நகரம் அழகாகஇருந்ததோடு எரிப்பதற்கு முன்னேயிருந்ததிற் காட்டிலும் அதிசயித்த அழகு பெற்றுள்ள தென்றுகண்டு, எரியுண்டதும் நல்லதாகவேயாயிற்று என்ற கருத்தினால் உவப்படைந்து தன் சீற்றம் மாறப் பெற்றான் என்பது இச்செய்யுளின் கருத்து.

இங்ஙனே தெய்வத்தச்சன் இலங்கையைத் திருத்தினதாகக் கதையிருந்தாலொழிய உபபத்தி இல்லாமையினால் இக்கதை மிக அவசியமேயாகும்; இது வால்மீகி ராமாயணத்தில் காணப்படவில்லை யென்பது ஒரு குறையே. இப்பொருளைக்கொண்ட ஒன்றிரண்டு ச்லோகங்கள் வால்மீகத்திலும் இருந்தனவென்றும் அவை அச்சுப்பதிப்பில் விடுபட்டுப் போயினவென்றும் சில ஓலை ஸ்ரீகோசங்களில் இப்போது கிடைக்கின்றன வென்றும் ஒரு பெரியார் கூறுகின்றார் என்று நமது காதில் விழுகிறது.

*ஹாரோபி நார்ப்பித: கண்டே* என்கிற ச்லோகம் பெருமாளுடைய திருவாக்காக ஸ்ரீவசநபூஷணத்திலும் அதன் வியாக்கியானத்திலும் உதாஹரிக்கப்பட்டிருந்தும் அது ஸ்ரீராமாயணத்தில் கிடைக்கவில்லை. விடுபட்டுப் போயிற்றென்றே கொள்ளக் கடவது. அந்த ச்லோகமும் ஓலையேட்டில் கிடைத்திருப்பதாக வெளிவந்திருக்கின்றது. ... ... ... ... 9

## 10. ப்ரஹ்மஸூத்ரே தேவதா நிஷ்கர்ஷம் காட்டுதல்

சாரீரக மீமாம்ஸை முதலான வேதாந்த சாஸ்த்ரங்களில் பரப்ரஹ்மாதி ஸாமாந்ய சப்தங்களாலே விவக்ஷிதன் ஸ்ரீமந்நாராயணனே யென்பதும், வேதாந்த சாஸ்த்ரப்ரமேயம் விசிஷ்டாத்வைதமேயென்பதும் ஸாரஸம்க்ஷேபமாக ஈண்டு விவரிக்கப்படுகிறது. அதில் ஜகத்காரணவஸ்துவாதிகளான வேதாந்தவாக்யங்களெல்லாம் ஸ்ரீமந்நாராயணனிடத்திலேதான்பர்யவஸிக்கின்றனவென்றுஸூத்ரகாரர் தாமே ஸித்தாந்தம் செய்திருக்கிறாரென்பதை முன்னம் நிரூபித்துக்காட்டுகிறேன்.‘‘அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா’’என்று ப்ரஹ்மவிசாரத்தை ப்ரஸ்தாவித்து ‘‘ஜந்மாத்யஸ்ய யத:’’ என்கிற அடுத்த ஸூத்ரத்தினாலே, ‘எந்த வஸ்துவினிடத்தில் நின்றும் ஜகஜ் ஜந்மஸ்திதிலயங்கள் ஆகின்றனவோ அது ப்ரஹ்மம்’ என்று ப்ரஹ்மலக்ஷணம் காட்டினார் வ்யாஸர். வேதாந்தங்களில் ஜகத்காரணவஸ்துவைத் தெரிவிக்கின்ற வாக்கியங்கள் ஒரே விதமாக இல்லை. பரஸ்பரவிருத்தங்கள்போல் தோன்ற நின்றன என்பது ப்ரஸித்தமானவிஷயம். ஏதோ ஒரு வஸ்து தான் ஜகத்காரணமாக இருக்க முடியுமே யொழிய, பல வஸ்துக்கள் அப்படி யிருக்க முடியாதென்கிற நிச்சயம் ஆவச்

யகமானது. பரஸ்பர விருத்தங்கள் போல் தோன்ற நின்றகாரண வாக்யங்களாலே இந்த நிச்சயம் எப்படி உண்டாகுமென்று தோன்றக்கூடிய சங்கையை ஸூத்ரகாரர் பரிஹரித்தேயாகவேண்டும்; பரிஹரித்தேயிருக்கிறார். எப்படி பரிஹரித்திருக்கிறாரென்றால், ஸகலகாரண வாக்யங்களுக்கும் ஐககண்ட்யத்தைக் காட்டிப்பரிஹரித்திருக்கிறார். ஸாகாங்க்ஷவாக்கியங்களுக்கு நிராகாங்க்ஷ வாக்கியங்களில் பர்யவஸானம் நியாயமென்பது யாவருமிசைந்ததொன்றும். இதையே நெஞ்சில்கொண்ட வ்யாஸ மஹர்ஷியானவர் ஈக்ஷத்யதிகரணம் முதலானவற்றால் காரணவாக்யங்கள் எல்லாவற்றிற்கும் புருஷஸூக்தப்ரதிபாத்யனான நாராயணனிடத்தில் பர்யவஸாநத்தைக் காட்டியுள்ளார். இது தன்னை விளக்கமாக உபபாதிக்கிறேன் கேண்மின். ஜகத்காரண வஸ்துவை ப்ரஸ்தாவிக்கின்ற வாக்கியங்கள் காரணவாக்ய மெனப்படும். அந்தவாக்யங்களை ஸாகாங்க்ஷ வாக்யங்களென்றும் நிராகாங்க்ஷவாக்யங்களென்றும் இரு வகையாகப் பிரித்துக்கொள்ள வேண்டியது முதற்காரியம். ஸாகாங்க்ஷ வாக்யங்களென்பவைதாமும் இரு வகையாயிருக்கும் 1. ஸாமாந்ய சப்தத்தோடு கூடியிருந்து விசேஷப்ரதிபத்தியை அபேக்ஷித்திருக்குமவையென்றும், 2. அநுவாதரூபமாய்க்கொண்டு புரோவாதத்தை அபேக்ஷித்திருக்குமவை என்றும். "ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத் ஏகமே வாத்விதீயம்"—'ஸேயம் தேவதைக்ஷத'' இத்யாதி வாக்யங்களில் 'ஸத்'என்றும்,. 'தேவதா' என்றும் ஸாமாந்ய சப்தங்களே யிருக்கையாலே இவை விசேஷ ப்ரதிபத்தி ஸாகாங்க்ஷங்களென்பது ஸ்பஷ்டம். '"யதோ வா இமாநி பூதாநிஜாயந்தே'' இத்யாதி வாக்யங்கள் யச்சப்த கடிதங்களாயிருப்பது பற்றி அநுவாதரூபங்களாகையாலே புரோவாத ஸாகாங்க்ஷங்களென்பதும்ஸ்பஷ்டம். ஸாகாங்க்ஷ வாக்யங்களில் கீழ்ச்சொன்ன இரண்டுவகைகள் தவிர மூன்றாவது வகையும் ஒன்று சொல்ல வேண்டியதாகிறது; அதாவது, அயோக்யமான அர்த்தத்தைத் தெரிவிக்கும் வாக்யங்கள் யோக்யார்த்தப்ரதிபத்திஸாகாங்க்ஷமாயிருப்பது என்பதாம். ப்ரதர்தந வித்யையில்* மாமுபாஸ்வ ஏததேவாஹம் மநுஷ்யாய ஹிததமம்மந்யே'' என்று இந்திரன் சொன்ன வாக்யம் போன்றவை இந்தவகுப்பில் சேரக்கடவன. ஆக மூவகுப்பாகப் பிரியலுற்ற ஸாகாங்க்ஷங்களான காரண வாக்யங்கள் வஸ்துவிசேஷத்தை நிர்ணயிப்பதில் ஸ்வதந்திரமாக அசக்தங்களாகையாலே நிராகாங்க்ஷங்களான வாக்ய விசேஷங்களைக் கொண்டே வஸ்துவிசேஷத்தை நிர்ணயிக்க வேண்டியதாகிறது. யோக்யார்த்த விசேஷ ப்ரதிபாதகங்களாய்க் கொண்டு இதர வாக்கியங்களை எதிர்பாராதவாக்யங்களே நிராகாங்க்ஷ வாக்யங்களென்று தேறிற்று *ஏகோ ஹ வை நாராயணஆஸித் ந ப்ரஹ்மா நேசாந:* இத்யாதி வாக்யங்களே அப்படிப்பட்டவைஎன்றுஸாரஜ்ஞர்கள் நிஷ்கர்ஷித்துள்ளார்கள் மேலே காட்டியவாக்கிய விசேஷத்தில் ஸாமாந்ய சப்தம் சேர்ந்திருக்கவில்லை, அநுவாதரூபத்வமுமில்லை; அயோக்யார்த்தப்ரதிபாதநமுமில்லை. ஸத்,ப்ரஹ்ம!



ஆத்ம, தேவதா இத்யாதிகளான பதங்களிருந்தாலன்றோஸாமாந்ய சப்தம் சேர்ந்திருப்பதாக ஆகும்! அவை இல்லையே யச்சப்த கடிதமாயிருந்தாலன்றோ அநுவாத ரூபமாக ஆகும். அதுவுமில்லயே. அயோக்யார்த்த ப்ரதிபாதகத்வமில்லாமையோடு கூடினயோக்யார்த்த ப்ரதிபாதகத்வமே யுள்ளதென்பது. நிரூபிக்கப்பட வேண்டியதாக நிற்கையாலே அதை நிரூபிக்கிறேன்.

## 11. சாரீரக மீமாம்ஸையில் நின்றும் நிரூபணம்.

சாரீரக மீமாம்ஸையில் சாஸ்த்ராரம்ப ஸமர்த்தநார்த்தமான சதுஸ்ஸூத்ரி முடிந்ததும் ஐந்தாவது அதிகரணம் ஈக்ஷத்யதிகரணம். இதில் விசேஷித்துக் குறிக்கொள்ளத்தக்க ஸூத்ரங்கள் இரண்டு— "தந்நிஷ்டஸ்ய மோக்ஷாப தேசாத்'' "கதிஸாயாந்யாத்'' என்னுமிவை. ஸாதாரணமான ஸச்சப்தத்தையும் தேவதா சப்தத்தையும் கொண்டிருக்கிற ஸத்வித்யையானது புருஷஸூக்த ப்ரதிபந்நனான ஸ்ரீமந்நாராயணன் பக்கலிலே பர்யவஸிப்பதாக இவ்விரண்டு ஸூத்ரங்களாலும் காட்டப்படுகிறது "தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்''என்கிற ஸூத்ரத்தின் பொருளை முன்னம் தெரிந்து கொள்ளவேணும். "தந்நிஷ்டஸ்ய'' என்கிறவிடத்திலுள்ள தச்சப்தத்தினால்— ஸூத்ரகாரர் கருதிய விஷயவாக்யத்திலுள்ள ஸச்சப்த வாச்யமான வஸ்து கொள்ளப்படுகிறது. ஆகவே, 'ஸத்தை உபாஸிப்பவனுக்கு' என்பதாகப் பொருள் தேறிற்று. ஸத்தை உபாஸிப்பவனுக்கு முக்தி கிடைப்பதாக ஓதப்படுவதால் ப்ரக்ருத ஸச்சப்த வாச்யமான வஸ்து ப்ரதானமாகமாட்டாது என்றதாக ஸூத்ரார்த்தம் தேறும். 'ப்ரதாநந்தான் ஜகத்காரணம்'என்பவர்களை நிரஸிப்பதன்றோ ப்ரஸ்துதம். புருஷஸூக்தத்திலும் உத்தர நாராயணத்திலும் "தமேவம் வித்வா நம்ருத இஹ பவதி. நாந்ய: பந்தா அயநாய வித்யதே* என்றும்,"நாந்ய: பந்தா வித்யதே அயநாய'' என்றும் மோக்ஷோபாயமான உபாஸநத்திற்கு இலக்காகுந்தன்மை நாராயணனுக்கேஓதப்பட்டுள்ளது. இந்த ஸத்வித்யாப்ரகரணத்திலும் [அதாவது, ச்சாந்தோக்யத்தில்] "ஆசார்யவாந் புருஷோ வேத; தஸ்ய தாவதேவ சிரம் யாவந் ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே'' என்று ஸதுபாஸனமே மோக்ஷோபாயமாகச் சொல்லப்பட்டது. இந்த ச்ருதிவாக்யத்தின் பொருளாவது— எவனுக்கு உபதேஷ்டாவான ஆசார்யன் இருக்கிறானோ அவனே ப்ரஹ்ம வித்தாவான் சரம சரீரத்திலிருந்து விடுபடுமளவே அவனுக்குக் கால தாமதம்; சரம சரீரம் விழுந்தவுடனே ஸச்சப்தநிர்திஷ்டனாய் ஜகத்காரண பூதனான பரமபுருஷனை அடைகின்றான்; [ஸதுபாஸன நிஷ்டனுக்கு சரீரம் விழுமளவுதான் மோக்ஷப்ராப்தியில் தாமதம். சரீரம் தொலைந்தவுடனே முக்தனாகிறான்] என்பதாம். இதனால் நாராயணனே ஸச்சப்த வாச்யனென்று அறுதியிடப்படுவதனால் ப்ரக்ருதமான ஸத்து ப்ரதாநமன்று என்றதாக ஸூத்ர தாத்பர்யம் தேறுகின்றது. "தமேவம் வித்வா நம்ருத இஹ பவதி'' இத்யாதிகளான உதாஹ்ருத வாக்யங்களாலே நாராயணோபாஸனந்தான் மோக்ஷோபாயமென்று நிச்சயிக்கப்பட்டவளவில் *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்* என்று ஸூத்ரமியற்றின மஹர்ஷியானவர் நாராயண உபாஸகனையே விவக்ஷித்தாராகிறார் என்று நிர்ணயிப்பதில் தட்டுண்டோ?

## 12. பரகீயவாதப்ரதிக்ஷேபம்

கீழே நாம் விவரித்த விஷயத்தில் பிறர் சொல்லக்கூடியதொன்றுண்டு; அதாவது;* தந்நிஷ்டஸ்ய மோக்ஷாபதேசமாகிற ஹேதுவைக்கொண்டு ப்ரதாநம் ஜகத்காரணமன்று என்று நிரஸிப்பது மட்டுமே இங்கு ஸூத்ரகாரருக்கு உத்தேச்யமானது; நாராயணனே ஜகத்காரண பூதனென்று ஸ்தாபிப்பதில் இங்கு நோக்கே கிடையாது. சப்தத்தினுல் கிடைப்பதற்கு மேற்படக் கொள்ளத்தகாது- என்று. (இதற்கு மறுப்பு;) இங்ஙனம் சொல்வது தவறு இதர ப்ரதிக்ஷேபத்தில் மட்டுமே ஸூத்ர தாத்பர்யமென்று கொண்டால் ந்யூநதையாகும். இந்த வேதாந்த சாஸ்த்ரம் எதற்காக ஆரம்பிக்கப்பட்டதென்று பார்க்க வேணும்; முமுக்ஷுவானவனை மோக்ஷோபாய பூதமான வஸ்துவை உபாஸிப்பதில் ப்ரவர்த்திக்கச் செய்வதன் பொருட்டு விசிகித்ஸையற்ற ப்ரஹ்மஜ்ஞானோத்பாதநத்தின் பொருட்டு சாஸ்த்ரம் ஆரம்பிக்கப்பட்டது; சாஸ்த்ராரம்பத்திற்குப் பலன் இதுதானென்பதை வேதாந்திகள் யாவரும் ஸமரூபமாக இசைந்தே தீருவார்கள். ‘ஜகஜ்ஜந்மாதி காரணம் ப்ரஹ்ம’ என்று ப்ரஹ்மலக்ஷணம் சொல்லி ப்ரதாநாதிகள் ஜகத் காரணமன்று என்று கண்டித்த வளவால் விசிகித்ஸையற்ற ப்ரஹ்மஜ்ஞாநோத்பாதனம் செய்ததாக ஆய்விடுமோ? ஒரு நாளுமாகாது.ப்ர ஹ்ம ருத்ராதிகளிடையில் எந்த தேவதை ஜகஜ்ஜன்மாதி காரணம்? என்கிற விசிகித்ஸை பரிஹரிக்கப்படாத வளவில் நிஸ்ஸம்சய ப்ரஹ்மஜ்ஞானோத்பாதநம் செய்யப்பட்டதாக ஆகமாட்டாதென்பதைப்பேதையருமறிவர்; ஏவஞ்ச, இன்ன தேவதைதான் ஜகத்காரணமென்று நிஸ்ஸந்தேஹமாகத் தெரிவிக்கப்படாத வளவில் சாஸ்த்ராரம்ப ப்ரயோஜனம் தேருமையாலே ந்யூநதைக்குப் பரிஹாரமே ஏற்படாது. ஆகவே, ஜகத்காரண பூத ப்ரஹ்ம சப்த வாச்யமான தேவதா விசேஷம் இன்னதென்று நிர்த்தாரணம் செய்வதிலும் சாஸ்த்ரம் தத்பரமானது என்று இசைந்து தீர வேண்டும். *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத் *என்கிற ஹேதூக்தியின் ஸ்வாரஸ்யத்தினுலும் தேவதா விசேஷ, நிர்ணயத்தை ஸூத்ரகாரர் செய்யக் கருதியுள்ளாரென்பது செவ்வனே விளங்கா நின்றது. மோக்ஷோபாய பூதமான வஸ்துவுக்கு உபாஸநவிஷயத்வம் யாதொன்று இங்குச் சொல்லப்பட்டிரா நின்றதோ இது ப்ரதாநாதி ப்ரதிக்ஷேபக மாத்ரமே யன்று; தேவதா விசேஷ விஷயகத்வத்தை ஸாதிப்பதாகவுமாகின்றது. ஸதமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி* என்கிற ச்ருதிவாக்கியத்திலுள்ளதான தச்சப்தமானது எந்த தேவதா விசேஷத்தைச் சொல்லுகின்றதோ, அதனையே ஸதந்நிஷ்டஸ்யஸ என்கிற ஸூத்ரத்திலுள்ள தச்சப்தமும் சொல்லக்கடவதென்பது திண்ணம். ஸவாஸுதேவ மநாராத்ய கோ மோக்ஷம் ஸமவாப்ஸ்யதி* என்பது முதலான பல ப்ரமாண வசனங்களை இங்கு அநுஸந்திப்பது. ஆக, மோக்ஷ ஹேதுத்வமாகிற லிங்கத்தினுல் ஸச்சப்தத்தின் பொருளை நிஷ்கர்ஷிப்பவரான வியாஸ முனிவர் தமது ஸூத்ரத்தில் நாராயணனையே கருதினுரென்பது நிச்சயம். ... ... ...



## 13. விசேஷ நிருபணம்

ஸச்சப்த வாச்யன் நாராயணனே என்பது மற்றெரு ப்ரகாரத்தாலும் நிர்ணயிக்கத்தக்கதாம்."அதாவது. புருஷ ஸூக்தத்திலும், உத்தர நாராயணத்திலும்* ஸர்வாணி ரூபாணி விசித்ய தீர:, நாமாநி க்ருத்வா அபிவதந் யதாஸ்தே* என்பதனுல் நாம ரூப வ்யாகர்த்தா வாக இருக்குந் தன்மை சொல்லப்பட்டது. இது ஸத்வித்யா ப்ரகரணத்திலும் *ஸேயம் தேவதா இமாஸ் திஸ்ரோ தேவதா அநேந ஜீவே நாத்மநா அநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரோத்* என்றேதப்பட்டிருப்பதானது ஸச்சப்தவாச்யன் நாராயணனே என்பதற்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாகும். ஈக்ஷத்யதிகரணத்திலிருந்து மேலே நாமெடுத்துக் காட்டின இரண்டு ஸூத்ரங்களில் *தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத்* என்கிற முந்தின ஸூத்ரத்தைப் பற்றிச் சொல்ல வேண்டுமவை சொன்னேம். இனி *கதிஸாமாந்யாத்* என்கிற அடுத்த ஸூத்ரத்தைப் பற்றிச் சொல்லுகிரேும். [கதிஸாமாந்யாத்.] கதியாவது ப்ரவ்நத்தி; அதாவது அர்த்த போதகத்வம் [ஸாமாந்யாத்] அது ஸமாநமாயிருக்க வேண்டியது ஆவச்யக மாகையாலே என்று பொருள். காரணவாக்யங்களெல்லாம் ஒரு மிடருயிருக்க வேண்டுகையாலே என்றபடி. இது மிகவும் ஆவச்யகமானது. ஏவஞ்ச, *அத புருஷோ ஹ வை நாராயணோ காமயத—ப்ரஜாஸ் ஸ்ருஜேயேதி*, *ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாநோ நேமே த்யாவாப்ருதிவீ* இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்களில் நாராயணனுக்கே ஜகத்காரணத்வம் ஓதப்பட்டிருக்கையாலே ஸத்வித்யையிலுள்ள காரணவாசகங்காள ஸாமாந்ய சப்தங்களுக்கு [ஸச்சப்த தேவதா சப்தங்களுக்கு ]நாராயணனுகிற தேவதா விசேஷத்திலே பர்யவஸானமின்றிக்கே யொழிந்தால காரண வாக்யங்களுக்கெல்லாம் ஐககண்டியம் ஜம்பவிக்க மாட்டாது. ஆகவே ப்ரக்ருதங்களான ஸச்சப்த தேவதா சப்தங்கள் நாராயணன் பக்கலிலே பர்யவஸிக்கின்றன வாதலால் ப்ரதாநம் ப்ரக்ருத ஸச்சப்த வாச்யமன்று என்பதாக “கதிஸாமாந்யாத்” என்கிற ஸூத்ரத்திற்குப் பொருளாகத்|தேறி நின்றது. பல சொல்லி என்? ஸாரமாகச் சொல்லாவதிவ்வளவே. ஸூத்ரங்களின் பொருளை நிர்வஹிப்பதற்கு உபநிஷத்துக்களிலிருந்து விஷயவாக்கியங்கள் கொள்ளப்படுகின்றன வென்பது யாவருமறிந்ததே. சங்கர பாஷ்யத்திலும் ஸ்ரீபாஷ்யத்திலும் பெரும்பாலும் விஷயவாக்கியங்கள் வெவ்வேருகக் கொள்ளப்படாமலிருப்பதையும் காண்கிரேும். அந்த விஷய வாக்யங்களிலெல்லாம் சொல்லப்படுகிற தன்மைகள் ஸ்ரீமத் நாராயணனுக்கே அஸாதாரணங்களென்பது ச்ருதிபுராணுதிகளில் ப்ரஸித்தம்-என்கிறவிதனையும் முக்கியமாகக் குறிக்கொள்க. ஆனந்த மயத்வம், ஆதித்ய மண்டலத்தினுள்ளிருத்தல், புண்டரீகாக்ஷத்வம், அபஹதபாப்மத்வம், மோக்ஷார்த்த உபாஸந விஷயத்வம். அக்நி இந்திரன் முதலிய ஸர்வ தேவதைகளுக்கும் அந்தர்யாமியா யிருத்தல், ஸர்வ பூதங்களுக்கும் அந்தர்யாமியாயிருத்தல் இத்யாதிகளான தரும

விசேஷங்களுக்கு இருப்பிடமான வஸ்துவே ஜகத்காரணமாகக் கூடியதென்று நிஷ்கர்ஷிக்கின்ற ஸூத்ரகாரருடை உள்ளத்தில் ஸ்ரீமந் நாராயணனே உறைந்திருக்கிருனென்பது ப்ராமாணிகர்களுக்கு அறிவரிதன்று. இனி, ஆதிசங்கராசாரியர் நாராயணபாரம்யத்தையே ஸ்தாபித்தவரென்பது ஸ்பஷ்டமாக நிரூபிக்கப்படுகிறது. ... ... ... ... ... ...

## 14. ஆதிசங்கராசார்யக்ருத நாராயணபாரம்யஸ்தாபனம்

ஆதிசங்கரர் இயற்றிய விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் தேவதாந்தரங்களுக்கு அவரத்வத்தை நன்கு நிலைநாட்டி ஸ்ரீமந்நாராயணனுக்குப் பரத்வம் ஸ்தாபித்திருப்பது கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொப்ப விளங்கா நின்றது. விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு பாஷ்யம் செய்த பகவத் பாதர் சிவ ஸஹஸ்ர நாமத்திற்கு ஏன் பாஷ்யம் செய்யவில்லை? என்று வினவினுல் "அப்போது சிவஸஹஸ்ர நாமஸ்துதியில்லை; பிற்பட்ட காலத்தில்தான் அஃது உண்டாயிற்று ஆதலால்தான் அதற்கு பாஷ்யம் செய்ய ப்ரஸக்தி யுண்டாகவில்லை"என்கிருர்கள் அது நிற்க. பாஞ்சராத்ராகமப்ராமாண்யாதிகரணத்தில், *உத்பத்த்யஸம்பவாத்* என்கிற ஸூத்ர பாஷ்யத்தில்"தத்ர பாகவதா மந்யந்தே" என்று தொடங்கி பாஞ்சராத்ராகம ப்ரமேயங்களான விஷயங்கள் மூன்றென்று ஸங்க்ரஹித்து, அவற்றுள் இரண்டு விஷயங்களில் தம்முடையஸம்மதியைக் காட்டி, மூன்ருவதான ஒரு விஷயத்தில் மட்டும் வைமத்யம் காட்டியுள்ளார் பகவத் பாதர் தமக்கு ஸம்மதமாகக் காட்டின இரண்டு விஷயங்கள் இவை;—) இங்கு அவருடைய பங்க்திகளையே உதாஹரிப்போம்.) "தத்ர யத்தாவதுச்யதே யோஸௌ நாராயண:ப்ரஸித்த:பரமாத்மா ஸர்வாத்மா இதி,தத் ந நிராக்ரியதே. யதபி தஸ்ய பகவத: அபிகமநாதிலக்ஷணமாராதநம் அஜஸ்ரம் அநந்யசித்ததயா அபிப்ரேயதே,ததபி ந ப்ரதிஷித்யதே;ச்ருதி ஸம்ருத்யோரீச்வரப்ரணிதாநஸ்ய ப்ரஸித்தத்வாத்" என்பன அவருடைய பாஷ்ய பங்க்திகள். இவற்ருல், ஸ்ரீமந்நாராயணனுக்கே பாரம்ய ப்ரதிஷ்டாபநத்தில் பகவத் பாதர் ஊக்கமுடையவரென்பது தேறிற்றென்னுமிடம் மறக்கத் தக்கதன்று. மறுக்கவும் தக்கதன்று

## 15. ஆதிசங்கரரைப்பற்றியே

ஈச்வராதி ஸாமாந்ய சபதங்க்ளுள்ள விடங்களில் வாஸுதேவ நாராயணுதீ விசேஷ சப்தங்களையிட்டு வியாக்கியானம் செய்யத் தொடங்கினவரும் ஆதிசங்கரரேயாவர். மேலேயெடுத்துக் காட்டின *உத்பத்த்யஸம்பவாதிகரண பாஷ்யபங்க்தியில் "பகவதோ நாராயணஸ்ய அபிகமநாதிலக்ஷணமாராதநமஜஸ்ரம்" என்றவிடத்தில் ["அநந்யசித்ததயா" என்றெழுதப்பட்டுள்ளதில்] இதை நீந்தனர்கள் கண்மூடிகளாயிருக்கின்றனர். ருத்ராதிகளான அந்யர்களிடத்திலும் சித்தத்தை வைத்துச் செய்யப்படுகிற ஸ்ரீமந்நாராயணுராதநம் அநந்யசித்தக்ருதமாக எப்படியாகுமென்பதை அவர்கள் ஆலோசிக்க



மாட்டிற்றிலர். நநு.நாராயணனைப் பரிவாரத்தோடுங்கூட ஆராதிப்பதும் சிந்திப்பதும் செய்தால் இதுஅநந்யசித்தத்வத்திற்கு விரோதமாகுமோ! என்று அவர்கள் கேட்கக்கூடும். ருத்ராதிகளிடத்தில் ஸ்ரீமந்நாராயண பரிவாரத்வ ப்ரதிபத்தி குறையற்றதாகில் குசலமேயாகுமிவர்களுக்கு. ஆதிசங்கரர் விஷ்ணு பக்தரா?சிவ பக்தரா? என்று விசாரித்து நிர்ணயிக்க வேண்டுவது அவசியமானது. ... ... ... ... ...

## 16. சாங்கரகீதாபாஷ்ய விசேஷவிவரணம்

ச்ருதீதிஹாஸ புராணுதி ப்ரமாண விசேஷங்களுள் பகவத்கீதையே முன்னணியில் நிற்கின்றதென்பதில் யார்க்கும் விவாதமிராது. எம்பெருமான் தானே சோதிவாய் திறந்து பணித்ததென்கிற மிக்கசிறப்பன்ருே இதற்குள்ளது! அப்பெருமான் ஸ்ரீமந்நாராயணனே யென்றும் ஸ்ரீமஹாவிஷ்ணுவே யென்றும் இதில் ஸகல வைதிகர்களும் ஏககண்டர்களேயாவர். இதில் விப்ரதிபத்தி கொண்டவைதிகர் ஒருவருமிலர்; இத்தகையசிறந்த நூலில் ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பரத்வமும் தேவதாந்தரங்களின் அவரத்வமும் சங்கரரால் அடிக்கடிவிளக்கப்பட்டுள்ளது. (10-8) *அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே* என்றவிடத்தில் சங்கரபாஷ்யபங்க்தி இதுகாணீர்;-"அஹம் பரம்ப்ரஹ்ம வாஸுதேவாக்க்யம்;ஸர்வஸ்ய ஜகத: ப்ரபவ:—உத்பத்தி:; மத்தஏவ ஸ்திதிநாசக்ரியா பலோபபோக லக்ஷணம் விக்ரியாரூபம் ஸர்வம் ஜகத் ப்ரவர்த்ததே" இத்யாதி. மூலத்தில் நாராயணபதமோ விஷ்ணுபதமோ காணப்படாத விடங்களிலெல்லாம் நியமேந விஷ்ணு நாராயண வாஸுதேவ பதங்களை யிட்டே பாஷ்யமியற்றுகிருர் சங்கராசாரியர் என்பது வ்யபிசரியாத விஷயம். ... ... *

## 17. அற்புதமான சங்கராசார்ய வாக்கு

*அநந்யாச் சிந்தயந்தோ மாம* (9-22) என்றவிடத்தில் பரம்தேவம் நாராயணம்......பர்யுபாஸதே—தேஷாம் பரமார்த்த தர்சிநாம்* என்று பாஷ்யமிட்டிருக்கின்ற சங்கராசாரியர் பரதேவதையான நாராயணனை உபாஸிப்பவர்கள் யாவரோ அவர்களே உண்மையறிவாளிகள் என்று காட்டினுராகிருர். ஸ்ரீமஹா விஷ்ணுவுக்குப் போல ருத்ரனுக்கும் பாரம்யமுண்டுஎன்கிற வாதத்தை ஸஹிப்பவரல்லர் சங்கரர். ஸ்ரீமந் நாராயண வ்யதிரிக்த தேவதைகளை பஜிப்பவர்களைப் பற்றின ப்ரஸ்தாவம் கீதையில் இல்லாமற் போகவில்லை (7-20) *காமைஸ்தைஸ்தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே அந்யதேவதா: *என்று தொடங்கிச் சொல்லி வருகையில்* அந்தவத்து பலம் தேஷாம் தத்பவத்யல்பமேதஸாம் என்று தலைக்கட்டப்பட்டுள்ளது. இந்த ச்லோகத்தின் பாஷ்யத்தின் முடிவில் சங்கராசாரியர் எழுதியுள்ள வாக்கியம் பரம பக்தர்களை அவசமாகவே கண்ணீர் பெருக்க வைக்கின்றது. அவ்விடத்திலுள்ள வாக்கியமிதுகாணீர்—*ஏவம்ஸமாநேபி ஆயாஸே மாமேவ நப்ரபத்யந்தே அநந்தபலாய; அஹோ கலுகஷ்டதரம்

வர்த்ததே! இத்யநுக்ரோசம் தர்சயதி பகவான் * என்று. ஸ்ரீமந்நாராயணனை
பஜிப்பவர்களுக்கே அநந்தாக்ஷயபலன் பெறுவதற்கு அவகாசமுள்ளதென்று
அறிந்தவர்களுங்கூட க்ஷுத்ர பலன்களை விரும்பி தேவதாந்தரபஜனம் செய்
கிறார்களே! என்று பகவான் தானே கண்ணீர் விட்டழுது கதறுவதாகத் தாம்
ஸாக்ஷாத்கரித்தன்றோ சங்கராசாரியர் இதை யெழுதியுள்ளார்!... ... ...

## 18. இதுவும் அற்புதமான சங்கர வாக்கு

பகவத்கீதை ஆறுமத்யாயத்தில் முடிவான சுலோகமிது. யோகிநாமபி
ஸர்வேஷாம் மத்கதேநாந்தராத்மநா. ச்ரத்தாவாந்பஜதே யோமாம் ஸ மே
யுக்ததமோ மத: என்பது. இங்குசங்கரபாஷ்ய பங்க்தி வருமாறு- யோகிநாமே
ஸர்வேஷாம் ருத்ராதி த்யாநபராணாம். மத்கதேந-மயி வாஸுதேவே
ஸமாஹிதேந. அந்தராத்மநா- அந்த:கரணேந, ச்ரத்தாவாந்- ச்ரத்ததாநஸ்
ஸந்பஜதே -ஸேவதேயோ மாம், ஸமே மம,யுக்ததம:- அதிசயேநயுக்த:. மத:-
அபிப்ரேத: என்று.இதற்கு விவரணம் அநபேக்ஷிதம். பக்ஷபாத மற்றவர்கள்.
நற்றெளிவு பெறுவர்கள். ... ... ... ...

## 19. சாங்கரஸஹஸ்ரநாம பாஷ்ய விசேஷ விவரணம்

ஆதி சங்கராசார்யர் ஸஹஸ்ர நாம பாஷ்யத்திலும் பல பல இதிஹா
ஸங்களையெடுத்துக்காட்டி நாராயண பாரம்யத்தைத் திடப்படுத்தியுள்ளார்
விஷ்ணுவின் தாழ்வையோ. தேவதாந்தரத்தின் உயர்வையோ ஓரிடத்திலும்
அவர் காட்டினதில்லை. கேசவநாம பாஷ்யத்தில் கோப்ரஹ்மே திஸமாக்யாத
ஈசோஹம்ஸர்வதேஹிநாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவ
நாமவாந் என்றுசொல்லிக் கொண்டே சிவபெருமான் இந்த கேசவநாமத்தை
ஸமர்ப்பித்ததாக ஹரிவம்சத்தில் சொல்லப்பட்டுள்ள இதிஹாஸத்தை
உதாஹரித்துள்ளார் பகவத்பாதர். (அர்க்க:) என்னும் திருநாமத்தின்
பாஷ்யத்தில் ப்ரஹ்மாதிபி: பூஜ்யதமைரபி அர்ச்சநீயத்வாத் அர்க்க: என்று
விவரணம் காட்டினர். இங்குஆதி சப்தத்தால் முந்துற முன்னம் க்ரஹிக்கக்
கூடியவர் பார்வதீபதியல்லவோ?ஏன்? ஸப்ரஹ்மா ஸசிவ; என்றோதுகிற வேத
புருஷன் பிரமனுக்கடுத்தபடி சிவபிரானைச் சொல்லி வைத்திருப்பது பிரஸித்
தமன்றோ?[அமிதாசந:]என்னும்திருநாமத்தின்பாஷ்யத்திலும்''ஸம்ஹாரஸமயே
விச்வமச்நாதீதி அமிதாசந:,, என்றுவிவரித்தார் பகவத்பாதர். சிவபெருமான்
விச்வபஹிர்ப்பூதனல்லனே' நளிர்மதிச்சடையனும் நான்முமக் கடவுளும்
என்சிற திருவாசிரியப் பாசுரமும் இங்கு நினைக்கத் தக்கது. அத்தாசரா
சரக்ரஹணாத் என்கிற ஸூத்திரத்தில் க்ருத்ஸ்நமான சராசரத்தையும் உண்ட
வனென்று நிர்ணயிக்கப்பட்ட நாராயணன் சிவபெருமானை விட்டிட்டானென்ன
ப்ரஸத்தியில்லையே. உட்கொள்ளப்பட்டவர்களில் சிவபெருமானே முதல்வ
னென்பது பகவத்பாத ஸித்தாந்தம். ... ... ...



## 20. பகவத்விஷயரஸாநுபவங்கள்

நாம் அநுபவிக்கும் இதிஹாஸ புராண நூல்களும் மற்றுமுள்ள அத்யாத்ம
சாஸ்த்ரங்களுமெல்லாம் எம்பெருமானைப் பற்றியவையே யாதலால் அவற்
றையும் பகவத் விஷயமென்னத் தட்டில்லை; ஆனாலும் பகவத்விஷயமென்ற
வ்யபதேசம் திருவாய்மொழி வியாக்கியான மொன்றுக்கே நெடுநாளாக
வழங்கி வருகிறது. திருவாய்மொழி காலக்ஷேபத்தையே எங்கும் பகவத்விஷய
காலக்ஷேபமென்கிறோம். காஞ்சீபுரத்திற்குப் பெருமாள்கோயில் என்று அநா
திகாலமாக வ்யவஹாரமுள்ளது; இதைக் கேட்பவர்கள் சிலர் ''மற்றவை
பெருமாள் கோயிலன்றோ? பிள்ளையார் கோவிலா?'' என்கிறார்கள். அது
போலவே''மற்றவை பகவத் விஷயமல்லவா?'' என்றும் சிலர் கேட்பதுண்டு.
ஆரைக்கேட்பது? பூருவாசாரியர்கள் காலந்தொட்டு இப்படியே வ்யபதேசம்
நிகழ்ந்துவாரா நின்றது. உண்மையில், திருவாய்மொழியைக் கொண்டு
அநுபவிப்பதுதான் பகவத் விஷயாநுபவமாகும்.*நமாம்யஹம் த்ராவிடவேத
ஸாகரம் *என்றபடி திருவாய்மொழி ஒரு கடல். *ஜீயாத் பராங்குசபயோதி:*
என்ற ஆழ்வான் ஸூக்திப்படி திருவாய்மொழியையருளிச்செய்தநம்மாழ்
வாரும் ஒரு கடல். திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யனான எம்பெருமானோ
*பெரும்புறக்கடல். திருவாய்மொழிக்கு வியாக்கியானமான ஈடு முப்பத்தாறு
யிரமோ *அப்ரமேயமஹோததி. இங்ஙனே ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வர்க்க
மெல்லாம் கடலாகவேகாண்கிறது. ஸாரமாகச் சில விஷயங்கள் கேளிர்.

## 21. வடமொழி வேதத்திற்கொரு நான்முகன்: தென்மொழி வேதத்திற்கொரு நான்முகன்—

வடமொழி வேதமானது எப்படி அவதரித்ததென்று பார்க்கில் *அநாதி
நிதநா ஹ்யேஷா வாக் உத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா* என்கிறபடியே நான்
முகக்கடவுள் மூலமாய் அவதரித்ததாகத் தெரியவருகிறது *யோ ப்ரஹ்மாணம்
விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை* என்கிற உப
நிஷத்தும் எம்பெருமானிடத்தில் முதன் முதலாக நான்முகன் உபதேசம் பெற்ற
தாகத் தெரிவிக்கின்றது. பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில்
*ஸுப்தோத்புத்த விரிஞ்சஸூர்வஜநதாம் அத்யாப்ய* என்று நான்முகனையே
முந்தின அத்யேதாவாகத் தெரிவித்தருளினர். ஆகவே வடமொழிவேதத்திற்கு
ப்ரதமப்ரவர்த்தகன் நான்முகனைப்போலே தென்மொழி வேதமாகியத்ரமிடோ
பநிஷத்துக்கும் ஒரு நான்முகனே ப்ரதம ப்ரவர்த்தகனாகவுள்ளான். எங்ஙனே
யென்னில்; ஒரு பரமபக்தர் ''சதுர்முக ஸமாக்யாபி சடகோபமுநௌ ஸ்திதா,
ஸ்வவாசா மாத்ரு துஹித்ரு ஸகீவாசா ச வர்ணநாத்.'' என்று சொல்லி வைத்
தார். இதன் பொருளாவது, ஆழ்வார் நான்கு முகங்களாலே பேசியுள்ளபடி
யைப்பார்க்கிறோம். நான்கு முகங்கள் எவை என்னில்; [ஸ்வவாசா] ஆழ்வார்

தாமான தன்மை குலையாமல் குருகூர்ச் சடகோபனுகவேயிருந்து உயர்வற வுயர்நலம் வீடுமின்* முற்றவும்* பத்துடையடியவர்* முதலான பதிகங்கள் (73) பேசியிருப்பதனுல். [மாத்ருவாசா] *ஆடியாடியகங்கரைந்து *பாலனு யேழுலகுண்டு * *மண்ணையிருந்துதுழாவி *முதலான ஏழு பதிகங்கள் தாய் வாக்காகப் பேசியிருப்பதனுலும். [துஹித்ருவாசா] *அஞ்சிறைய மடநாராய்* வாயுந்திரையுகளும்*முதலான பதினேழு பதிகங்கள் மகள் பேச்சாகப் பேசியிருப்பதனுலும். [ஸகீவாசா] தீர்ப்பாரையாமினி* *துவளில் மாமணி மாடம் *கருமாணிக்கமலை *என்கிற மூன்று பதிகங்கள் தோழி பேச்சாகப். பேசியிருப்பதனுலும் ஆழ்வார்க்கு நான்கு முகங்கள் தேறினதாகத் தெளிக ஆசார்யஹ்ருதயத்தில் ''ஸகி வெறிவிலக்கி'' இத்யாதி சூர்ணை காண்க.

## 22. ஆழ்வார்க்குண்டாகும் பெண்பாவனையின் தத்துவம்—

நூறுபதிகங்கள் கொண்ட திருவாய்மொழியாயிரத்தில் எழுபத்து மூன்று பதிகங்கள் தம்முடைய திருவாக்காலே (ஆண்மை குன்ருமல்) பேசினவை; மிகுந்த இருபத்தேழு பதிகங்களில் பதினேழு பதிகங்கள் தலைமகள் பேச்சாலே பேசினவை; ஏழுபதிகங்கள் தாய் பேச்சாலே பேசினவை. மூன்று பதிகங்கள் தோழிபேச்சாலே பேசினவையென்று கீழே தெரிவித்தோம். தலைமகளென்பது யாரை? தாயாரென்பது யாரை? தோழியென்பது யாரை? என்று தெரிந்து கொள்ள வேண்டும். இதை மிகவிளக்கமாக ஈண்டு நிரூபிக்கிறேன். நம்மாழ்வார் தம்வாயாலும் வேற்று வாயாலும் பேசுகிருரென்பதை முன்னம் குறிக்கொள்ள வேணும். தம் திருவாக்காலே பேசுவதென்பதில் விளக்கம் வேண்டியதில்லை அஃது இயற்கையான பேச்சென்பது யாவருமறிந்தது. வேற்றுவாயாலே சொல்லுவதாவது பெண்மை யெய்திப் பேசுவதாம் ஆழ்வார் ஆடவர்களில் தலைவராக அவதரித்திருக்கச் செய்தேயும் ''பாஞ்சால்யா: பத்மபத்ராக்ஷயா: ஸ்நாயந்த்யா: ஜகனம் கனம், யாஸ் ஸ்த்ரியோத்ருஷ்டவத்யஸ் தா:பும்பாவம் மநஸா யயு:'' என்று மஹாபாரதத்தில் சொன்ன கட்டளையிலே (அதாவது. விராடநகரத்தில் பாண்டவர்கள் அஜ்ஞாதவாஸம் பண்ணினபோது நீராடா நின்ற த்ரௌபதியின் ஒப்புயர்வற்ற ஸௌந்தர்ய லாவண்யாதி அதிசயங்களைக் கண்ட பெண்டுகள் 'ஐயோ! நாம் ஆண்களாகப் பிறவாமற்போனேமே' என்று நினைத்து மாநஸிகமாகப் புருஷபாவனையையெய்தினராம். ஈடுமுப்பத்தாருயிரப் படியில் ஸாதித்தவிதனை வேதாந்த வாசிரியரும் *பாஞ்சாலீ காத்ர சோபாஹ்ருத நயந வதூவர்க்க பும்பாவ நீத்யா என்கிற சுலோகத்தினுல் இட்டு வைத்தார். ஆகவே புமானுன ஆழ்வார்க்குப் பெண்பாவனை ஏற்கும். ...

## 23 புமான்கள் பெண்மைகாட்டுவதன் உட்கருத்து—

நம் பூருவாசாரியர்கள் மிகப் பொருத்தமாக இவ்விஷயத்தில் ஒரு காரிகை இட்டருளியுள்ளார்கள். அது திருநெடுந்தாண்டக வியாக்கியானத்தில்



கையாளப்பட்டுள்ளது. (அதாவது) *ஸ்வாமித்வ ஆத்மத்வ சேஷித்வ பும்ஸ்த்வாத்யா: ஸ்வாமிநோ குணா:, ஸ்வேப்யோ தாஸத்வ தேஹத்வ சேஷத்வ ஸ்த்ரீத்வ தாயிந:'' என்பதாம். இதன் பொருளாவது—எம்பெருமான் ஸர்வஸ்வாமியென்றும், ஸர்வபூதாந்தராத்மாவெனென்றும் ஸர்வசேஷியென்றும் புருஷோத்தம னென்றும் சொல்லப்படுகிருன். அவன் ஸ்வாமியாயிருப்பதற்குச் சேர நாம் தாஸர்களாகின்ருேம். அவன்சேஷியாயிருப்பதற்குச் சேர நாம் சேஷ பூதர்களாகின்ருேம். அவன் ஆத்மாவாயிருப்பதற்குச் சேர நாம் சரீரபூதர்களாகின்ருேம். அவன் புருஷோத்தமனுயிருக்கும் தன்மையானது நமக்குப் பெண்மையை விளைவிக்கின்றது என்கை. அவனும் ஸ்வாமியாய் நாமும் ஸ்வாமியாயிருக்கமுடியுமோ? அவனும் அந்தராத்மாவாய் நாமும் அந்தராத்மாவாயிருக்கமுடியுமோ? அவனும் சேஷியாய் நாமும் சேஷியாயிருக்க முடியுமோ? சேஷித்வமாவது கைங்கரியம் கொள்ளுகை; சேஷத்வதமாவது தொண்டு செய்கை. இவ்விரண்டும் ஏகாச்ரயத்தில் இராதன்ருே. அப்படியே அவனும் புருஷனுய் நாமும் புருஷராயிருக்க முடியுமோ? எங்ஙனே முடியும்? ஆகவே தாஸத்வ தேஹத்வ சேஷத்வங்கள் போலே ஸ்த்ரீத்வமும் சேதனர்க்கு இயற்கையானதேயென்று தேறிற்று. புமானைப் புமான்களே அனுபவிப்பதென்பதில் ரஸமில்லையே. ஆண்களாய்ப் பிறந்தவர்களுக்கு சரீர தர்மமாகப் பெண்மை ஸம்பவிப்பதன்ருகிலும் பாவநாவிசேஷ அபரபர்யாயமான ஸ்த்ரீத்வம் ஸம்பவிக்கக் குறையில்லை. அத்யந்த பாரதந்த்ரியமன்ருே ஸ்த்ரீ தர்மம். அப்படிப்பட்ட பாரதந்த்ரியத்தைப் பிரகாசப் படுத்துவதுதான் பெண்ணுகை. ... ... ... ...

## 24 ஈச்வரசேதநர்களுக்குப் பதிபத்நீபாவம் திருமந்த்ரஸித்தம்

எம்பெருமானுக்கும் நமக்கும் நவவித ஸம்பந்தம் திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தில் தேறுவதாக ஆசாரியர்கள் நிரூபிக்கிருர்கள். அவற்றுள் பதிபத்நீ பாவ ஸம்பந்தமென்பது நான்காவதாகும்; திருமந்திரத்தில் இது ப்ரணவத்தில் இடைச்சொல்லான உகாரத்தினுல்தேறுகின்றது. உகாரம்அவதாரணர்த்தமாய் சேதனன் எம்பெருமானொருவனுக்கே சேஷப்பட்டவனென்று காட்டி [அநந்யார்ஹத்வத்தைக்காட்டி] ''கண்டாரிகழ்வனவே காதலன்தான் செய்திடினும் கொண்டானையல்லால் அறியாக்குலமகள்போல்'' என்ற குலசேகராழ்வார் ஸ்ரீஸூக்தியின்படி. பதிபத்நீபாவ ஸம்பந்தத்தை(அல்லது, பர்த்ரு பார்யா பாவரூப ஸம்பந்தத்தை)க் காட்டிநிற்கும். ஆகவேஜீவாத்மாவின் ஸத்ரீத்வம் ஸகலசாஸ்த்ர ஸாரமான திருமந்திரத்தில்ஸித்தமென்றதாயிற்று. எம்பெருமானுடைய அந்தரங்க மஹிஷிகளான ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகளின் ஸாதர்மியத்தையே ஆழ்வார் அடைகின்ருர் ஆனதுபற்றியே திருவாய்மொழியில் (6-5-10) *பின்னைகொல் ! நிலமாமகள் கொல் திருமகள் கொல்

பிறந்திட்டாள் * என்று தோழி பாசுரமுள்ளது பெரிய திருமொழியிலும் *காவியங்கண்ணி யெண்ணில் கடிமாமலர்ப்பாவையொப்பாள் * என்று தாய்ப்பாசுரமுள்ளது. இவற்றால் ஆழ்வார் எய்தும் பெண்மை ஸாமான்யமான ஸ்த்ரீத்வமன்று; தேவதேவதிவ்யமஹிஷீஸாதர்மியம் என்றதாயிற்று. இது மேலே ஜீவாத்ம பரமாத்ம போகக் கட்டுரையில் விரிவாக விளக்கப்படும்.

## 25. பக்தி நூல்களுக்குப் பெண்பேச்சு பொருந்தும்வகையும் மகள் தோழிதாய்பேச்சுக்களின் ஸ்வாபதேசமும்

தலைமகளென்பதும் நாயகி யென்பதும் பர்யாயம். தாயாருடைய த்ருஷ்டியாலே மகளாகிறாள். நாயகனுடைய த்ருஷ்டியாலே நாயகியாகிறாள். மகளுக்குத் தாயாரொருத்தி யிருப்பதும், நாளடைவில் தோழிமார் ஏற்படுவதும் ஸஹஜம் ஆகவே ஸ்த்ரீ பாவனையில் ஒருபோது தாய்பேச்சும் ஒருபோது மகள்பேச்சும், ஒருபோது தோழிபேச்சும் நிகழ்கின்றன. பக்தியே ச்ருங்கார வகையில் பரிணமிப்பதனால் இத்தகைய பேச்சுக்கள் பக்தி நூல்களுக்கு அவத்யமாகாது. ... ... ... ...

## 26. மாமுனிகளின் திவ்யவாக்கு

மணவாள மாமுனிகள் நூற்றந்தாதியில் (4) *அஞ்சிறைய மடநாராய்ப் பதிகத்திற்கு ஸாரமருளிச்செய்பவர் *அஞ்சிறைய புட்கள்தமை ஆழியானுக்கு நீர். என்செயலைச் சொல்லுமென விரந்து—விஞ்ச நலங்கியதும் மாறனிங்கே நாயகனைத் தேடி மலங்கியதும் பத்திவளம்'' என்று அருளிச்செய்தது காண்க. அதில், பத்திவளமென்றது உயிரானபேச்சு. இங்ஙனே தாய்பேச்சாகவும் தலைவிபேச்சாகவும் தோழிபேச்சாகவும் வெளிவருவதற்கு என்ன கருத்தென்பதை இனி விவரிக்கின்றேன்.

## 27. இடையில் சிறியதோர் விரோத பரிஹாரம்

பிள்ளை லோகாசாரியர் முமுக்ஷுப்படியில் த்வய ப்ரகரணத்தின் தொடக்கத்தில் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களை யருளிச் செய்யுமிடத்து ''பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும் பேற்றுக்கு த்வரிக்கையும்'' என்று இரண்டு அருளிச் செய்கிறார். பேறு தப்பாதென்று துணிந்திருக்கையாவது தம்மிடத்தில்உபாயாநுஷ்டானமொன்றுமில்லாமையையும் தாம்செய்த குற்றங்களின் மிகுதியையுங்கண்டு பேறு கிடைக்குமோ கிடைக்காதோவென்று தளும்பியிருக்கையின்றிக்கே பேறு தப்பாமல் ஸித்திக்குமென்று திடமான அத்யவஸாயத்தோடிருக்கை. பேற்றுக்கு த்வரிக்கையாவது இந்த



அத்யவஸாயங்கொண்டு பேறு ஸித்தித்தபோது ஸித்திக்கட்டும் என்றிருக்கையின்றிக்கே க்ரமப்ராப்தி பற்றாமல் பதறுகை. ஆக இவ்விரண்டும் ஏகாச்ரயத்தில்இருக்கப் பொருத்தமில்லை; திடமான அத்யவஸாயங்கொண்டிருந்தால் பதறுகை அப்ராப்தம்; பதறுவதானால் அத்யவஸாயத்திற்கு அர்த்தமில்லையாகும். பதறாமலிருப்பதற்கு உறுப்பான அத்யவஸாயம். பதற்றம் இரண்டும் அவர்ஜநீயமாயிருக்கையாலே தாய்பேச்சாலே அத்யவஸாயத்தை வெளியிடுவதும் மகள்பேச்சாலே பதற்றத்தை [பேற்றுக்கு த்வரிக்கையை] வெளியிடுவதுமாய்ச்செல்லுகின்றது. தாய்அத்யவஸாயநிஷ்டை; மகள் த்வராநிஷ்டை என்றதாயிற்று. ... ... ...

## 28 தோழி தாய் மகள்—பேச்சுக்களின் சுவையாராய்ச்சி—

திருவாய்மொழியில் (5-5) *எங்ஙனேயோவன்னைமீர்காளென்கிற பதிகத்தைக்கொண்டு தோழி தாய் மகள் பேச்சுக்களின் சுவைகளை ஆராய்வோம்! இதில் பாசுரந்தோறும் 'அன்னையரும்முனிதிர்''அன்னைகாணகொடாள் என்கிற வாக்கியம் தொடர்ந்து வருவதைக்காண்கிறோம். [முனிதலாவது சீறுதல்.காணகொடாளென்றது வெறுப்புக்கொள்ளுகிறாளென்றபடி.]இது மகள் பாசுரமான பதிகம். தாய்க்கு மகள்மேல் சீற்றமும் வெறுப்பும் மிகமிகவுண்டாகியிருப்பதாக இதனால் தெரியவருகிறது. இவையுண்டாகைக்குக் காரணமென்னவென்று பார்க்கவேணும். அது மகள் வாயினாலேயே ஸ்பஷ்டமாக வெளிவந்துள்ளது. எங்ஙனேயென்னில்; ''மேலும் வன்பழி நங்குடிக்கிவளென்று அன்னை காணகொடாள்'' ''நிறைந்த வன்பழி நங்குடிக்கிவளென்று அன்னைகாணகொடாள்,, ''கழியமிக்கதோர் காதலள் இவளென்று அன்னை காணகொடாள்,, என்றன்றோ வசனவ்யக்தியுள்ளது. இம்மகளால் ப்ரபந்நஸந்தானத்திற்குப் பெரும்பழி விளையுமென்றும் திடமான அத்யவஸாயங்கொண்டிருக்கையன்றிக்கே மேல்விழுந்துபதறுவதற்குறுப்பான எல்லை கடந்த அன்பையுடையவளாயிருக்கிறாளிவளென்றும் வாய்விட்டுச் சொல்லியேயன்றோ தாயானவள்மகளை க்ஷேபிக்கின்றாள் மகள்பதறுவது ப்ரபந்நஸந்தானத்திற்குப் பெரும்பழியென்று தாயார் முடிவுகட்டினதாக இங்கு ஸ்பஷ்டமாகிறது.ஆனால் மேலே (6-7.) *உண்ணுஞ்சோறு பருகுநீர்ப்பதிகத்திலே (பா.4) ''கொல்லையென்பர் கொலோ! குணம் மிக்கனளென்பர்கொலோ!' என்கிற பாசுரத்தை நோக்குமிடத்து இது நிர்த்தாரணம் பண்ணவொண்ணாத விஷயமென்று தாயார் கருதியிருப்பதாகத் தெரியவருகின்றது. இப்பாசுரத்தின் கருத்தாவது என் மகளுடைய நடவடிக்கையை உலகத்தார் வெறுப்பர்களோ? அன்றி உகப்பர்களோ? பேறு தப்பாதென்று துணிந்திருப்பதேகடமையென்று திண்ணிய அத்யவஸாயமுடையார் 'இவள் இங்ஙனே பதறுகையாவதென்?' என்று வெறுக்கக்கூடும்; 'பெறும்பேற்றின் கனமறிந்தால் அதற்குப்பதறாமலிருக்கமுடியுமோ?' என்றிருக்குமவர்கள் உகக்கக்கூடும்.

உலகத்தாருடைய நினைவை ஒருபடி நிர்ணயிக்க முடியாதாகையாலே, அவத்யம்சொல்லும்படியாகுமோ? அன்றி சிலாகிக்கும்படியாகுமோ? தெரியவில்லையேயென்று தாயார் தளிம்பி நிற்கும்படி இந்பாசுரத்தில் தெரியவருவதால் தாயின் கருத்தாலும் மகளுடைய பதற்றம் பரிபூர்ணமாகப்பழிக்கப்படுவதில்லையென்பது விளங்கும். ... ... ...

## 29. ஆழ்ந்து நோக்குமின்.

மேலேயெடுத்த *எங்ஙனேயோபதிகத்தில் தாய்மார் சீறுவதை மட்டும் சொல்லி நில்லாமல் அவர்களோடு தோழிமார்களையுஞ் சேர்த்து அவர்களும் சீறுவதாகச் சொல்லியிருக்கிறது (9) *முன்னின்றுயென்று தோழிமார்களும் அன்னையரும் முனிதிர்* என்றன்றோ பாசுரமுள்ளது. அன்றியும், மேலே (5-9) *மானேய்நோக்குப்பதிகத்தில் (2.) "என்றுகொல் தோழிமீர்காள்! எம்மை நீர் நலிந்தென் செய்தீரோ?" என்று தோழி தாய்மாரோடு சேர்ந்து நலியுமளவேயன்றிக்கே தனிப்படவும் நலிவதாகக் காட்டப்படுகிறதே, இது பொருந்துமோ? தலைவிக்கு அந்தரங்கமாயிருப்பவளன்றோ தோழி. அவளும் நலிவதாகச் சொல்லத் தகுமோ வென்கிற சங்கை வலிதாகத் தோன்றும். இதற்குக் கேண்மின். தோழியானவள் தலைவியிடத்தில்மட்டும் அன்புகொண்டு தாயாரோடு உடன்பட்டிருந்திலளாகில் அவள் தலைவியோடு கூடி வாழவே முடியாது "பூனைக்கும் தோழன், பாலுக்குங் காவல்" என்கிற விநோதோக்திரீதியிலே தாய்பக்ஷத்திலிருப்பதாகவும் காட்டிக்கொள்ள வேண்டும். தோழி தாய் மகளாகிய மூவருடையவும் பாசுரங்களை ஆங்காங்கு உற்று நோக்கினால் இன்சுவைமிக்க சில விசேஷங்கள் புலப்படும். சிறிது விவரிக்கிறேன். "என் பெண்மகளையெள்கித் தோழிமார் பலர் கொண்டுபோய்ச் செய்த சூழ்ச்சியை யார்க்குரைக்கேன்" என்கிற தாய்பாசுரத்தை நோக்குமிடத்து தாயார் தோழிமார்மேல் பழியிடுவதாக விளங்கும். என் மகளுக்கு பகவத்விஷயத்திலேயுண்டான அவகாஹனமாகிற அனர்த்தம் தோழிமார் பலராலே வந்ததையோ! என்றன்றோ இப்பாசுரத்தில் சொல்லிற்று தோழி பாசுரமோ இதற்கு எதிராகவுள்ளது; தோழி சொல்லுவதாவது, "குமுறுமோசை விழவொலித் தொலைவில்லிமங்கலங் கொண்டுபுக்கு, அமுதமென்மொழியாளை நீர் உமக்காசையின்றியகற்றினீர்" என்றும், "கரைகொள் பைம்பொழில்தண்பணைத்துலைவில்லிமங்கலம் கொண்டுபுக்கு, உரைகொளின்மொழியாளை நீர் உமக்காசையின்றி யகற்றினீர்" என்றும் இங்ஙனேயுள்ளது. உத்ஸவாதி காலங்களில் கோவிலுக்குச் செல்லுகிற தாய்மார்கள் தாங்கள் தனியே போகாமல் இப்பெண்பிள்ளையையிடுப்பிலே கொண்டுபோய்'கண்ணழகைப்பார், மூக்கழகைப்பார் ஆடையாபரணங்களின் அழகைப்பார்' என்று சாட்டினபடியாலன்றோ. இவ்வனர்த்தம் விளைந்தது! என்று தோழி தாய்மார்மீது பழியிடுவதையன்றோ இங்குக் காணநின்றோம். இப்படி தாய்மாரும் தோழிமாரும்



பரஸ்பரம் பழியிடுவதோடல்லாமல் இப்பழிஇருவர்க்கு முள்ளதேயென்று தலைவி ஸ்தாபிப்பதையும் காண்கிறோம். எங்ஙனேயென்னில்; தலைவி பாசுரத்தில் "இணைக்கியெம்மை யெந்தோழிமார் விளையாடப் போதுமினென்னப் போந்தோமை" என்றுள்ளது. கண்ணே! நான் உன்னுடைய வலையில் அகப்பட்டிருக்கவேமாட்டேன்; தோழிமாரன்றோ இணங்கவைத்தார்கள்!" என்று இதில் சொன்னபடியால் தோழியர்மேல் பழி ஸ்தாபிக்கப்பட்டது. தலைவி பாசுரத்திலேயே "எங்ஙனேயோவன்னைமீர்காள்! என்னை முனிவதுநீர்!" என்று முன்னம் காட்டினதை யுற்றுநோக்குமளவில், தோழி தாய்மீது இட்ட பழி தலைவியால் ஸ்தாபிக்கப்பட்டமை தெரியும் அன்னைமீர்காள்! நீர் என்னை முனிவது எங்ஙனே? = நீங்களே ஆதியில் என்னை பகவத்விஷயத்திலீடுபடுத்திவிட்டு இப்போது சீறுவது நியாயமா? என்பது இவ்வடிக்கு ஆழ்ந்த கருத்து. ஆக தலைவி தோழிமீதும் தாய்மீதும் பழியை ஸ்தாபித்தபடி விளக்கப்பட்டதாயிற்று. ... ... ...

## 30. அந்யாபதேசப் பாசுரங்களின் அந்தரங்கமான ஆழ்பொருள்

தோழியானவள் தாய்மாரோடே கூடிநின்று தலைவியைக் கண்டிப்பதாகக் காட்டுவதும், தாய்மார்க்கு நன்மை சொல்லுவது போலவிருந்து தலைவிக்கு அந்தரங்கமாக நன்மை செய்வதும் பாசுரங்களில் காண்பதுண்டு. *எங்ஙனேயோ பதிகத்தில் "முன்னின்றுயென்று தோழிமார்களு மன்னையரும் முனிதிர்" என்கிற தலைவிபாசுரத்தினால் தோழி தாயோடு கூடித் தலைவியைக் கண்டிப்பது கண்டோம். 'துவளில் மாமணி மாடமோங்கு துலைவில்லி மங்கலம் தொழுமிவளை, நீரினி யன்னைமீர்! உமக்காசையில்லைவிடுமினோ' என்கிற தோழி பாசுரத்தை மேலெழ நோக்குமிடத்து தாய்மார்களே! அடங்காப்பிடாரியான இவளைவிட்டுத் தொலையுங்கள்; இவள் எக்கேடாவது கெடட்டும், இவள் நம்வழி வாராள்; இவளோடு உறவையறுத்துக் கொள்வதே நமக்கு நலம்' என்று தாய்மார்க்கு நன்மை சொல்லுவதுபோல் காணப்படும். ஆழ்ந்து நோக்கின் தலைவிக்குத் துணை செய்வதே இதன் கருத்தாகும். தாய்மார் க்ஷேபித்து மகளுடைய செய்கைகளைத் தடைசெய்ய இடமில்லாதபடி பண்ணுவதன்றோ இங்குப் பலிப்பது. இதுதலைவிக்குச் செய்த நன்மையேயாம் தலைவியானவள் தாய்மார் தோழிமாராகிற இரண்டு தலையையும் உதறிக் கைவிடுவதுமுண்டு; அது எங்கே கண்டதென்னில் *ஏலமலர்க்குழன்னைமீர்காள்! என்னுடைத் தோழியர்காள்!... உங்களோடெங்களிடையில்லையே* என்கிற தலைவிபாசுரத்தில் காணலாம். தலைவியினிடத்தில் தோழியர்க்கும் தாய்மார்க்கும் மஹத்தான கௌரவ ப்ரதிபத்தியுண்டென்பதையும் இவ்விருவர் பாசுரங்களிலும் நன்கு காண்கிறோம். *இவளை நீரினியன்னைமீர் உமக்காசையில்லை விடுமினோ* என்று சொன்ன தோழிதானே* பின்னைகொல் நிலமா

மகள் கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள்!'' என்று கொண்டாடினமை காண்கிறோம். ,,என்னெஞ்சினால் நோக்கிக் காணீர் என்னை முனியாதே' என்று மகள் சொல்லும்படியாகச் சீற்றமும் வெறுப்புங் கொண்டிருந்த தாய் தானே *உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனென்றே யிருப்பளென்மகளென்றும், *ஊரும் நாடும் உலகமும் தன்னைப் போல் அவனுடையபேரும் தார்களுமே பிதற்றும்படி உலகத்தையெல்லாம் திருத்துமவளென்மகளென்றும் மற்றும் பலபடியாகவும் கொண்டாடிக் கூறு கின்றமை காணாநின்றோம் ஆக, மகள் தோழி தாய்களுக்குப் பரஸ்பரம் ஐகமத்யக் குறைவுபோல் மேலெழக் காண்பதும், ஆழ்ந்தநோக்கில் மூவர்க்கு முண்டான அந்தரங்கவுகப்பு காண்பதும் ப்ரமாணரூடமாக நிரூபிக்கப்பட்ட தாயிற்று. ... ... ...

## 31 லோகவ்யவஹாரசிக்ஷணம்

லோகவ்யவஹார மென்றும் உலகநீதி யென்றும் பல வழக்கச் சொற்களுண்டு அவை பெரும்பாலும் சிதைந்தும் உண்மைப் பொருள் விளங்கப்பெறாமலுமிருக்கின்றன. இப்போது இரண்டு மூன்று வார்த்தைகளைப் பற்றின தத்துவமுணர்த்துகிறோம். (1)இலவசமாகக் கொடுத்தான் (2) மடிசார் பாய்கிறது. (3) அதி ஸர்வத்ர வர்ஜயேத். என்கிற மூன்றைப்பற்றி. இரண்டு—தமிழ் வியவஹாரங்கள்; மூன்றாவது ஸம்ஸ்க்ருத வ்யவஹாரம்.

ஒருவன் ஒன்றை விலையில்லாமல் இனாமாகக் கொடுத்தால் பெற்றுக் கொண்டவன், இது எனக்கு இலவசமாகக் கிடைத்தது' என்கிறான் இனாமாகக் கிடைத்ததென்னும் பொருளில் இலவசம் என்கிற சொல் உண்டோவென்று கேட்டால் இங்ஙனே உலக வழக்கு இருப்பதனாலே உண்டென்று கொள்ள வேணுமென்கிறார்கள். உண்மையில் இலவசமென்பது சொல்வடிவமன்று; இலைவச மென்பதேயாம் ஒருவனை யொருவன் ஐந்துரூபாய்கடன்கொடுக்குமாறு வேட்டுக்கொண்டிருந்தான்; இவனுக்குக் கடன் கொடுத்தால் பணம் திரும்பி வராதென்றும், ஏதோ யத்கிஞ்சித் இனாமாகக் கொடுத்தனுப்பி விடுவோமென்றும் நினைத்த அவன் இரண்டு ரூபாயை வெற்றிலையில் வைத்து,, இதம் தே தாம்பூலம்'' என்று கொடுத்தான். அதற்கு அவன் ,நான் கடனாகத்தானே கேட்டேன், வெற்றிலையில் வைத்துக் கொடுப்பதேன்?' என்றான். அதற்கு இவன் , நான்கடன் கொடுப்பதில்லை; ஏதா இலவசமாகக் கிடைப்பதைப் பெற்றுக் கொண்டு மகிழ்ந்து செல், என்றான். அவனும் அதைப் பெற்றுக் கொண்டு ,இரண்டுரூபாய் எனக்கு இலைவசமாகக் கிடைத்தது, என்று நண்



பர்களிடம் சொல்லிக் கொண்டு களித்திருந்தான். இவ்விதமாகவுண்டான வ்யவஹாரமிது.உலகில் வெற்றிலையில் வைத்துக் கொடுப்பது கடனன்று இனாம் என்பது யாவருமறிந்ததாகும் ஆகவே இலைவச மென்றது வெற்றிலை வழியாக என்றதாயிற்று. வெறுமனே இலையென்றால் வெற்றிலையைக் காட்டுமோவென்று சங்கிக்க வேண்டா; பரிபாஷையில்வெற்றிலைபாக்கை அடைக்காய்என்கிறோம், ''கையடைக்காயும்'' ''அடைக்காய் திருத்தி நான் வைத்தேன்'' என்பன பெரியாழ்வார் பிரயோகங்கள்; அடை என்னுஞ் சொல் பொதுவாக இலைக்குப் பெயர்; காய் என்பதும் பொதுவாகக் காய்களுக்குப் பெயர். ஆனாலும் மரபின் வகையால் அடையென்பது வெற்றிலையையும், காய் என்பது பாக்கையும் சொல்லுவது நிர்விவாதம். இங்ஙனமே இலைவசமென்ற விடத்தில் இலையென் கிற பொதுச்சொல் விசேஷித்து வெற்றிலையைக் குறிக்கத்தட்டில்லை. 2. (மடிஸார்பாய்கிறது) என்பது அர்த்தமற்ற தவறான சொல். தீர்த்தம் சாற்றமுது முதலானவை ஸாதிக்கும்போது ஒரே தாரையாக விழாமல் வேறு வேறு தாரைகளாகவும் பெருகினால் அப்போது மடிஸார் பாய்வதாகச் சொல்லி வருகின்றனர். இங்கு உண்மையான சொல்வடிவம் மறுதாரை பாய்கிறதுஎன்பதேயாம்.3.(அதிஸர்வத்ர வர்ஜயேத்)*வடமொழியில்இதுவொருதவறான வியவஹாரம். அதிக கோபம் கூடாது. அதிக நிந்தை கூடாது, அதிகஸ்தோத்ரம், அதிக ஹிம்ஸை கூடாது,அதிகபோஜனம் கூடாது;...எதுவும் அளவுபட்டிருக்க வேணுமேயொழிய அதியாகக் கூடாது என்கிற கருத்தில் (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) என்று வழங்கிவருகிறார்கள். இப்படியே சில புத்தகங்களிலுமிருக்கிறதாம். சிலர் இதை ஸமர்த்திக்க முன் வருகிறார்கள். அதி என்பது வேறொரு சொல்லோடே சேர்ந்து பொருள் தரவல்லதே யொழிய தனிப்பட நின்று ஒரு பொருளையும் தாராது. அதி யோக்ய:, அதிபோக்யம், அதிலங்கநம், அதிக்ரமணம். அதிப்ரஸங்கம், அத்யேதி, அதிக்ராமதி...என்றிப்படி வேறொரு சொல்லோடே சேர்ந்தே அதி யென்பது ப்ரயோகம் பெற்று வருகின்றது. அது தனிப்பட நின்று ஒரு பொருளைத் தாராது. அப்படி தருவதை எங்கும் நாம் காண்கின்றிலோம். ஆகவே (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) என்று ஸம்ஸ்க்ருதஜ்ஞர் வாயில் வரத்தகாது. மணிப்ரவாள ச்லோகமென்று கொண்டால் கொள்ளலாம். அவதாரணத்தை விடவேண்டியது, ஸமுச்சயத்தை விட வேண்டியது என்று சொல்ல நினைத்தவர்கள் ''ஏவவர்ஜயேத்'' ''சவர்ஜயேத்'' என்று சொல்வதை எங்கும் காண்கின்றிலோம். ஆகவே (அதி ஸர்வத்ர வர்ஜயேத்) என்பது அபப்ரயோகமேயாகும். இதை ஸமர்த்திக்க முயல்வதும் அநபிஜ்ஞக்ருத்யமாகும்.

*அதிஸ் ஸர்வத்ர வர்ஜித:*என்பதே விவேகிகளான வித்வான்கள் வழங்குவதும் பொருந்தியதுமாகும். அதி: என்பது சப்த பரமா? அர்த்த பரமா? என்று விசாரம் வரும். முதலில் சப்தபரமாகி, பிறகு அர்த்த பரமுமாகிறது: ப்ரஹ்மஸூத்ரத்தில் *ஈக்ஷதேர் நாசப்தம் *ஈக்ஷதிகர்ம வ்யபதேசாத் ஸ:*

என்கிற இரண்டு ஸூத்ரங்களை யெடுத்துக் கொள்வோம். ஈக்ஷதே: என்ற விடத்தில் ஈக்ஷிதா துவும் அர்த்தம். அந்த தாதுவின் அர்த்தமான ஈக்ஷணமும் அர்த்தம் வியாக்கியானங்களை விமர்சித்தால் இப்படியே தான் காண்கிறது. ஈகர்ம என்றது ஈக்ஷணத்திற்குக் கர்மபூதம் என்று பொருள்பட்டு நிற்கும்.

## 32. திருவாய் மொழியையடியொற்றி உடையவர் பணித்தது

ஸ்வாமி எம்பெருமானுர் அருளிச்செய்த திவ்ய க்ரந்தங்கள் ஒன்பது. **கத்யத்ரயம்** என வழங்கப்பட்டு வருகின்ற க்ரந்தம் ஒரேக்ரந்தமன்று. மூன்று கத்யங்களும் தனித் தனியே மூன்று க்ரந்தங்கள் 'கத்யத்ரயம்' என்கிற பெயரானது ஸ்வாமி யிட்டதன்று; பின்புள்ளார் மூன்று க்ரந்தங்களையும் ஒன்று சேர்த்து ஒரே பெயராக கத்யத்ரயமென்றிட்டு வழங்கிவருகின்றனர். சரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம் என்ற திருநாமங்களுக்கேற்ப மூன்று கத்யங்களும் தனித்தனி க்ரந்தங்கள். இவ்விஷயம் வேதாந்த தேசிகனருளிச்செய்த குருபரம்பராஸாரமென்னும் ரஹஸ்யத்தில் ஸுவ்யக்தம். இவற்றுள் ஸ்ரீரங்ககத்யத்தின் ஆரம்பம் *ஸ்வாதீந த்ரிவித சேதநாசேதந ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திபேதம்* என்பது·சேதநர்களினுடையவும் அசேதநங்களினுடையவும் ஸ்வரூபமென்ன, ரக்ஷணமென்ன, ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளென்ன இவைதன்னதீனமாயிருக்கப்பெற்றவன் எம்பெருமான்—என்பது மேலெடுத்த ஸ்ரீஸூக்தியின் கருத்து. இவ்விஷயத்தை ஸ்வாமி எந்த ப்ரமாணங்கொண்டு அருளிச்செய்தார்? என்று ஆராய்ச்சி செய்ததில் அடியேனுடைய புத்திக்கு எட்டியதை இங்கு விவரிக்கின்றேன். ஸ்வாமி யருளிச் செய்யும் ஸ்ரீஸூக்திகள் பெரும்பாலும் திருவாய்மொழியை யநுஸரித்தே யிருப்பவை யென்பது பெரியோர்களின் கொள்கை. இதை அடியேனுடைய விமர்சனம் நன்கு ஸ்தாபித்திருக்கின்றது. ப்ரக்ருத விஷயத்தைப்பற்றி விமர்சித்ததில், திருவாய்மொழியின் முதற்பதிகத்தில் 4, 5, 6 ஆம் பாட்டுக்களில் முறையே நம்மாழ்வாரருளிச் செய்த அர்த்தத்தையே திரட்டி *ஸ்வாதீநேத்யாதி ஸ்ரீஸூக்தியை ஸ்வாமி யருளிச் செய்தாரென்று அறுதியிடப்படுகின்றது. *நாமவனிவனுவன்* என்கிற நாலாம் பாட்டின் கருத்தாவது—நாம் முதலான தன்மைப்பொருள்களும், அவன் இவன் உவன் என்கிற ஆண்பால் சுட்டுப் பொருள்களும், அவள் இவள் உவள் என்னும் பெண்பால் சுட்டுப்பொருள்களும், எவள் என்கிற பெண்பால் விஞபொருளும், அவர் இவர் உவர் என்னும் பலர்பால் சுட்டுப்பொருள்களும், அது இது உது என்னும் ஒன்றன்பால் சுட்டுப்பொருள்களும், எது என்னும் ஒன்றன்பால் விஞப்பொருளும், நசிக்குந்தன்மையுள்ள பொருள்களும், இவை உவை அவை என்னும் பலவின்பால் சுட்டுப்பொருள்களும், நல்ல வஸ்துக்களும் கெட்ட வஸ்துக்களும் எதிர்காலப் பொருள்களும் இறந்த காலப் பொருள்களும் ஆகின்ற எல்லாப் பொருள்களும் அந்த ஸர்வேச்வரனேயாம் (அதாவது) ஸர்வேச்வரனிட்ட வழக்கேயாம் என்பதாம். உலகத்தி



லுள்ள சேதநா சேதநப் பொருள்களெல்லாம் இந்தச் சிறிய பாட்டில் உக்திவைசித்திரியாலே அடக்கப்பட்டு, இவைகளெல்லாவற்றினுடையவும் ஸ்வரூபம் பகவானுடைய அதீனம் என்று தெரிவிக்கப்பட்டபடியால் இது தன்னையே "ஸ்வாதீநத்ரிவித சேதநாசேதந ஸ்வரூப" என்ருர் ஸ்வாமி.

## 33 ஸ்வாதீநஸ்திதிமத்த்வம்

இதற்கடுத்த ஐந்தாவது பாட்டு *அவரவர் தமதமது* என்பது இதன் கருத்தாவது, உலகில் பலவகைபட்ட அதிகாரிகள் இருக்கின்ருர்களே; அவரவர்கள் தம்தமது உணர்ச்சிக்கு எட்டியபடியே ஒரோ தெய்வங்களை ஸ்வாமிகளாக வெண்ணி ஆச்ரயிப்பர்கள்; இப்படி அவரவர்களால் தொழப்படுகின்ற அந்தந்த தெய்வங்கள் அவரவர்கள் விரும்பின பலன்களைக் கொடுப்பதில் குறையற்றேயிருக்கின்றன; எதனுலே யென்னில்; ஸர்வஸ்வாமியான ஸ்ரீமந் நாராயணன் அவரவர் தமதமது அத்ருஷ்டாநுஸாரமாய்ப் பலன்பெறும்படியாக அந்தந்த தெய்வங்களுக்கு அந்தர்யாமியா யெழுந்தருளியுள்ளான்; அதனுலேதான்—என்பதாம். இதனுல் சொல்லிற்ருவ தென்னென்னில்; உலகத்தில்நடக்கிற ரக்ஷணத்தொழில் யாவும் எம்பெருமானுடையதே; பிரமன் சிவனிந்திரன் முதலிய இதர தெய்வங்களைக் குறித்தும் மற்றும் அதிக்ஷுத்ர தெய்வங்களைக் குறித்தும் அவரவர்கள் வழிபாடுகள் செய்து, தாம்தாம் கோரின பலன்களைப் பெறுவதாகக்கண்டாலும் அதுவும் எம்பெருமான் தானே அத்தெய்வங்களுக்கு உள்ளீடாக விருந்துநடத்துகிற ரக்ஷணமேயன்றி அத்தெய்வங்களே சுதந்திரமாகச் செய்து விடுகிற ரக்ஷணமன்று என்றதாயிற்று. *நஹி பாலந ஸாமர்த்யம் ருதே ஸர்வேச்வரம் ஹரிம்* என்றும், *ந ஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே, ஸமர்த்தோ த்ருச்யதேகச்சித் தம் விநா புருஷோத்தமம்* என்றுமுள்ள பிரமாணங்களை யடியொற்றி யருளிச்செய்ததாமிது ஆக இந்தப் பாசுரத்தின் ப்ரமேயத்தையும் சேர்த்துக்கொண்டு **ஸ்வாதீநத்ரிவித சேதநா சேதநஸ்வரூப ஸ்திதி**" என்ருர் ஸ்வாமி ஸ்திதியாவது ரக்ஷணமே. ... ...

## 34. ஸ்வாதீநப்ரவருத்திநிவ்ருத்திகத்வம்

இனி, இதற்கடுத்த ஆருவது பாட்டு *நின்றனரிருந்தனர்* என்பது இப்பாட்டின் கருத்தாவது, நிற்பவர்கள் இருப்பவர்கள் கிடப்பவர்கள் திரிபவர்கள் ஆக இப்படிப் பட்ட ப்ரவ்ருத்தி சீலர்களும், நில்லாதவர்கள் இராதவர்கள் கிடவாதவர்கள் திரியாதவர்கள் ஆக இப்படிப்பட்ட நிவ்ருத்தி சீலர்களும் எம்பெருமானிட்ட வழக்கே யென்பதாம். இதில், ப்ரவ்ருத்தி சீலர்களையும் நிவ்ருத்திசீலர்களையும்சொல்லி யிருந்தாலும் அவர்கள் இங்கு விவக்ஷிதர்களல்லர்; கீழே *நாமவனிவனுவன்* என்கிறபாட்டிலேயே தர்மிகளான ஸகலரையும் சேரப்பிடித்தெடுத்து அவர்கள்யாவரும் எம்பெருமானிட்ட வழக்கே யென்பது சொல்லி முடிந்தவிஷயமாதலால் இப்பாட்டு அத்தோடு புநருக்தமாகக்கூடாது;

அதில்சொல்லப்படாதவிஷயமே இங்கு சொல்லப்பட்டதாகவேண்டும்; ஆகவே ப்ரவ்ருத்தி நிவ்ருத்திமான்கள் எம்பெருமானிட்ட வழக்கு என்று சொல்லுகிற விப்பாசுரமானது. அவரவர்களின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளாகிற தர்மங்கள் எம்பெருமானிட்டவழக்கே யென்று சொல்லிற்றுகிறது இப்போது. நின்றனரிருந் தனரித் யாதிக்குப் பொருள் — நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதலாகிற ப்ரவ்ருத் திகளும், நில்லாமை இராமை கிடவாமை திரியாமையாகிற நிவ்ருத்திகளு மெல்லாம் எம்பெருமானதீனமே யென்கை. ... ...

## 35. இங்கே சங்காபரிஹாரங்கள்

நின்றனர் என்கிற சொல்லுக்கு நிற்றல் என்னும் பொருள் எங்ஙனே கொள்ளக் கூடுமென்று சிலருடைய உள்ளம் கலங்கியே யிருக்கும்; அன்னவர் களுக்குத் தெளிவு பிறக்கச் சொல்லுகிறோம். வேதத்தில், யாகஞ் செய்பவன் ஸோமபானஞ் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டது. ஸோமபானமானது ஸோமலதையின் ரஸத்தைப் பருகுவது. [ஸோமலதை — ஆட்லாங்கொடி யென் பர்.] அந்த லதையை எப்படி ஸம்பாதிப்பது? காடுகளில் சென்று ஸம்பாதித்து வருவதா? அல்லது விலைகொடுத்து வாங்குவதா? என்று விசாரம் வருகையில், *கோ அர்க்கமேவ ஸோமம் கரோதி* என்கிற வேதவாக்கியமானது பசுவைக் கொடுத்து ஸோமலதை வாங்கவேண்டுமென்றது; அந்த வேதத்திலேயே மற்றோரிடத்தில் *அருணயா பிங்காக்ஷ்யா ஸோமம் க்ரீணாதி* என்று ஓதிற்று. ஸோமலதையின் க்ரயமான பசு சிவப்பு நிறமுள்ளதாயும் பிங்கவர்ணமான கண்ணுடையதாயுமிருக்க வேண்டுமென்று சொல்லிற்று. ஆக சிவந்த பசுவைக் கொண்டு ஸோமலதையை வாங்கவேணு மென்று சொல்லி யிருந்தாலும், பசு வைக்கொண்டு வாங்குவதென்பது முன்னமே ப்ராப்தமாயிருப்பதால், அப்ராப்த மானதே விதிவிஷயமாகவேண்டுதலால் இங்குச் சிவப்பு மாத்திரமே விதிக்கப் படுகிறதாகக் கொள்ளப்படுகின்றது. *நின்றனரிருந்தனர்* என்னுமிவ்விடத் திலும் இதே நீதிதான். ... ... ... ...

## 36. இதுவுமது.

மற்றொரு த்ருஷ்டாந்தமுங் கேண்மின்; அபிசாரகருமத்தில் ரித்விக்குக்கள் தலைப்பாகையுடன் உலாவவேண்டுமென்று வேதத்தில் ஓரிடத்தில் சொல்லிற்று மற்றோரிடத்தில் *லோஹிதோஷ்ணீஷா ருத்விஜ: ப்ரசரந்தி* என்று ஓதிற்று அதாவது, சிவப்புநிறமுள்ள தலைப்பாகையுடையவர்களாக ரித்விக்குக்கள் உலா வக் கடவர்களென்கை. இவ்விடத்திலும். தலைப்பாகை என்பது ஏற்கெனவே ப்ராப்த மானபடியால் அதில் லோஹிதத்வம் [சிவப்பு] மாத்திரமே ப்ரக்ருதத் தில் விதிவிஷயமென்று கொள்ளப்படுகிறது. *நின்றனரிருந்தனர் பாசுரத்தின் ப்ரக்ரியையும் இதுவேதான். ப்ரவ்ருத்திமான்களும் நிவ்ருத்திமான்களும் சொல் லப்பட்டாலும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மாத்திரமே இங்கு விவக்ஷிதமென்க. ஆக



இந்தப் பாசுரத்தின் ப்ரமேயத்தையும் சேர்த்துக்கொண்டு "ஸ்வாதீந த்ரிவித சேதநாசேதந ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம்" என்றருளிச்செய்தார் ஸ்வாமி. எனவே, திருவாய்மொழிப் பாசுரங்கள் மூன்றின் ஸாரார்த்த ஸங்க்ரஹமாக ஸ்வாதீநேத்யரதி சூர்ணையை எம்பெருமானார் அருளிச்செய்தாரென்றதாயிற்று.

## 37. ஸம்ப்ரதாய ஸங்கேத விவரணம்

நம்முடைய பூருவாசாரியர்கள் கம்பீரமாகச் சில ஸ்ரீஸூக்தி களையருளிச்செய்து வைக்கின்றனர். அவை ஸங்கேதச் சொற்களாக வழங்குகின்றன அவற்றின் பொருள்கள் ஆங்காங்கு வியாக்கி யானங்களினால் தெரியவரும் அப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளில் சில காட்டி விவரிக்கிறோமிங்கு.

### — பண்டை நாளில் பிறவி —

இதுவொரு ஸங்கேதமாய்ப் பரமபோக்யமான ஸ்ரீஸூக்தி. ஆசாரயஹ்ரு தயத்தில் (81) "பண்டைநாளில் பிறவி உண்ணாட்டுத்தேசிறே" என்றுவருகிறது திருவாய்மொழியில் ஒன்பதாம்பத்தில் இரண்டாம்பதிகம் *பண்டைநாளாலே நின் திருவருளும்* என்று தொடங்குவது. அதில் முதல் மூன்று பாசுரங்களில் வரிசையாக ஒரு விலக்ஷண விஷயம் சொல்லப்படுகிறது. முதற்பாட்டில் "நின் கோயில் சீய்த்துப் பல்படிகால் குடிகுடிவழிவந் தாட்செய்யுந் தொண்டர்" என்கிறது. இரண்டாம்பாட்டில் "உன் பொன்னடிக்கடவாதே வழிவருகின்ற வடியர்" என்கிறது மூன்றாம் பாட்டில் "தொடர்ந்து குற்றேவல்செய்து தொல்ல டிமை வழிவருந்தொண்டர்" என்கிறது இவற்றால், ஆத்மாவின் இயற்கை வடி வமான தாஸ்யத்திற்கு விரோதியான அஹங்காரம் குடிபுகாததாய், கைங்கரியத் திற்கு அநுரூபமான குடிப்பிறவி இவ்வளவு விசதமாக வேறு எந்த பதிகத்திலுங் காணப்படவில்லை. இச்சிறப்பைத் திருவுள்ளம்பற்றிப் பூருவர்கள் "பண்டை நாளில்பிறவி" என்ற ஒரு ஸங்கேத மிட்டனர் *பண்டைநாளாலே யென்கிறபதி கத்தில் பலகாலும் சிறப்பித்துக் கூறப்படுகிற பிறவி என்றபடி. ... ... ...

## 38. ஐந்து நகர்கள்

தென்னகர், நன்னகர், மாநகர், நீணகர், பெருநகர் என்று ஐந்து நகர்கள் ஆசார்யஹ்ருதயம் மூன்றாம் ப்ரகரணத்தில் குறிக்கப்படுகின்றன. தென், நன், மா, நீள், பெரு என்று விசேஷணங்களில் பேதமொழிய, நகர் என்பதே ஐந்திடங்களிலும் விசேஷ்யம். மேலே குறித்த விசேஷணங்கள்

பொதுவாகச் சிறப்பையே தெரிவிக்கும். எவ்வூருக்குத் தென்னகரென்று பெயர்? எவ்வூருக்கு மாநகரென்று பெயர்?........என்று கேட்டால் பாசுரங்களின் உபஸ்திதியும் விசேஷாநுபவமுமில்லாதவர்கள் விடையிறுக்கமுடியாது தென்னகர் ≈ மலைநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான திருவல்லவாழென்னும்திருப்பதியைப்பற்றி நம்மாழ்வாரருளிச்செய்த *மானேய்நோக்குப் பதிகத்தில் ஈற்றுப் பாசுரத்தில் „ஆயிரத்துள்ளிவைபத்தும் திருவல்லவாழ்ச் சேமங்கொள் தென்னகர்மேல்'' என்றருளிச்செய்திருக்கையாலே திருவல்லவாழ்க்குத் தென்னகரென்று ஸங்கேதமிட்டனர். நன்னகர் ≈ ஒப்பிலியப்பன் ஸன்னிதியென்கிற திருவிண்ணகர்ப்பதிக்கு இட்டருளின திருவாய்மொழியில் (6-3-2) *தெண்டிரைப் புனல்சூழ் திருவிண்ணகர் நன்னகரே* என்றருளிச்செய்திருக்கையாலே திருவிண்ணகர்க்கு நன்னகரென்று ஸங்கேதமிட்டனர்.

மாநகர் ≈ தென் திருப்பேரைத் திருப்பதிக்கு இட்டருளின *வெள்ளைச் சுரிசங்குபதிகத்தில் *ஏர்வளவொண்கழனிப் பழனத் தென் திருப்பேரெயில் மாநகரே* என்றருளிச் செய்திருக்கையாலே தென் திருப்பேரைக்கு மாநகரென்று ஸங்கேதமிட்டனர்.

நீணகர் ≈ திருவாறன்விளையென்னும் மலைநாட்டுத் திருப்பதிக்கு இட்டருளின *இன்பம் பயக்கவென்னும் பதிகத்தில்,,திருவாறன்விளையென்னும் நீணகரமதுவே'' என்றருளிச் செய்திருக்கையாலே திருவாறன்விளைக்குநீணகரென்று ஸங்கேதமிட்டனர்.

பெருநகர் ≈ சோழநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான அப்பக்குடத்தான் ஸன்னிதிக்குத் திருமங்கையாழ்வாரிட்டருளின *கையிலங்காழி சங்கன்* என்னும் பதிகத்தில் *பெருவரை மதில்கள்சூழ்ந்த பெருநகர் அரவணைமேல்* என்றருளிச் செய்திருக்கையாலே அத்தலத்திற்குப் பெருநகரென்று ஸங்கேதமிட்டனர். ... ... ...

## 39. உறையிலிடாதவர்—

திருமழிசைப்பிரானுக்கு இதுவொரு ஸங்கேதத் திருநாமம். (ஆசார்யஹ்—155.) எதை உறையிலிடாதவர்? என்று கேள்வி பிறக்கும். உறையிலிடுவதென்கிற வழக்கு கத்தியைப் பற்றியதாதலால், உருவின வாளை உறையிலிடாதவர் என்பதாகும். *வாள் வீசும் பரகாலன் கலிகன்றி* என்கிறபடியே திருமங்கையாழ்வார்க்குக் கத்தி நிரூபகமாகவுண்டே யல்லது திருமழிசைப்பிரானுக்கு அதிருந்ததாக ப்ரஸித்தியில்லையே; ஆகவே உருவினவாளை உறையிலிடாதவரென்று திருமழிசைப்பிரானை எப்படிச்சொல்லலாம்? என்றுசிலர் சங்கிக்கக்கூடும் 'உருவினவாளை உறையிலிடாதவர்' என்பதற்கு ஸ்வாபதேசார்த்தரீதியில் பொருள் கொள்ளவேணும். ப்ரதிபக்ஷிகளை நிரஸிப்பதற்காகவே கத்தியை உறையிலிடாமல் கையிலே கொண்டிருப்பது வீரர்களின் வழக்கம். அப்படியே, தேவ



தாந்தரங்களுக்குப் பரத்வஞ் சொல்லுகிற ப்ரதிபக்ஷிகளை நிரஸித்து ஸ்ரீமந்நாராயண பரத்வத்தை ஸ்தாபித்து வெற்றி பெறுவதற்கு எப்போதும் ஸன்னத்தராயிருப்பவர் இவ்வாழ்வார்—என்பது பற்றியேஇவர்க்கு உறையிலிடாதவரென்று திருநாமஸங்கேதமாயிற்று. இவர்பிரபந்தம் தொடங்கும்போதே *நான்முகனை நாராயணன் படைத்தான்; நான்முகனும் தான்முகமாய் சங்கரனைத் தான் படைத்தான்* என்றார். இடையில், *பொல்லாத தேவரைத் தேவரல்லாரைத் திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு* என்றார். முடிவில் இனியறிந்தேனீசற்கும் நான்முகற்குந்தெய்வம்,இனியறிந்தே னெம்பெருமானுன்னை* என்றார் திருச்சந்த விருத்தத்திலுமிப்படியே பலபாசுரங்கள் காணலாம். *காணிலுமுருப்பொலார்செவிக்கினாதகீர்த்தியார்.பேணிலும்வரந்தரமிடுக்கிலாததேவரை,ஆணமென்றடைந்து வாழுமாதர்கள்!* என்றும் *வந்தவாணனீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தநாள், அந்த வந்த வாகுலம் அமரரேயறிவரே* என்றுமுள்ள பல பாசுரங்கள் காண்க. ... ... ...

## 40. புஷ்பத்யாக போக மண்டபங்கள்—

'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்று மூன்று திவ்ய தேசங்களையே நூற்றெட்டுத் திருப்பதிகளுள் தலையாகக் கொண்டு எங்கும் வழங்கி வருகிறார்கள். இம்மூன்று திருப்பதிகட்குத் தலைமையுண்டானதற்கு யாது காரணமென்னில், நம்மாழ்வார் தமது முதற்பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் இம்மூன்று திவ்யதேசங்களை மாத்திரமே மங்களா சாஸனம் செய்தருளியது தான் காரணம். இம்மூன்று திவ்ய தேசங்களைப் புஷ்ப த்யாக போகமண்டபங்களென்றும் பூருவர்கள் ஸங்கேதித்ததுண்டு.(ஆசார்யஹ்—85.) புஷ்பமண்டபமென்பது திருமலை; த்யாகமண்டபமென்பது பெருமாள்கோயிலென்கிற காஞ்சி; போகமண்டபமென்பது கோயில். எங்ஙனேயென்னில்; நம்மாழ்வார் திருமலை விஷயமாக அருளிச்செய்த*ஒழிவில்காலப் பதிகத்தில்* வானவர் வானவர் கோனொடுஞ்சிந்து பூமகிழும் திருவேங்கடம்* என்று அருளிச்செய்திருக்கையாலே திருமலை புஷ்பமண்டப மெனப்பட்டது. *வேகவத்யுத்தரே தீரே புண்யகோட்யாம் ஹரிஸ் ஸ்வயம், வரதஸ் ஸர்வ பூதாநாம் அத்யாபி பரித்ருச்யதே* என்கிற புராணவசனப்படியே வேண்டுவார் வேண்டின படியே தியாகம் செய்யும் வரதன் எழுந்தருளியிருக்குமிடமாகையாலே பெருமாள்கோயில் த்யாக மண்டபமெனப்பட்டது. *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமேயாள்கின்ற வெம்பெருமானுறையுமிடமான திருவரங்கம் பெரிய கோயிலானது * தெண்ணீர்ப் பொன்னிதிரைக் கையாலடிவருடப் பள்ளி கொள்ளும்* என்கிறபடியே திவ்யபோக ஸ்தானமாயிருக்கையாலே போகமண்டப மெனப்பட்டது. ... ... ...

## 41. பகவத்ராமாநுஜ ஸூக்தி வைலக்ஷண்யம்

கீதாபாஷ்யத்திலோ ஸ்ரீபாஷ்யத்திலோ ஸ்வாமியருளிச்செய்யும்
ஸ்ரீஸூக்திகளில் நெஞ்சையுருக்கும்படியான வொரு அதிசயம் அடியேனுடைய
அநுபவத்தில் காண்கிறது. இவ்வதிசயம் வேறு எந்த பாஷ்யத்திலும் ஈஷத்தும்
காண முடியாது அஃது என்னென்னில்,மூலத்தில் பரமபுருஷனுடைய ப்ரஸ்
தாவம் வருமிடங்களில் பெரும்பாலும் அவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிப்
பெருமைகளை விளக்கிப் பலவிசேஷணங்களை யடுக்கடுக்காக அருளிச் செய்தா
லொழிய ஸ்வாமிக்குத் தரிப்பு உண்டாவதில்லை ஆங்கு ஓரிடமெடுத்துக் காட்டு
கிறேன். பகவத்கீதையில் ஒன்பதாமத்யாயத்தில் முடிவு ச்லோகம் *மந்மநா
பவ மத்பக்த: என்பது. இதில் மந்மநா பவ, என்பதற்கு என்னிடத்தில்
மனத்தை வைத்திடு என்றுபொருள். இப்பொருள் யாவர்க்கும் தெரிந்ததே
எளிதில் தெரியக்கூடியதே என்கிற கருத்தினால் மத்வபாஷ்யகாரர் அடியோடு,
அர்த்தம் செய்யவேயில்லை. சங்கராசாரியர். ''மயி வாஸுதேவே மந: யஸ்ய
தவ ஸ த்வம்மந்மநா பவ''என்று உரைத்தார்.என்னிடத்தில் என்பதற்குவாஸு
தேவனாகிய என்னிடத்தில் என்று அர்த்தம் என்பதாக விவரித்தாராயிற்று.
இனி ஸ்வாமி பாஷ்யத்தை யெடுத்துக் கொள்வோம்; அவ்விடத்துப் பங்க்திகளை
ஸேவிக்கும்போது கல்நெஞ்சினனுக்கும் கண்ணீர் பெருகும்; ''மந்மநா பவ—மயி
ஸர்வேச்வரே நிகிலஹேயப்ரத்யநீககல்யாணைகதாநே ஸர்வஜ்ஞே ஸத்யஸங்
கல்பே நிகிலஜகதேககாரணே பரஸ்மிந் ப்ரஹ்மணிபுருஷோத்தமே புண்டரீகத
லாமலாயதேக்ஷணே ஸ்வச்சநீலஜீமூத ஸங்காசே யுகபதுதித திநகரஸஹஸ்ரஸ
த்ருசதேஜஸி லாவண்யாம்ருதமஹோததௌ உதாரபீவரசதுர்பாஹௌ
அத்யுஜ்ஜ்வல பீதாம்பரே அமலகிரீட மகரகுண்டலஹாரகேயூரகடகபூஷிதே
அபாரகாருண்ய ஸௌசீல்ய ஸௌந்தர்ய மாதுர்யகாம்பீர்யௌதார்ய வாத்ஸல்
யஜலதௌ அநாலோசிதவிசேஷாசேஷ லோகசரண்யே ஸர்வஸ்வாமிநி
தைலதாராவத் அவிச்சேதேந நிவிஷ்டமநா பவ,, என்கிற இவ்வளவும் அதி
கம்பீரமாக அவதரித்துள்ள ஸ்வாமி ஸூக்தியாகும். ... ... *

## 42. விவரணம்காண்மின்

இந்த மஹாவாக்யத்தில் எம்பெருமானைப் பற்றின விசேஷணங்கள்
பதினெட்டு உள்ளன. இத்தனை விசேஷணங்கள் இங்கு அவசியமோ வென்று
சிலர் நினைக்கக்கூடும். உண்மையில் அவச்யமன்றென்றும் சொல்லலாம்.
விஸ்தரத்தில் ருசியில்லாதவரான ஸ்வாமி இவ்வளவு ஏன் அருளிச்செய்தா
ரென்று ஆலோசிக்கவேண்டும். ஸ்ரீவைஷ்ணவர்களிலும் பலர் இதற்கு
நிதானமறியாரென்றே அடியேன் எண்ணுகிறேன். ஸ்வாமி யெம்பெருமானார்
*பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட வெங்களி
ராமானுசமுனி வேழம்* என்றும், *கலிமிக்க செந்நெற்கழனிக் குறையல்கலைப்



பெருமானொலிமிக்க பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனால் வலிமிக்க
சீயமிராமானுசன் *என்றும் நூற்றந்தாதியில் அமுதனார் அருளிச் செய்தபடியே
ஆழ்வாரருளிச் செயற்கடலில் அநவரதம் அவகாஹித்தவராதலால் அதன் பல
னாகவே இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளை ஸ்வாமி பலகாலும் அருளிச்செய்ய
ப்ராப்தமாகிறது. கண்ணபிரான் தன்னிடத்தில் பக்தி பண்ணும்படி விதிக்கிற
இவ்விடத்தில் எம்பெருமான்றன்னுடைய இத்தனை விசேஷங்களை யெடுத்துக்
காட்டாவிடில் எங்ஙனே பக்தியுண்டாகும். அவனுடைய ஸ்வரூப வைலக்ஷண்
யத்தையும் திவ்ய மங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்தையும் திவ்ய பூஷணாதி
வைசிஷ்ட்யத்தையும் திருக்கல்யாண குண பௌஷ்கல்யத்தையும் எடுத்துக்
காட்டுவதானது கண்ணபிரான் தானே இவற்றையெடுத்துரைத்து இவற்றிலே
யீடுபடும்படி சொல்லுவதாகவன்றோவுள்ளது இதரபாஷ்யகாரர்களுக்கு திவ்ய
ப்ரபந்த ஸம்பத்து சிறிது மில்லாமையினாலேயே அவர்கள் இப்படிப்பட்ட
விசேஷணங்களை ஓரிடத்தில் கூட எழுதிவைக்க ப்ரஸக்தியில்லையாயிற்று.

## 43. விசிஷ்டாத்வைத ஸித்தாந்த வைபவம்.

உலகில் பிரசாரத்திலிருந்து வரும் பலவகைப்பட்ட மதங்களுள் பரமப
வித்திரமான விசிஷ்டாத்வைததர்சநம் மிகச்சிறந்து விளங்குகின்றது
ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்ற மூன்று வகுப்புகளும் நம் தர்சனத்தில்
தான் சீர்மை பெற்று விளங்குவன. (1)திருவாய்மொழியின் உபக்ரமத்தில்
*சுடர்மிகு சுருதியென்று ஆழ்வாரால் கொண்டாடப்பட்ட வேதமே நமக்கு
ப்ரமாணங்களில் தலையானது. (2)யதார்த்த ஜ்ஞான நிதிகளான ஸ்ரீமந்நாத
முனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் போல்வாரான மஹாசார்யர்களே
ப்ரமாதாக்களில் தலைசிறந்து விளங்குபவர். (3)ஸகல சேதநாசேதநசரீரகனாய்
ஸமஸ்தகல்யாண குணாத்மகனான ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்றும்,
அவனுடைய திருவடித் தாமரைகளில் பண்ணும் ப்ரபத்தியே பரமஹித
மென்றும், *நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யாநந்தமயமான நித்ய
கைங்கர்யமே பரமபுருஷார்த்தமென்றும் இங்ஙனே கூறப்படும் அர்த்த விசே
ஷங்களே ப்ரமேய ச்ரேஷ்டங்களாக விளங்குகின்றன. ஆகஇத்தகைய ப்ரமாண
ப்ரமாத்ரு ப்ரமேய வைசிஷ்ட்யமே நம்முடைய தர்சனத்தின் சிறப்புக்கு
ஹேதுவாக நின்றது.இதிஹாஸ புராணாதிகளான உபப்ரும்ஹணங்களோடும்
ஆழ்வாரருளிச் செயல்களோடும் கூடின வேதம் நமக்குப் பரமப்ரமாணம்.
பரமவைதிகர்களென்கிற ஏற்றம் நமக்கே உரியது. உபயவேதாந்தப்ரவர்த்
தகத்வமும் நமக்கே அஸாதாரணம்.

ப்ரத்யக்ஷத்தாலோ அநுமானத்தாலோ அறிய முடியாத அர்த்த
விசேஷங்களை யறிவிக்கும் வாங்மயமே வேதமெனப்படும். *ப்ரத்யக்ஷேணா
நுமித்யா வா யஸ் தூபாயோ ந புத்த்யதே, யத் தம் விதந்தி வேதேநதஸ்மாத்

வேதஸ்ய வேததா,*என்கிற ப்ரமாணம் இங்கே அநுஸந்தேயம். வேதத்தை ப்ரமாணமாக இசையாத சார்வாக ஜைந பௌத்தாதிகள் பாஹ்யர்களெனப்படுவர். வேதத்தைப் பரம ப்ரமாணமாக இசைந்துவைத்தும், பரப்ரஹ்மம் குணசூந்யமென்றும் அலக்ஷ்மீகமென்றும் அசரீரமென்றும் விபூதி விரஹிதமென்றும் இங்ஙனே மனம் போனபடியெல்லாம் பேசுபவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுபவர். பாஹ்யர்களோடு குத்ருஷ்டிகளோடு ஒரு வாசியில்லையென்றருளிச்செய்கிறார் கூரத்தாழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் *பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேப்யபாரம் கோரம் தமஸ் ஸமுபயாந்தி ந ஹீக்ஷஸே தாந். ஜக்தௌ ய காநநம்ருகைர் ம்ருகத்ருஷ்ணிகேப்ஸோ: காஸார ஸத்வநிஹதஸ்யசகோவிசேஷ:?*என்றுள்ள ச்லோகம் இங்கே அநுஸந்தேயம். பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் துல்யயோக க்ஷேமர்களென்பதற்கு ஓர் அற்புதமான த்ருஷ்டாந்தம் காட்டுகிறாரிதில்; விடாய்மிகுத்துத் தண்ணீரைத் தேடியோட இரண்டு மிருகங்கள் புறப்பட்டன. அவற்றில் ஒருமிருகமானது தடாகத்தில் புகாதே கானலைக்கண்டு பாநீயப்ரவாஹமாக மயங்கி ஓடிக்கொண்டேயிருக்கையில் புலியின் வாயிலே விழுந்து மாண்டொழிந்தது இது இப்படியாக மற்றொரு மிருகமானது விடாய்தீரப் பெறுவதற்கு உண்மையாகத் தண்ணீருள்ள தடாகத்திலேயே சென்று சேர்ந்தும் துறை தப்பியிழியவே அங்குக் கிடந்த வொருமுதலையினுலே கதுவப்பட்டு மாண்டொழிந்தது ஆக இரண்டு மிருகங்களும் தடாக ப்ரவேச அப்ரவேசங்களாலே சிறிது வைலக்ஷண்யம் பெற்றிருந்தாலும் விநாசத்தில் துல்யபலமே, அதுபோலவே குத்ருஷ்டிகளும் பாஹ்யர்களும் வேதப்ராமாண்ய அங்கீகார அநங்கீகாரங்களாலே சிறிது வாசிபெற்றிருந்தாலும் விநாசத்திலே வாசியற்றவர்களே யென்றதாயிற்று அந்த பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் கிடக்கட்டும். வேதக் கடலில் நாம் உள்ளபடி அவகாஹித்து அர்த்த ரத்னங்களைக் கொள்ளைகொண்டு அநுபவித்து ஆனந்திக்க பாக்கியம் பெற்றிருக்கிறோமென்று நாம் களித்திருப்போமாக. ... ... ...

## 44. வேதவிபாகமும் மீமாம்ஸாவிபாகமும்

வேதம் கர்மகாண்ட மென்றும் ப்ரஹ்மகாண்ட மென்றும் இரு வகுப்பாகவுள்ளது. பூர்வபாகம் கர்மகாண்டமென்றும், உத்தரபாகம் ப்ரஹ்மகாண்டமென்றும் வழங்கப்படும் உபநிஷத்துக்களையே ப்ரஹ்மகாண்ட மென்பது, பகவானுக்கு ஆராதன ரூபங்களான யஜ்ஞம் முதலிய கரும விசேஷங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் கர்ம காண்டமென்றும்' அக்கருமங்களினால், ஆராதிக்கப்படுகின்ற பகவானுடைய ஸ்வரூப ரூப குணங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் ப்ரஹ்மகாண்டமென்றும் சொல்லிற்றாயிற்று. இதுவே உபநிஷத்தென்கிற பெயராலும் வழங்கும். 'உப-நிஷீததி.'என்கிற வ்யுத்பத்தி கொண்டது உபநிஷத்தென்கிற பதம். பகவானுடைய அருகேயுள்ளதென்கிறதி



*வேதைச் சஸர்வைஹமேவ வேத்ய:* என்கிற கீதையின்படி கர்மகாண்டமுங்கூட பகவானை ப்ரதிபாதிக்கவல்லதேயாயினும் அந்தப்ரதிபாதனம் வ்யவஹிதம யிருக்கும். உபநிஷத்து அவ்யவதாநேந ப்ரதிபாதகமாயிருக்கும். கர்மகாண்டத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக ஜைமிநியென்னும் மஹர்ஷியெழுந்து பதினாறு அத்யாயங்களோடு கூடிய ஒருசாஸ்த்ரத்தையியற்றினார் அதற்குப் பூர்வமீமாம்ஸையென்று பெயர் இதில் பன்னிரண்டு அத்யாயங்களே ஜைமினியால் இயற்றப்பட்டவை யென்றும் மேல் நான்கு அத்யாயங்கள் காசக்ருத்ஸ்ந மஹர்ஷியால் இயற்றப்பட்டவை யென்றும் ஒருபக்ஷமுண்டு. இதைப்பற்றி இங்கு விசாரவிரிவு வேண்டா. *வ்ருத்திக்ரந்தே து ஜைமிந்யுபரசிததயா ஷோடசாத்யாய்யுபாத்தா* இத்யாதியான அதிகரண ஸாராவளிச்லோகம் காண்க., ஜைமிநீயம் ஷோடசலக்ஷணம்'' என்பது பொதுவான வார்த்தை போதாயந வ்ருத்திக்ரந்தத்தில் பதினாறு அத்யாயங்களும் ஜைமிநிப்ரோக்தமென்று கூறப்பட்டுள்ளது (லக்ஷணமென்று அத்யாயத்திற்குப் பெயர்.)ப்ரஹ்மகாண்டமென்னும் உபநிஷத்பாகத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக வ்யாஸமஹர்ஷியெழுந்து நான்கு அத்யாயங்கள் கொண்ட வொரு சாஸ்த்ரத்தை இயற்றினார். அதற்கே சாரீரகமீமாம்ஸையென்று பெயர். உத்தரமீமாம்ஸை யென்றும் வழங்குவர். ப்ரஹ்ம ஸூத்ரமென்பது இதனையே. ஒவ்வோரத்யாயத்திலும் நான்கு பாதங்களுள்ளன. ஆகவே பதினாறு பாதங்கள் கொண்டது சாரீரகமீமாம்ஸையென்றதாயிற்று இதில் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றி சர்ச்சை செய்து நிர்ணயிக்கும் பகுதிக்கு அதிகரணமென்று பெயரிடப்பட்டுள்ளது. அப்படிப்பட்ட அதிகரணங்கள் இந்த மீமாம்ஸையில் (156)நூற்றைம்பத்தாறு உள்ளன சிலஅதிகரணங்களில் ஒரே ஸூத்ரமிருக்கும் பலஅதிகரணங்களில்பல ஸூத்ரங்களிருக்கும். மொத்தம் ஸூத்ரங்களின் லக்கம் (545)ஐந்நூற்று நாற்பத்தைந்து என்றுகணக்கிடப்பட்டிருக்கின்றது ஆக நான்குஅத்யாயங்களையும், பதினாறுபாதங்களையும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும் ஐந்நூற்று நாற்பத்தைந்து ஸூத்ரங்களையுங் கொண்டது ப்ரஹ்மஸூத்ரசாஸ்த்ரமென்றதாயிற்று. ... ... ... *

## 45 சாரீரகமீமாம்ஸா பாஷ்யவைலக்ஷண்யம்

தத்வஹித புருஷார்த்தங்களை நாம் தெரிந்துகொள்வதற்கு உபநிஷத்துக்களே தஞ்சமாகும். அவ்வுபநிஷத்துக்களின் பொருள்களை ஸம்சய விபர்யமற நிஷ்கர்ஷித்து விளக்கக்கூடியது ப்ரஹ்மஸூத்ர சாஸ்த்ரமேயாதலால் வேதாந்திகளுக்கு சாரீரகமீமாம்ஸையே புகலாயிற்று. இந்த சாஸ்த்ரத்தின் பொருளை நிஷ்கர்ஷமாகவும் நிஷ்கல்மஷமாகவும் தெரிந்துகொண்டவர்களே வேதாந்திகளென்றும் ப்ரஹ்மஜ்ஞானிகளென்றும் சொல்லத் தகுதியுடையார் மஹர்ஷிகளியற்றியஸூத்ரங்களின் பொருளை நம்போல்வார் சிறிதும் அறிய

கில்லார்களாதலால் நம்போன்ற அல்பமதிகளிடத்தில் பரமகருணை கொண்ட பூருவர்கள் அந்த ஸூத்ரங்களின் அர்த்தத்தை விளக்கி பாஷ்யங்கள் இயற்றியுள்ளார்கள் த்வைதம் அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என மூன்று மதங்கள் உலகப்ரஸித்தமாக வழங்குமவை. இம் மூன்றுமதங்களிலும் பாஷ்யங்கள் அவதரித்துள்ளன அத்வைத மதத்திற்காக சங்கராசாரிய ஸ்வாமிகள் பாஷ்யமியற்றினர். த்வைத மதத்திற்காகஆனந்த தீர்த்த ஸ்வாமிகள் (மத்வாசார்)பாஷ்யமியற்றினர் நமது விசிஷ்டாத்வைதமதத்திற்காக ஸவத்ராமாநுஜாசார்யரென்கிற ஸ்வாமி யெம்பெருமானர் ஸ்ரீபாஷ்யமருளிச் செய்தார் ... ... ...

வட இந்தியாவில் அதிக ப்ரஸித்திபெற்றுள்ள வல்லப மதம் நிம்பார்க்க மதம் முதலிய மதங்களுக்காகவும் பாஷ்யங்கள் தோன்றியுள்ளன. சைவ மதத்திற்காக நீலகண்ட பாஷ்யம் தோன்றியுள்ளது. இப்படி மற்றும் பல பாஷ்யங்களிருந்தாலும் மதத்ராயபஷ்ய மென்று மூன்று பாஷ்யங்களே நமது நாட்டில் குலாவப்படுகின்றன. ஸ்ரீவைஷ்ணவர்களென்றும் விசிஷ்டாத் வைதிகளென்றும் பகவத்ராமாநுஜ தர்சநஸ்தர்களென்றும் வழங்கப்படுகின்ற நமக்கு ஸ்வாமியின் ஸ்ரீபாஷ்யமே ஜீவாதுவாகும். சங்கரபாஷ்யம்மத்வபாஷ்யம் நீலகண்டபாஷ்யம்என்பவை போலல்லாமல் ஸ்ரீபாஷ்யமென்றே தோன்றியுள்ள ப்ரஸித்தி ஸ்ரீராமாநுஜபாஷ்யத்தின் ஒப்பற்ற பெருமையைப் புலப்படுத்தும். உபநிஷத்துக்களின் உண்மைப்பொருளை விளக்கி ஸூத்ரகாரருடையஉள்ளத்திற்கு ஒத்ததாக நிஷபக்ஷபாதமாய் நிருமிக்கப்பட்டது ஸ்ரீபாஷ்யமேயென்று மேனாட்டுப் புலவர்களும் மெச்சியுள்ளார்கள். அது நிற்க: ஸ்வாமி ஸ்ரீபாஷ்யமருளிச்செய்யத் தொடங்கும் போதே "பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ்ஸஞ்சிக்ஷிபு:; தந்மதாநுஸாரேண, ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே" என்று [முன்னோர் மொழிந்த முறை தப்பாமே வியாக்கியானிப்பதாக] அருளிச்செய்திருப்பதனால் ஸ்ரீபாஷ்யத்தின் ப்ராமாணிகத்வம் அசைக்க முடியாது விளங்குகின்றது. இக்காலத்து அஸூயுக்கள் சிலர் மேலே உதாஹரித்த பங்க்தியின் மேல் வீணான விவாதத்தைக் கிளப்பிப் பங்கமடைந்துபோனார்களென்பது நம்முடைய சதபூஷணீவஜ்ரகுடார—தத்விஜயத்வஜ—சாங்கர சிரோபூஷா = தத்விபூஷணாதி க்ரந்தங்களினால் விசதமாதலால் அதனை ஈண்டு விவரித்துரைக்கின்றிலோம். ஆர்ஷவ்யாக்க்யாந கவசிதமாயும் அதிப்ராசீநமாயும் பரமபவித்ரமாயுமுள்ளது விசிஷ்டாத்வைதமேயென்றும், அதை நிலைநாட்டவல்ல பாஷ்யம் ஸ்ரீபாஷ்யமேயென்றும் ப்ராமாணிகவைதிகோத்தமர்களின் கொள்கை. ... ...

## 46 சதுரோக்திவிந்யாஸ: உபந்யாஸம்

அலங்காரசாஸ்த்ரத்தில் பர்யாயோக்தமென்பது ஓர் அலங்காரம். இதற்கு லக்ஷணம் "பர்யாயோக்தம் து கம்யஸ்ய வசோ பங்க்யந்தராச்ரயம்" எனப்



பட்டது. உள்ளபடி தெரிவிக்கவேண்டிய விஷயத்தை நேராகத் தெரிவியாதே வேறொருபங்கியாலே தெரிவிப்பது பர்யாயோக்தாலங்காரமென்கை இதற்கு உதாஹரணமென்னவென்றால் 'நமஸ் தஸ்மைக்ருதௌ யேநமுதா ராஹுவதூகுசௌ" என்பது. ராஹுவின் மனைவியினுடைய ஸ்தனங்களைப் பழுதாக்கினவர் எவரோ அவர் பெருட்டு நமஸ்காரம் என்பது இதன் பொருள் ராஹுவின் தலையைமட்டும் நிறுத்திக் கழுத்தின் கீழ்ப்பாகத்தை இல்லையாக்கினபடியாலே அந்த ராஹுவானவன் பத்னீஸ்தநக்ரஹணம் பண்ணுவதற்கு ப்ரஸக்தியில்லையாயிற்று. அதனால் அந்த ஸ்தனங்கள் வியர்த்தமாயின. 'ஆக ராஹுவதூஸ்தனங்களை வியர்த்த மாக்கினவர்க்கு நமஸ்காரமென்றவிதனால் ராஹுவின் உடலை யெழித்தவர் என்னும் பொருள் தேறிற்று இதை ருஜுவாகச்சொல்லுவதில் . சமத்கார விசேஷமில்லையென்று கருதி வேறு பங்கியாலே பேசினது ஓர் அலங்காரமாயிற்று

இங்ஙனே பேசும் முறை வடமொழி நூற்களிலும்தென்மொழி நூற்களிலும் விசேஷமாகவுண்டு. இதேவிதமாகப் பேசுவதும் இதைப்போன்ற வேறு சில வகைகளிற் பேசுவதும் சமத்கார விசேஷசாலியான உக்தியெனப்படும் இத்தகையஉக்திவிந்யாஸம் திவ்யப்ரபந்தங்களிலுமுண்டு. ஒன்றிரண்டு காட்டுகின்றேனிங்கு *கைவளை கொள்வது தக்கதே* என்றும் *என்னுடைய கழல் வளையைத் தாமும் கழல் வளையேயாக்கினரே * என்றும் இத்தகைய பாசுரங்கள் திவ்யப் பிரபந்தங்களில் விசேஷமாகக் காணப்படுகின்றன. தலைவியின்கைவளையை எம்பெருமான் கவர்ந்து சென்றானென்றுதாய் சொல்லுவதும். அந்தோ! என்வளையை யிழந்தேனேயென்று தலைவி வருந்திச் சொல்லுவதுமாகவுள்ளது ஆழ்வார்களின் திருக்கையில் வளை அணிந்திருப்பதுமில்லை; அதை எம்பெருமான் கொண்டதுமில்லை, இவர்கள் அதனை யிழந்ததுமில்லை. ஆண்டாள் பெண்ணாய்ப் பிறந்தவளாகையாலே அவள் வளையணிந்து கொள்ள ப்ரஸக்தியுண்டாதல்லால் அவள் * என்சங்கிழக்கும் வழக்குண்டே என்றும் * என்னுடைய கழல்வளையைத் தாமும் கழல்வளையே யாக்கினரே *என்றும் *என்னுடைய பெய்வளைமேல் இச்சையுடையரேல் இத்தெருவே போதாரே * என்றும் சொல்லுவது ஒருவாறு பொருந்துமென்று கொள்ளலாம் ஆண்பிள்ளைகளா ஆழ்வார்கள் * பரதர் விலை கொண்டுதந்த சங்கமிவை* (திருவிருத்தம்) என்றும் *ஓ! துள்ளுநீர்க்கண்ணபுரம் தொழுதாளிவள் கள்வியோ? கைவளை கொள்வது தக்கதே! *என்று மிங்ஙனே பாசுரங்களருளிச் செய்ய ப்ரஸக்தியில்லையே! என்று சங்கை தோன்றும்] இது, முன்னம் ப்ரஸ்தாவித்த பர்யாயோக்தாலங்கார வகையிற் சொன்னதத்தனை. அதாவது, எம்பெருமானைப் பிரிந்ததனாலுண்டான அவஸாதத்தினால் மேனி மெலிந்து போயிற்று; மிகவும் க்ருசமாய்விட்டது என்ன வேண்டுவதற்குப்

பர்யாயமாக வளையிழந்ததாகவும் வளை கழன்றெழிந்ததாகவும் வளையைஎம் பெருமான் கொள்ளைகொண்டதாகவும் சொல்லுகிறதித்தனை மேனிமெலிந்தால் கையில் வளை தங்காதென்பது அனைவருமறிந்ததேயன்றோ.

## 47. இந்த கவிதையையும் கேண்மின்

வடமொழியில் ஒரு கவி சொல்லுகிறன். "யாமி நயாமீதி தவேவததி புரஸ் தாத்தக்ஷனே ந தந்வங்க்யா:, களிதாநி புரோவலயாநி அபராணி புநஸ்ததைவ தளிதாநி." என்று. (இதன் கருத்தாவது)ஒரு காதலன் காதலியை விட்டு தேசாந்தரம் செல்லக் கருதி(யாமி) என்றனும் புறப்பட்டுப் போகிறேனென்ற படி காதலி ஒரு பத்து வளைகள் கையிலணிந்து கொண்டிருந்தாள். காதலன் போகிறேனென்று சொன்னவார்த்தை செவிப்பட்டவுடனே(உடல் இளைத்துப் போய்)வளைகள் கழன்று விழத் தொடங்கி நாலைந்து வளைகள் கழன்றே போயின இந்த நிலைமையைக் கண்ட காதலன் இவளை நாம் பிரிந்து போகத்தகாதென்று கொண்டு உடனே (நயாமி) என்றன். இதற்கு இருவகைப்பொருள்; நங்காய்! நான் போவதில்லை என்றும், போவதா யிருந்தால் உன்னையும் கூடவே யழைத்துப் போகிறேனென்றும் பொருள் பட (நயாமி) என்றன் (ந,யாமி) என்று பிரித்தால் போவதில்லை யென்றும். (நயாமி) என்று ஒரே பதமாகக் கொண்டால் உன்னையு மழைத்துப் போகிறே னென்றதாம். காதலி இது கேட்டவுடனே (உடல் தடிக்கப் பெற்றதனாலே) மிச்சப்பட்டிருந்த வளைகள் படீல் படீலென்று வெடித்துப் போயினவாம். ஆக, இதனால் மேனி மெலிந்த தாகச் சொல்ல வேண்டுமிடத்து வளை கழன்றதாகச் சொல்லப்படுகிறதென்று கொள்ளக்கடவது. இது பர்யாயோக்தமென்கிற அலங்காரத்தின் பாற்படு மென்க. ... *

## 48. வியாஸ வால்மீகி ஸம்வாதம்

**(வியாஸமுனிவரும் வான்மீகி மஹர்ஷியும் சந்தித்துப் பேசுவதாக வைத்தது)**

**வியாஸர்:**—வான்மீகி முனிவரே! வணங்குகின்றேன்; வியாஸமுனி யென்று என்னைச் சொல்லுவர்கள். தேவரீரால் ஸ்ரீராமாயண மென்கிற ஒரு இதிஹாஸ நூலே இயற்றப்பட்டது, நானோ "அஷ்டாதச புராணாநாம் கர்த்தா ஸத்யவதீஸுத:" என்கிறபடியே பதினெண் புராணங்களை இயற்றினவன்' ஆனாலும் பூமண்டலத்தில் தேவரீருடைய ஸ்ரீராமாயணத்திற்கே எங்கும் ஒப்புயர்வற்ற பெருமை பொலிகின்றது. ஒருவித்வான் என்னுடைய புராணங் களில் ஏதேனுமொன்றைப் பிரவசனம் செய்யத்தொடங்கினால் அங்கு ச்ரவணம் செய்யச் சிலரே சேருகின்றார்கள், தேவரீருடைய இதிஹாஸரத்னத்தை ப்ரவசனம்செய்யத்தொடங்கினாலோப்ரவசனம்செய்பவர்மிதமதியாயிருந்தாலுங் கூடச்ரோதாக்கள் திரள் திரளாகக் கூடுகின்றார்கள். தேவரீருடைய ஸ்ரீராமா யணத்திற்கு அத்தகைய சிறப்பு எதனாலென்பதை தேவரீருடைய திருவாக்



கிலிருந்தே கேட்டறிய விரும்புகிறேன். **வான்மீகி:**—மஹர்ஷிகளின் திரளில் பராசர மஹர்ஷி மிகவும் மேம்பட்டவராக ப்ரஸித்தர். அவர் தேவரீருடைய சிருத்தகப்பனார் அவர் தம்முடைய புராணரத்னத்தில் (3—4–5.) கிருஷ்ணத் வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும், கோஹ்யந்யோ புவி மைத்ரேய! மஹாபாரதக்ருத் பவேத்? தேந வ்யஸ்தாயதா வேதா மத்புத்ரேண மஹாத்மநா" என்று தேவரீரை மிகமிகச் சிறப்பித்துக் கூறியுள்ளார், ஆகவே தேவரீருடைய பிரபாவத்திலன்றோ உலகம் முழுவதும் வியப்புக் கொண்டுள்ளது என்னிடத்திலோ எனது நூலிலோ என்ன அதிசயமுள்ளது? உள்ளதாக தேவரீர் திருவுள்ளம் பற்றினால் அது புண்யைர்யசோ லப்யதே" என்கிற கணக்கில் சேரும் **வியாஸர்:**—இங்ஙனே சொல்லலாகாது. தேவரீருடைய ராமாயணத்திற்கு உண்மையில் மிக்க சிறப்பு உள்ளதுதான். அதை தினப்படி நியமபூர்வகமாகப் பாராயணத்தில் கொண்டு எங்கும் பலர் பலவித நன்மை களைப் பெற்று வருகிறார்கள். பல பல மஹாகவிகளும் தேவரீருடைய ஸ்ரீராமா யணத்தை யடியொற்றியே காவியம் நாடகம் சம்பூ முதலானவற்றை இயற்றிப் பகழ் பெற்று வருகிறார்கள் வட இந்தியாவில் துலஸீதாஸரென்கிற பரம பக்தரும் ஆந்திர கவிச்ரேஷ்டரான தியாகராயரும் ராமாயணத்தைக் கீர்த் தனைகளாக இயற்றியே பக்த கோஷ்டியிலும் ஸங்கீத வித்வத் கோஷ்டியிலும் கீர்த்திவாய்ந்து விளங்குகின்றார்கள். தமிழ் நாட்டில் கம்பரென்கிற கவி குலதிலகரும் கம்பராமாயண மென்கிற பெருங்காப்பியத்தை இயற்றியே உலகம் நிறைந்த புகழாளராயினர். இங்ஙனே பலவு முதாஹரிக்க வேணு மோ? கடல் சூழ்ந்த மண்ணுலகில் அங்கம் வங்கம் களிங்கம் காம்போஜம் காச்மீரம் காமரூபம் ஸௌவீரம் ஸௌராஷ்டிரம் மகதம் மாகதம் கேரளம் நேபாளம் ஒட்ரம் மலையாளம் கர்ணாடகம் ஆந்திரம் திராவிடம் முதலான ஸகலநாடுகளிலும் ராமாயணத்தின் ப்ரக்க்யாதியன்றோ பிரபலமாகக் காணப் பட்டு வருகிறது. பல சொல்லியென்? "வேத வேத்யே பரேபும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸரதாஸீத்ஸாக்ஷாத் ராமாயணாத்மநா." என்று ஸுப்ரஸித்தமான சுலோகம் தேவரீருடைய ஸ்ரீராமாயணத்தை வேத ப்ராதுர்ப்பாவ மாகவே பேசியுள்ளதன்றோ.

**வால்மீகி:**—வியாஸரே! தேவரீருடைய பெருமை வேதமேறிக்கிடக் கிறதே; *ஸஹோவாச வ்யாஸ: பாராசர்ய: *என்றன்றோ தைத்திரீய ஆரண்ய கத்தில் ஓதிக்கிடக்கிறது. அன்றியும் "பாரத: பஞ்சமோ வேத:" என்றும். "வேதாந் அத்யாபயமாஸ மஹாபாரதபஞ்சமாந்" என்றும் வேதமாகவே சொல்லப்பட்டதாயிற்றே தேவரீருடைய பிரபந்தம். வீணாக அடியேனை எதற் காகப் புகழ்வது? உண்மையாகவே அடியேனிடம் ஒருவகையான பெருமையு மில்லையே.

வியாஸர்—ஸதாசார்ய கோஷ்டிகளில் பரிக்ரஹாதிசயத்தினாலுண்டான பெருமை தேவரீருடைய நூலுக்கல்லது வேறு எந்த நூலுக்கும் கிடையாது. மந்த்ரங்களின் பொருள்களைப்போல் தேவரீருடை ஸ்ரீராமாயணத்தின் பொருள்களையும் ஸதாசார்ய ஸன்னிதானத்தில் நியம பூர்வகமாக க்ரஹிப்பதென்கிற மரியாதை தொன்றுதொட்டு நிகழ்வதாகக் கேள்விப்படுகிறேன். ஸர்வஜ்ஞரான பகவத் ராமானுஜரும் ஆசார்ய ஸன்னிதியில் ஒரு ஸம்வத்ஸரம் வஸித்து தேவரீருடைய ஸ்ரீராமாயணத்தின் திவ்யார்த்தங்களைக் கேட்டருளினாரென்றால் இதனின்மிக்க பெருமையுண்டோ? மேலும் பல பல வியாக்யானங்கள் அவதரித்திருப்பதும் மிக்க பெருமையை விளக்குகின்றது. அன்றியும் உபந்யாஸ கோஷ்டிகளில் தேவரீருடைய ஸ்ரீராமாயணத்திலிருந்து சில சுலோகங்களையெடுத்து ரஸிகர்கள் ஆச்சரியமாக உபந்யஸித்து ஸப்யர்களை ஆனந்த பரவசர்களாக்குகின்றார்களென்றால் இதை விட வேறு என்ன சொல்ல வேண்டும். உள்ளதை உள்ளபடி யுரைத்தால் அதை இல்லைசெய்வது எதற்காக?

வான்மீகி:—அப்படியே யிருக்கட்டும். 'உம்முடைய குமாரன் ஸுந்தரன், மேதாவி சதுரன் என்று ஒருவர் சொன்னால் பெற்றவர்க்கு உகப்புத்தானே. அதுபோல அடியேனும் உகப்புக் கொள்ளுகின்றேன். உண்மையில் அடியேனுடைய பிரபந்தத்திற்குப் பெருமை 'என்னுடைய க்ருதி' என்பதனாலன்று. கதாநாயகன் ஸ்ரீராமசந்திரனாக அமைந்தபடியால்தானென்று கொள்ளக்கடவது. வையவந்தவர்களும் வாழ்த்தும் படியாகவன்றோ ஸ்ரீராமசந்திரனுடைய பிரபாவமிருப்பது. காதும் மூக்கு மறுப்புண்ட சூர்ப்பணகை கரதூஷணாதிகளிடம் சென்று நிந்திக்க வேண்டியவள் "தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ, புண்டரீகவிசாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ" என்று புகழ்ந்து பேசுகின்றாளே யல்லது 'படுபாவிகளிருவர் என்னை இப்பாடுபடுத்தினார்கள்' என்று சொல்லிற்றிலளே. தாரையும் தன்கணவனான வாலிக்கு ம்ருத்யுவாகவந்த இராமபிரானை "த்வமப்ரமேயச் சஜிதேந்த்ரியச்ச" இத்யாதிகளாலே துதிக்கின்றாள். மந்தோதரியும் தனக்கு வைதவ்யத்தை விளைத்த பெருமானை "தமஸ; பரமோ தாதா சங்க சக்ரகதாதர:" ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ ரஜய்யச் சாச்வதோ த்ருவ" இத்யாதிகள் சொல்லியேத்துகின்றாள். இராவணனுங் கூட "சத்ரோ: ப்ரக்க்யாத வீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை: என்று கொண்டாடுகிறான். ஆகவிப்படி நிந்திக்கவேண்டியவர்களும் துதிக்கும்படியான வைபவம் வாய்ந்த இராமபிரான் கதா நாயகனாக வாய்த்ததே என்னுடைய காவியத்திற்கு ஏற்றம் விளைப்பதாயிற்று—என்ன, வியாஸரும் ஒக்கும் ஒக்கும் த்என்று சொல்லித் தலைதுலுக்கிப்போனார் மற்றொருநாள் வருகிறேனென்று சொல்லி



# 49. ருக்மிணீ கல்யாண வைபவம்.

ஸம்ஸாரிகளான நாம் சாஸ்த்ரோக்தங்களான பல ஸம்ஸ்காரங்களினிடையே விவாஹமொன்று செய்துகொள்ளுகிறோம். "இமாம் கந்யாம் தர்மப்ரஜார்த்தம் வ்ருணீமஹே" என்று சொல்லிக் கந்யகையை வரிக்கிறோம். எம்பெருமான் ப்ரஜார்த்தமாகப் பாணிக்ரஹணம் செய்துகொள்ள வேண்டியதில்லை; ஜநகசக்ரவர்த்தி ஸீதாபிராட்டியைப் பெருமாளுக்குக் கந்யகாப்ரதானம் பண்ணும்போது "ஸஹதர்மசரீ தவ" என்று சொல்லியிருக்கக் காண்கையாலே 'தர்மப்ரஜார்த்தம்' என்ற இரண்டில் தர்மார்த்தமான விவாஹமே விபவாவதாரங்களில் எம்பெருமான் உகந்தருளினதென்று உணர்க. அந்த தர்மம் எதுவென்றால், *விதிதஸ் ஸஹி தர்மஜ்ஞச் சரணாகதவத்ஸல:*என்ற பிராட்டியின் திருவாக்கிலே நோக்காக *ஸர்வாவஸ்தஸக்ருத்ப்ரபந்நஜநதாஸம்ரக்ஷணைகவ்ரதீ தர்மோ விக்ரஹவாந்* என்று [தசாவதாரஸ்தோத்ரே] ஸ்வாமியருளிச் செய்தபடி சரணாகத பரித்ராணந்தான் தர்மமென்று தேறுகின்றது. *ஸஹதர்மசரீம் சௌரேஸ் ஸம்மந்த்ரிதஜகத்திதாம், அநுக்ரஹமயீம் வந்தே நித்யமஜ்ஞாதநிக்ரஹாம்* என்னப்பெற்ற பிராட்டியின் ஸஹயோகமில்லாமல் இந்த தர்மம் நிறைவேறாது *லக்ஷ்ம்யாஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா, ரக்ஷக:* இத்யாதி ப்ரமாண ப்ரஸித்தியுமுள்ளது. அந்த ஸ்ரீ மஹாலக்ஷ்மி எம்பெருமானுடைய அவதாரங்கள்தோறும் தானும் வெவ்வேறு திருநாமங்கள் பெற்று அவதரிப்பதாகப் புராணரத்நத்தில் பராசரமஹர்ஷி கூறுகின்றார். (1-9-144.) *ராகவத்வேபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி, அந்யேஷு சாவதாரேஷு விஷ்ணோரேஷாநபாயிநீ. தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ, விஷ்ணோர் தேஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ் தநும். *இத்யாதிகள் காண்க. *அழகியாரிவ்வுலகுமூன்றுக்கும் தேவிமைதகுவார் பலருளர்* என்றும் *தக்கார்பலர் தேவிமார் சாலவுடையீர்* என்றும் பராங்குச பரகாலர்கள் பணித்தபடி க்ருஷ்ணாவதாரத்தில் தேவிமார் பலரிருந்தாலும் ருக்மிணிப்பிராட்டிக்கே ப்ராதாந்யமுள்ளது. இப்பிராட்டியின் விவாஹ சரித்திரத்தை நம்மாழ்வார் பெரியாழ்வார் ஆண்டாள் மூவருமே சிறிது அநுபவித்து வெளியிட்டுள்ளார்கள். *அன்றங்கமர்வென்று உருப்பிணிநங்கை அணிநெடுந்தோள்புணர்ந்தான்* என்பது நம்மாழ்வார் பாசுரம், *உருப்பிணிநங்கையைத் தேரேற்றிக்கொண்டு......*உருப்பிணி நங்கை தன்னை மீட்பான்......*என்பவை பெரியாழ்வார் பாசுரங்கள். கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான், திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து. அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப்பிடித்த பெண்ணாளன்* என்பது ஆண்டாள் பாசுரம்.

## 50. ஸ்ரீவிஷ்ணு புராணாதிகளில் சொன்ன வரலாறு.

ருக்மிணீவிவாஹவ்ருத்தாந்தம் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில்ஐந்தாவது அம்சத்
தில் இருபத்தாருமத்யாயத்தில் அதிஸம்க்ஷிப்தமாக முடிக்கப்பட்டது ருக்மிணீ
யைக் கண்ணன் காதலித்திருந்தான். அவளும் கண்ணனைக் காதலித்தி
ருந்தாள். கண்ணன் அவளைத் தனக்குக் கொடுக்கும்படியாசித்தும்ருக்மிணியின்
உடன்பிறந்தவனான ருக்மியானவன் த்வேஷத்தினாலே கண்ணனுக்குக் கொ
டாமல் சிசுபாலனுக்குக் கொடுப்பதாக வாக்களித்துக் கண்ணாலமும் கோடிக்
கப்பட்டது. அப்போதுஅங்குசிசுபாலாதிகள் வந்து சேர்ந்தது போல ஸ்ரீக்ருஷ்ண
பலராமாதிகளும் வந்து சேர்ந்தனர் விவாஹத்தின் முன்னாளே கண்ணன்
ருக்மிணியைக் கவர்ந்து த்வாரகைக்குத் தேரேற்றிக் கொண்டு போனான்.
பிறகு ப்ரபலயுத்தம் நடக்க, வெற்றிபெற்ற கண்ணன் த்வாரகையில் ருக்மி
ணியை விதிப்படி மணந்து கொண்டான்—என்னுமிவ்வளவே ஸ்ரீவிஷ்ணுபுரா
ணத்தில் கூறிய கதை ஹரிவம்சத்தில் விஷ்ணுபர்வத்தில் 59, 60 ஆகிய
இரண்டு அத்யாயங்களில் இக்கதை சிறிது விரிவாக வருணிக்கப்பட்டது.
அதிலும் ருக்மிணீஹரணம் சுருக்கமாகச்சொல்லப்பட்டு பிறகு நடந்த போர்
மிக விரிவாக வருணிக்கப்பட்டது. ஸ்ரீ பாகவத — தசமஸ்கந்தத்தில்
(52 53, 54 அத்யாயங்களில்) இக்கதை விரித்துரைக்கப்பட்டுள்ளது. அதனை
ஸம்க்ஷேபித்தெழுதுகிறோமிங்கு. விதர்ப்பதேசத்தரசன் பீஷ்மகனென்பவன்
அவனுக்கு ஐந்து புத்திரர்களும் ஒரு புத்திரியுமிருந்தனர். அவள்தான் ருக்மிணி
யென்கிற கடைப்பெண். அவள் இயற்கையில் ஸ்ரீ மஹாலக்ஷ்மியின்
அம்சமாதலாலும், தன் தந்தையைக் காண வருபவர்கள் பலரும் ஸ்ரீக்ருஷ்ண
குண சேஷ்டிதங்களை மேம்படச்சொல்லக் கேட்டவளாதலாலும் கண்ண
பிரான்மீது மிக்க மயல்கொண்டாள். அவனையே மணந்து கொள்வதாக
வுறுதிகொண்டாள். கண்ணனும் ருக்மிணியின் குணாதிசயங்களைக் கேட்டி
ருந்து அவளையே நெஞ்சிற்கொண்டனன் இந்த ஸம்பந்தத்தை உற்ருற
வினரனைவரும் உகந்திருந்தனர். ருக்மியென்கிற தமையன் மட்டும்கண்ணனி
டத்துப் பகை கொண்டிருந்ததனால் தங்கையான ருக்மிணியை சிசுபா
லனுக்கு மணம் புரிவிக்க எண்ணங்கொண்டான் இதையறிந்து மிக
வருந்தின ருக்மிணி ஆப்தனானவோர் அந்தணனைக் கண்ணனிடம் தூதனு
ப்பநினைத்தாள். தன் காதலைக்காட்டும் சில சுலோகங்களைப் பொறித்துப்
பத்ரிகையொன்றுகொடுத்தனுப்பினாள். அதைப் பெற்றுக்கொண்டவ்வந்தணன்
விரைந்துசென்று த்வாரகாபுரியைச் சேர்ந்து கண்ணபிரானைக்கண்டு பசி
தீர்ந்து குசலப்ரச்னங்களெல்லாமான பிறகு ருக்மிணியின் ஸந்தேசத்தை
கோப்யமாகக் கொடுத்தனன். ப்ரேமகனமான அப்பத்திரிகையிலிருந்த
ஏழு சுலோகங்களையும் கண்ணபிரான் மிகுந்த குதூஹலத்தோடுவாசித்துப்
பார்த்து உள்ளம் பூரித்தனன். அந்த ஸப்த ச்லோகியின் ஸாரமான



கருத்தாவது, கண்ணா! உனது திருக் குணங்களைச் செவியுற்ற என்னுடைய
மனம் நாணமற்று உன்பக்கலில் ஆழ்ந்து கிடக்கின்றது. ஸகல குணங்களும்
நிரம்பிய உன்னை எந்தக் குல மகள்தான் விரும்பமாட்டாள்? செந்தாமரைக்,
கண்ணா! உனக்கே அற்றுத் தீர்ந்த வென்னை வேறொரு க்ஷுத்ரன் தீண்டா
தபடி நோக்கிக்கொள்ள வேணும், நான் செய்த பலவகைப் பட்ட
ஸுக்ருதங்களினால் பகவான் உகந்திருப்பனாகில் சிசுபாலன் முதலான
அற்பர்கள் என்னைத் தீண்டாதொழிய வேணும். நாளை வதுவை மண
மென்று நாளிட்டு சிசுபாலனுக்கு என்னைக் கொடுப்பதாக நிச்சயித்திருப்
பதால் நீ சேனைகள் சூழ விரைந்து இவ்விடம் ஏகாந்தமாக வந்து
எதிரிகளைத் தொலைத்திட்டு என்னைக் கைக்கொள்ளவேணும். அந்தப்புரத்
தினுள்ளே யிருக்குமென்னைக் கைக் கொள்வதெங்ஙனமென்று விசாரப்பட
வேண்டா; முன்னாள் தேவீ பூஜைக்கென்று ஒரு புறப்பாடுண்டு மணமக
ளானவெனக்கு; அந்த ஸமயத்தில் என்னைக் கைக்கொள்வது எளிய
வுபாயம். எவ்வகையினாலேனும் உன்திருவருளுக்கு நான் இலக்காகா
தொழியில் வாழகில்லேன்; நூறு பிறவி பிறந்தாகிலும் உன்னைப் பெற்றே
தீருவேன் - என்பதாம். இக் கருத்துக்கொண்ட சுலோகங்களைவாசித்த
கண்ணபிரான் ஸந்தேசம் கொணர்ந்த அந்தணனை நோக்கி 'அவளுடைய
காதலுக்குக் குறைந்ததன்று என்னுடைய காதல்; அனாலும் விரோதி கனத்
திருக்கின்றது; இருக்கட்டும்; எப்படியாவது அவளைக் கைக்கொண்டே
தீருவேன்' என்று சொல்லிச்சாரதியை யழைத்து விரைவில் தேரைக்
கொண்டுவருமாறு கட்டளையிட அப்படியே ரதம் வந்து நின்றது வந்த
அந்தணனுடன் தேரின்மேலேறிப் புறப்பாடு ஓரிரவில் விதர்ப்பதேசம் வந்து
சேர்ந்தாயிற்று. ருக்மிணியின் தந்தை தன்மகனுடைய வாக்குக்கு வசப்
பட்டிருந்ததனால் மகளைச் சிசுபாலனுக்குக் கொடுக்க நிச்சயித்துச்
சடங்குகளும் செய்தாயிற்று பாளை கமுகு பரிசுடைப் பந்தல்களும்
தோரணாலங்காரங்களும் மற்றும் ஆச்சரியமான அமைப்புகளும் கண்டவிட
மெங்கும் கண்களைக் கவருமாறு நிரம்பியிருந்தன. ருக்மிணிக்கும் உத்தம
மான அலங்காரங்களைச் செய்வித்து விவாஹ பூர்வாங்கச் சடங்குகளை
யெல்லாம் நிறைவேற்றி யிருக்கையில், சிசுபாலனுடைய தந்தை தன்மகனுக்குச்
செய்யவேண்டிய விவாஹ விரதங்களைச் செய்வித்து முடித்துப் பெருங்
கூட்டத்துடன் வந்துசேர, பேருவகை கொண்ட விதர்ப்பராஜன் அவர்களை
வெவ்வேறு விடுதிகளிலே யிருத்தினான். கண்ணனுக்கு வைரிகளும் சிசுபால
னுக்குத் துணைவர்களுமான ஸால்வன் ஜராஸந்தன் தந்தவக்ரன் பௌண்ட்
ரகன் முதலானோர் பலரும் வந்து குழுமினர். கண்ணன் வந்து பலாத்காரமாக
ருக்மிணியைக் கைக்கொள்ளப் போகிறானென்று ஒரு ப்ரவாதம் ஊரில்
பரவியிருந்தபடியால் 'அப்படி ஏதேனும் விரோதம் நேருமாகில் போர்மூட்டிப்
புடைத்திடுவோம்' என்றும் சொல்லிக் கொண்டிருந்தனர். இச்செய்தி

பலராமன் செவியில் விழ, கண்ணன் ஒருவனாகப் புறப்பட்டுச்சென்றிருப்பதை யறிந்து அதிசங்கித்து, பெருஞ்சேனைகளுடன் புறப்பட்டு உடனே விதர்ப்ப தேசத்திற்கு வந்து சேர்ந்தனன். க்ருஷ்ண பலராமாதிகள் அப்ரகாசமாகவே ஒருபுறமிருந்தனர். ருக்மிணியோ துடிக்கிறாள். லக்ன வேளை நெருங்குவதை நோக்கியும் கண்ணனிடமிருந்து ஒரு செய்தியும் கிடைக்காதது பற்றியும், போகவிட்ட அந்தணனும் மீண்டு வாராதது குறித்தும் எண்ணுதல பலவு மெண்ணிச் சிந்தைக்கடலுளாழ்ந்து துவண்டுகிடக்கிறாள். சுபசகுனங்கள் தோன்றுகின்றன. ஸுஸமயத்தில் கண்ணனாலனுப்பப்பட்ட அந்த அந்தணன் அந்தப்புரத்திலே வந்து ருக்மிணியைக்கண்டு ஸந்தோஷச் செய்தியைத் தெரிவித்துவிலகினான். பலராமனும் கண்ணனும் பரிஜந பரிவாரங்களுடன் விவாஹ மண்டபத்தருகில் வந்துசேர, அவர்களைக் கல்யாணங்காண வந்தவர்களாக நினைத்த அரசன் அவர்களுக்குத் தகுந்த மரியாதைகளைப்பண்ணி விடுதிகளிலேயிருத்தினான். கண்ணபிரான் வந்தனனென்று செவியுற்ற நகரத்தவர்களனைவரும் வந்து கண்ணனுடைய வடிவழகை நோக்கி நம்முடையருக்மிணிக்கு இவன் கணவனாகவாய்க்கமாட்டானா!'' என்று இதுவே பேச்சாக விருந்தனர். இப்பால் ருக்மிணி அந்தப்புரத்தினின்று புறப்பட்டு இஷ்ட தேவதையைத் தொழுவதற்கு எண்ணிறந்த பரிவாரங்களுடன் வீதியார வருகின்றாள். மத்தளங்கொட்டவும் வரிசங்கம் நின்றூதவும் வாய் நல்லார் நல்ல மறையோதவும் பாப்பனச்சிட்டர்கள் பல்லாரெடுத்தேத்தவும் மந்தகதியாக வருகின்றவள் அங்கு நிற்குமரசர்களை யெல்லாம் கடைக் கணிக்கும் வியாஜமாகக் கண்ணனைக்கண்டு காமுற்ற வண்ணமாகவே தேரின்மீது ஏறப்புக, *கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்பான்,திண்ணார்ந்திருந்த சிசுபாலன் தேசழிந்து, அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக் கைப் பிடித்தபெண்ணாளன் பேணுமூர் பேருமரங்கமே* என்று ஆண்டாளருளிச் செய்தபடி அப்பிராட்டியைக் கண்ணன் கவர்ந்துகொண்டு விரோதி வர்க்கங்களைக் கிழங்கெடுத்துத் துவராபதியிற்சென்று சேர்ந்து சாஸ்த்ரவிதிப்படி மணம் புரிந்து லக்ஷ்மீபதியாக விளங்கினான். ருக்மிணீ விவாஹம் முற்றிற்று. *

## 51. யாதவாப் யுதயப்ரஸ்தாவம்.

இங்கொரு விஜ்ஞாபனம்,—ஸ்வாமிதேசிகன் பணித்த யாதவாப்யுதயத்தில் பதினோராம் ஸர்க்கத்தின்முடிவில் பலராமரேவதிகளின்பரிணயத்தைக்கூறிக்கத்தலைக்கட்டி பன்னிரண்டாம் ஸர்க்கத்தில் ருக்மிணீப்ரஸ்தாவம் தொடங்கப்பட்டது இந்தஸர்க்கம் பூர்த்தியாகப் பெரும்பாலும்ருக்மிணியின் ஸௌந்தர்யலாவண்யவர்ணநப்ரசுரம். அடுத்த பதின்மூன்றும் ஸர்க்கத்தில் கண்ணபிரானெழுந்தருள்வது முதலான சரிதைகள் சொல்லப்படுகின்றன ருக்மிணி ஒரு ப்ராஹ்மணனைக் கண்ணனிடம் தூதனுப்பியதாக ஸ்ரீபாகவதத்தில் சொல்லப்படுகிற கதையை இதில் ஸ்வாமியருளிச் செய்யாததனால் அது



ப்ரக்ஷிப்தமாயிருக்குமோவென்று சிலர் சங்கிக்கிறார்கள். அந்தசங்கைவேண்டா (யாதவா—ஸர்க 13 சுலோ 20ல்)*அஹம் த்வயா தூதமுகேந தூராத் ஸாத்வ்யா ஸமாஹூத இஹோபயாத:*என்பதில் ''தூதமுகேந அஹம்த்வயா ஸமாஹூத' என்றிருப்பது கண்டு தெளிக ... ... ... *

நாச்சியார் திருமொழியில் (9-9)*பூங்கொள் திருமுகத்துமடுத்தூதியசங் கொலியும் சார்ங்கவில்நாணொலியும் தலைப்பெய்வதெஞ்ஞான்றுகொலோ* என்றவிடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில்—''இரண்டவதாரத்தில் இரண்டு பிராட்டிமார்க்கு உதவினது தனக்கொருத்திக்குமே வேண்டும்படியாய்த்து இவள் தசை. சிசுபாலன் ஸ்வயம்வரார்த்தமாக வொருப்பட்ட ஸமயத்திலே புறச்சோலையிலே ஸ்ரீபாஞ்ச ஜந்யகோஷமானது வந்து தரிப்பித்தது ருக்மிணிப்பிராட்டியை'...,' என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இதை யடியொற்றி ஸ்வாமி (யாதவாப்யுதயே-12. ஸ முடிவு சுலோகத்தில்)ருக்மிணிப்பிராட்டியின் துடிப்பு தவிர்ந்து தரிப்பு உண்டானதற்கான நிமித்தங்களைச் சொல்லுமடைவில் *ப்ரத்யாஸந்நம் முஹுருதசரத் பாஞ்சஜந்யப்ரணாத:* என்றருளிச் செய்தார் ஸ்ரீபாகவதத்தில் (10-53-97)*ஏவம்வத்வா ப்ரதீக்ஷந்த்யா கோவிந்தாகநம்ந்ருப, வாம ஊருர் புஜோ நேத்ரம் அஸ்புரந் ப்ரியபாஷிண:* என்று ஆவ்வளவே சுபநிமித்தங்களுண்டானதாகச்சொல்லிற்று ஸ்வாமி தேசிகன் *ஊருஸ் ஸ்வ்யோ நயநகமலம் ப்ருலதாசாபி தஸ்யா: ப்ரவோபந்த* என், அந்த சுபசகுனங்களையும் ஸாதித்து, பாஞ்சஜந்ய ப்ரணாதத்தையும் ஸாதித்துத்தலைக்கட்டினார். *அசோகவனத்தில் மாயாசிரஸ்ஸைக்கண்டுகலங்கியிருந்த பிராட்டியை சார்ங்கவில் நாணொலி தரிப்பித்தது. கண்ணனெழுந்தருளாமை பற்றிக் கலங்கித் துடித்திருந்த ருக்மிணியைப் பூங் கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலி தரிப்பித்தது·என்று பெரியவாச் சான்பிள்ளை யருளிச்செய்தது ... ... ... *

## 52. வத்ஸலா கல்யாண விவரணம்

ஜநமேஜயர் ''வத்ஸலாஹரணம் ப்ரூஹி' என்று கேட்க, ஜைமிநி:— ''இந்த்ரப்ஸ்ரஸ்தே புராபாண்டுபுத்ரா: கில நிவஸிந:, தைவாத் த்யூதப்ரஸங்கேந வநவாஸச் சதை:க்ருத:'' என்று ஆரம்பமுள்ளது எண்பது சுலோகங்களுள்ளன. ஜநமேஜய மஹாராஜனுக்கு ஜைமிநிமஹர்ஷி வத்ஸலாஹரண கதை சொல்லுவதாக வொருபுராணம். குந்தி ஸுபத்ரை அபிமந்யு ஆகிய இவர்களைப் பாண்டவர்கள் ஹரித்வாரத்தில் விதுரக்ருஹத்தில் இருக்கச்செய்து த்ரௌபதியுடன் காட்டுக்குப் புறப்பட்டு விட்டார்கள். அந்த ஸமயம் துர்யோதனன் சகுனியைப் பார்த்துச் சொல்லுகிறான். நம்முடைய யுக்தி ஒன்றும் பலிக்கவில்லையே; எவ்வளவோ சூழ்ச்சிகள் செய்தும் பாண்டவர்கள் இன்னமும் சாகாமல் கொழுத்திருக்கிறார்களே. இதற்குக் காரணம் க்ருஷ்ணன்

அவர்களுக்குப் பக்ஷபாதியாயிருப்பதுதான். அந்தக்ருஷ்ணனை எப்படியாவது
நம்பக்ஷத்தில் சேரும்படி செய்யமுடியாதா? என்று. அதற்கு சகுனி சொன்
னுன்—‘ பலராமனுக்கு வத்ஸலையென்று ஒரு பெண்மகளிருக்கிருளே; அவளை
உன்மகன் லக்ஷ்மணனுக்கு விவாஹம் செய்வித்து விட்டால் கண்ணன்
நமக்கு ஸம்பந்தியாய் விடுவான்; மேற் கொண்டு சொல்லவேண்டியது
என்ன இருக்கிறது?’ என்று. இது நல்ல உபாயமென்று ஆமோதிக்கப்பட்ட
வுடனே விவாஹ நிச்சயம் செய்ய த்வாரகைக்குப் புறப்பட்டு விட்டான்
சகுனி அங்கு வார்த்தை நடந்தது பலராமனுக்கும் ரேவதிக்கும் ஸம்மத
மாயிருந்தது ஆனாலும் கண்ணனுடைய அபிப்பிராயத்தையும் தெரிந்து
கொள்ள விரும்பினார்கள். கண்ணன் ‘முத்தண்ணா! ஸுபத்ரையின் புத்தி
ரனை அபிமந்யுவுக்கு வத்ஸலையைக் கொடுப்பதாக ஏற்கெனவே வாக்குதத்
தம் செய்திருப்பதை மறந்து விட்டீரோ? என்றான். அதற்கு பலராமன் சொன்
னதாவது, ‘மறந்தேனல்லேன், அப்போது பாண்டவர்கள் நல்ல ஸ்திதியிலி
ருந்தார்கள் அந்த ஸ்திதி மாறிவிட்டதே’ என்று. அதற்குமேல் கண்ணன்
அப்படியானால் ஸரி; தைவஸங்கல்பம் போல் நடக்கட்டும்’ என்று சொல்லி
உடனே பலராமன் விவாஹ நிச்சயம் செய்து சகுனியிடம் லக்ன பத்ரிகையு
‘கொடுத்துவிட்டான் அந்தப் பத்ரிகை துர்யோதனனுக்குக் காட்டப்பட்டது
அது பீஷ்மத்ரோணாதிகளின் பார்வைக்கு வந்தது மற்றும் பெரியோர்கள்
அதைப்பார்த்து இதை ஸ்ரீக்ருஷ்ணப்ரபு ஆமோதித்திருக்கமாட்டார்; ஆகவே
இந்த விவாஹம் நடைபெறாது’ என்று சொல்லிக் கொண்டார்கள் இது ஏகா
தமான வார்த்தையேயொழிய வெளிப்படையானதன்று.

துர்யோதனாதிகள் விவாஹ ஸம்பிரமங்கொண்டு த்வாரகைக்கு புறப்
பட்டுவிட்டார்கள் அதற்கு முந்தி துர்யோதனனுக்கு ஓர் ஆலோசனை
தோன்றிற்று. (அதாவது) ஸுபத்ரையினாலும் அபிமந்யுவாலும் இந்த விவா
ஹத்திற்கு ஏதேனும் இடையூறு விளையக்கூடும்; ஆகவே ஓர் உபாயம் செய்
வோம்; இந்த லக்ன பத்திரிகையை ஸுபத்ரைக்கு அனுப்பினோமாகில் அவள்
பார்த்து அஸஹிஷ்ணுதையாலே மூர்ச்சையடைந்திடுவள்; உயிரையும்
துறந்திடுவள்; அபிமந்யுவுக்கும் இதே கதியாகும். பிறகு விவாஹம் இடை
யூறொன்றுமின்றி நடைபெறும்- என்று. பிறகு இவ்வாலோசனையின்படியே
செய்ய, ஸுபத்ரை மூர்ச்சையடைந்து விட்டாள். இதையறிந்த அபிமந்யு
வந்து தாயைத் தேற்றி ‘கண்ணனுடைய உதவியினால் வத்ஸலையை நானே
மணந்து கொள்வேன்’ என்றான் ஸுபத்ரை ஸாரத்யம் செய்ய அபிமன்யு
ரதத்திலேறி த்வாரகைக்கு விரைந்து செல்லப் புறப்பட்டான். ரதம் செல்வ
தற்குக் காடுகள் இடையூறாயிருந்ததனால் தன்னுடைய அம்புகளால் காட்டை
யழித்துக்கொண்டே சென்றான். அந்தக்காடு பீமஸேனனுக்கு ஹிடிம்பியினிடம்
பிறந்த கடோத்கசனுடையது. ஆகையால் அவன் கோபங்கொண்டு அபிமந்
யுவைக் கொன்றுவிட்டான். ஸுபத்ரை தன் மகன் மாண்டதற்காக அழுது



கொண்டிருக்கையில் பகவானே பராசக்தி ரூபமாகவந்து தான் கொண்டு
வந்திருந்த அம்ருத கலசத்தில் ஸுபத்ரையினுடைய இரு கைகளையும் வைக்கச்
சொல்லி, ஒரு கையால் அபிமந்யுவைத் தடவிக்கொடுத்தால் அவன் பிழைத்து
விடுவனென்றும், மற்றொரு கையால், வேறு யாராவது இறந்தால் அவனையும்
பிழைப்பிக்கலாமென்றும் சொன்னார். அப்படியே அபிமந்யு பிழைத்து கடோத்
கசனைக் கொன்றொழித்தான். தன் மகன் மாண்டதற்காக ஹிடிம்பி பஞ்சபாண்
டவர்கள் பேரைச் சொல்லி அலறினாள். அப்போது விசாரிக்கையில் கடோத்
கசன் அபிமந்யுவுக்கு அண்ணனென்று தெரிந்து கொண்ட ஸுபத்திரை
மற்றொரு கையால் அவனைத் தடவிக்கொடுத்து அவனையும் உயிர் மீட்டனள்.

க்ருதஜ்ஞதையுள்ள கடோத்கசன் அபிமந்யுவுக்கு அவசியம் வத்ஸ
லையைத் தான் முன்னின்று மணம் புரிவிப்பதாக வாக்குறுதி கூறினன் தன்னு
டைய அஸுரகணங்களின் உதவியினால் த்வாரகையிலிருந்த கல்யாணப்
பந்தலை ரைவதககிரியில் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டான். அன்றியும்.
துரியோதனன் மனைவியான பானுமதியின் வேஷங் கொண்டு வத்ஸலைக்கு
ஏதோ ஆடையாபரணங்கள் அணிவிக்க வேண்டுமென்கிற வியாஜத்தினால்
மணமகளான அவளையும் அழைத்துவந்து ஸுபத்ரையிடம் சேர்த்து விட்டான்.
இதன்றி-யில் இந்திரஜாலத்தினால் ஒரு கடைத்தெருவை நிர்மாணம் செய்து
அஸுரர்களையெல்லாம் ஆடையாபரணங்களாக வடிவெடுக்கச் செய்து விட்
டான். விவாஹத்திற்காக வந்திருந்த துர்யோதநபரிவாரங்கள் இந்த மாயா
வஸ்த்ரங்களைவாங்கியணிந்துகொண்டன. கடோத்கசன் வத்ஸலையாக வேஷம்
பூண்டனன். அந்த பொய் வத்ஸலையை சகுனிமாமா மாலைமாற்றுவதற்காகத்
தன் தோளில் தூக்கிக்கொள்ள (அந்தப் பெண் உண்மையில் கடோத்கசனே
யாகையால் பாரம் தாங்கமாட்டாமல் இடுப்பொடிந்து விழுந்துவிட்டான் சகுனி.
வரனுக்கு [துர்யோதந புத்ரலக்ஷ்மணனுக்கு] மணமகள் பெண் கருங்குரங
காகத் தென்பட்டதனால் அவன் இந்தக் கல்யாணம் வேண்டாவேயென்ங.
அலறினான். இதே சமயத்தில் துர்யோதனாதிகளின் மாயாவஸ்த்ரங்களெல்லாறுட்
பறந்து போய் அனைவரும்திகம்பரராகி அவமானப்பட்டு அஸுரர்களால்வெரும்
டியோட்டப்பட்டார்கள் இதே தருணத்தில் கண்ணபிரான் முன்னின்று அந்த
ரைவதககிரியிலேயேவத்ஸலைக்கு அபிமந்யுவோடேவிவாஹத்தை நிறைவேற்றி
வைத்தனன். யதோக்தமாகத் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது
வத்ஸலாவிவாஹம் முற்றிற்று. முடிவாகவொருவார்த்தை;—ஹரிகதாகாலக்ஷே
மென்பது மஹாராஷ்ட்ர தேசத்தில் மலிந்திருந்து க்ரமேண தமிழ்நாட்டிற்கு
வந்தது. நாம் ஷோலாபூர் பூனா போயிருந்தபோது அங்கு துலாபாரக் கதையும்
வத்ஸலாகதையும் அடிக்கடி அனேக ப்ரதேசங்களில் நடைபெறுவதாகக்கேட்
டிருந்தோம் இவற்றின் தத்துவத்தைப் பகவானே உணரவேண்டும். ❋

## 53. அவதார வைபவாநுபவம்

நமக்குத் தலையான வேதாந்த சாஸ்த்ரம் சாரீரகமீமாம்ஸை அதுதான் ப்ரஹ்மஸூத்ர மெனப்படுவது அதில் சில பல குறைகளிருப்பதாகக் கண்ட ஆழ்வார்கள் தங்களுடைய திவ்வியப் பிரபந்தங்களிலே அக்குறைகளைத் தீர்த்தருளினர்; முக்கியமாக மூன்று குறைகளை இங்கெடுத்துக் காட்டுகிறேன். எம்பெருமான் திருவவதாரங்கள் செய்தருளுகிருனென்பதை அந்த மீமாம்ஸாசாஸ்த்ரம் செல்லவில்லை அவன் லக்ஷ்மீபதி யென்பதையும் சொல்லவில்லை அவன் நாராயண சப்த வாச்யனென்பதையும் சொல்லவில்லை இவற்றை நம் ஆழ்வார்கள் தமது திவ்யஸூக்திகளில் அடுத்தடுத்து அருளிச் செய்துள்ளார்கள். ப்ரக்ருதோபந்யாஸத்தில் அவதாரமே விஷயமாதலால் இதைப்பற்றி இங்கே விஜ்ஞாபிக்கிறேன். உண்மையில் எம்பெருமான் அவதாரம் செய்தருளாமையினுல்தான் அதைப்பற்றி ப்ரஹ்மஸூத்ரகாரர் பேச முன்வரவில்லை யென்று சிலர்ஸஹஸா சொல்லிவிடுகிருர்கள். வேதத்தில் அவதார ப்ரஸ்தாவம் கிடையாதாகையாலே சொல்லவில்லை என்றும் கூறிவிடுகிருர்கள் அந்தோ! வேதங்களை யெல்லாம் பூர்த்தியாக ஓதினவர்கள். போலஅதுமருள். வேதத்தில் பலவிடங்களில் அவதாரம் ஓதப்பட்டுள்ளது மூன்றிடங்களை மட்டும் இங்கெடுத்துக் காட்டுகிறேன், [அஜாயமாநோ பஹுதா விஜாயதே] இது அந்தர்களனைவருமறிந்த வேதவாக்கியம். எம்பெருமான் கர்மநிபந்தனமான பிறப்பில்லாதவனுயினும் கருணையினுலேபல அவதாரங்களைச் செய்தருளுகிருனென்று பொருள். மற்ஞெரு வேதவாக்கியம் [ஸ உச்ரேயாந் பவதி ஜாயமாந:]அப்பெமான் பிறக்கப் பிறக்க சாணையிலிட்ட மாணிக்கம் போலே ஒளிமல்கப் பெறுகிறனென்பது பொருள். இதை யடியொற்றியே ஆழ்வார் திருவாய் மொழியில் *எளிவருமியல்வினன் நிலைவரம்பில பல பிறப்பாயொளிவரும்* என்றருளிச் செய்தார். இன்ஞெரு வேதவாக்கியம் [பிதா புத்ரேண பித்ருமாந் யோநி யோநௌ] *மகஞெருவர்க்கல்லாத மாமேனி மாயனை அவன் தனக்குப் புத்ரப்ராயரானவர்களைப் பிதாவாகக் கொண்டு யோனிகள் தோறும் பிறக்கிருனென்கை. இந்த ச்ருதியை யுட்கொண்டே நம்மாழ்வார் திருவாய் திறந்தருளும் போதே *உயிரளிப்பானெந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாயிமையோர் தலைவா!* என்றருளிச் செய்தார். ஆக அவதாரங்கள் வேதத்தில் ஸ்பஷ்டமாகச் சொல்லப் பட்டுள்ளனவென்பது தேறிற்று. கீதையில் நாலாமத்யாயத்திற்கு அவதாராத்யாயமென்றே பெயர் அதில் “பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந. * என்று தொடங்கி அவதாரஹேது ப்ரயோஜந ப்ரகார காலாதிகளெல்லாம் விரிவாகச் சொல்லப்பட்டன. ... ... ... ...



## இடையில் ஒரு சிறுவிண்ணப்பம்

இவ்வுபந்யாஸமாலையில் சில மஹநீயர்களின் திருவுருவப்படங்களை வெளியிட்டு அநுபவிக்கவேணுமென்கிற குதூஹலமுண்டாயிற்று. எழெட்டு ஆண்டுகட்குமுன்பு வைதிக லௌகிக மஹநீயமண்டலியென்ஞெரு புத்தகம் 150 பக்கங்களுள்ளதாய் வெளியிட்டு அதில் நூற்றுக்கணக்கான மஹநீயர்களின் திருவுருவப்படங்களை வெளியிட்டிருக்கிறேமென்பது உலகமறிந்தது இப்போது ஸ்வல்பமாகவே வெளியிடலாகிறது

**54 to 60 பொருளல்லாதவென்னைப் பொருளாக்கின ஏழுமஹநீயர்களை அநுதினமும் ஸ்மரிக்கிறேன்**

## 54 பிரதிவாதிபயங்கரம் அண்ணு ரங்காசாரியர் ஸ்வாமி

முதன் முதலாக அடியேனுடைய திருத்தகப்பனுர் பெருமையை விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீ ரங்கநாதசர்மந் கொண்டவர் அண்ணு ரங்காசாரியரென்றே வழங்கும் திருநாமம். நாற்பத்து மூன்று ஸம்வத்ஸரமே இவ்விபூதியை அலங்கரித்தெழுந்தருளியிருந்தார் குரோதி ஸம்வத்ஸரம் பங்குனித் திங்களில் திருநாடலங்கரித்தமையால் இற்றைக்கு எழுபத்தேழாண்டு நிரம்பி விட்டது அடியேனுடைய பதினுன்காவது பிராயம் முடிந்த ஏழா நாளில் பரமபதித்தபடி. அவரோடு நெருங்கிப் பழகினவர்களும் அவரிடத்தில் கல்வி பயின்றவர்களும் இற்றைக்குப் பதினைத்து ஸம்வத்ஸரங்களுக்கு முன்புவரையில் இருந்தார்கள். அப்படிப்பட்டவர்கள் இப்போது வாழ்வதாக ஒருவரும் நினைவுக்கு வரவில்லை அவருடைய திருவுருவப்படமும் சேகரிக்கப்படவில்லை. அக்காலத்தில் தேவப்பெருமாள் ஸன்னிதி வீதியிலுள்ள வானமாமலை மடத்தில் ஸம்ஸ்க்ருத பாடசாலையொன்று பிரபலமாக நடந்து கொண்டிருந்தது அதில்

(திருத்தகப்பனார்) ஸாஹித்யத்திற்கும் திவ்யப்ரபந்தத்திற்கும் உபாத்யாயராக எழுந்தருளியிருந்தார். அப்பாடசாலையில் நூற்றைம்பது வித்யார்த்திகள் ஸம்ஸ்க்ருத பாடங்கள் பயின்று வந்தார்கள் காலை 10 மணிக்கும் மாலை 5 மணிக்கும் பாடசாலை விடும்போது மாடவீதிக்குத் திரும்பும் வித்யார்த்திகள் 75 பேர்களும் மேற்கே திரும்பும் வித்யார்த்திகள் 75 பேர்களும் காணப்படுவர்கள் ஸ்கூல் என்று சொல்லக்கூடிய பள்ளிக்கூடம் அப்போது சின்ன காஞ்சியிலோ பெரிய காஞ்சியிலோ ஒன்றுகூட ஏற்பட்டிருக்கவில்லை. அதனால்தான் அப்போது ஸம்ஸ்க்ருத வித்யாபாட ப்ரவசனங்கள் குறையற நடந்து வந்தன.

பிதாக்கள் புத்திரர்களுக்கு நன்மை புரிவது ஆச்சரியமன்று. ஆனால் என் தகப்பனார் எனக்கு நன்மைகள் புரிந்தது மிக மிக ஆச்சரியம் என்னவேணும் எனது ஐந்தாவது பிராயம்முதல் தாம் ஜீவித்திருந்த வரையில் ஒரு நிமிஷமும் அகல விடாமல் பதினன்கு பிராயத்திற்குள் காவியங்கள் நாடகங்கள் சம்புக்கள் அலங்கார நூல்களைத் தாமும் பிறரைக் கொண்டும் பயில்வித்ததை நினைக்குங்கால் ''எனக்காரும் நிகரில்லையே'' என்று கூசாமல் அநுஸந்திக்கும்படியுள்ளது காவியங்களில் ரகுவம்சம் மாககாவியம் மேகஸந்தேசம் நைஷதம் முதலானவை வேங்கடாத்வரியின் விச்வகுணாதர்சம், வரதாப்யுதய மென்கிற ஹஸ்திகிரிசம்பூ, உத்தரசம்பூ, காளிதாஸ பவபூதி முராரிகளின் நாடகங்கள் காதம்பரி முதலானவை இவற்றைப் பயில்வித்தது இன்றைக்கும் அன்று போல் பரீக்ஷை கொடுக்கும்படியுள்ளதென்றால் இந்த பாக்கியம் என்னொருவனுக்கே ஏற்கும். திருத்தகப்பனார் திருமாளிகையிலேயே பாடசாலையை நடத்தும்படியாகத் திருமேனியில் அபாடவம் நேர்ந்திருந்த காலத்தில் காவ்ய பாடங்கள்முதல் உத்துங்க பாடங்கள்வரையில் நடைபெறும். எல்லாவற்றிலும் என்னை உடனிருக்கச்செய்து அருள் புரிந்தது யாவச்சரீர பாதமன்று; யாவதாத்மபாவி மறக்கத்தக்கதன்று. ✻

## 55 ஸ்ரீ அழகியமணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி

தேவப்பெருமாளது கீழண்டை கோபுரவாசலில் விளங்கும் அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி மடத்தில் 1916ஆம் வருடத்திற்குமுன்பு நாற்பது ஸம்வத்ஸரகாலம் ஆஸ்தானமலங்கரித்து விளங்கின ஜகத்ப்ரஸித்த மடாதிபதி ஜீயர்ஸ்வாமி ஷஷ்டி ஜீயர் ஸ்வாமியென்று வழங்கப்பட்டுவந்தார் சதுஷ்ஷஷ்டி கலாவல்லப பரவஸ்து திருவம்சத்தில் அவதரித்ததனால் ஷஷ்டியார் என்று குடும்பப்பெயராக வழங்குவது. அந்தரீதியில் ஷஷ்டி ஜீயர் ஸ்வாமியென்றே இந்த ஜீயர் ஸ்வாமி ப்ரஸித்தி பெற்றிருந்தார். இந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் அடியேனுக்கு ஸாக்ஷாத்மாதாமஹராவர். இவர் பூர்வாச்ரமத்தில் ஷஷ்டி வரதாசாரியர் ஸ்வாமியென்று ப்ரஸித்தராய் தென்மொழியும் வடமொழியும் திகழ்ந்த நாவரராய் விசேஷித்துத் தமிழ்ப் புலவர் திரளில் ப்ரதம பரிகணிதராய் விளங்கி வந்தார் சடகோப நிலய பாடசாலையில் ஸ்ரீமத் திருப்புட்குழியப்பா ஸ்வாமி காலத்தில் தமிழிலக்கண விலக்கியங்களுக்கு உபாத்யாயபதவியை அலங்கரித்துவந்தார். கீர்த்திமூர்த்தியான ஸ்ரீ வை. மு. சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமியைப்பற்றிக் கேள்விப்படாதாரிலர். அந்த ஸ்வாமி ஸ்ரீஉவே. புன்னை சீமாச்சார் ஸ்வாமியென்பாருடைய மாணாக்கர். அந்த சீமாச்சார் ஸ்வாமி ப்ரக்ருதஜீயர் ஸ்வாமி ஸன்னிதியிலேயே (பூர்வாச்ரமத்தில்) மாணாக்கராக வாழ்ந்து தேர்ச்சி பெற்றார்.

பூர்வாச்ரமத்தில் ஸ்வாமியிடத்தில் தமிழ் வாசிக்காத தென்கலையாரோ வடகலையாரோ காஞ்சியிலோ காஞ்சீப்ராந்தங்களிலோ கிடையரர். அக்காலத்தில் நன்னூல் முதலிய இலக்கண நூல்களும் கம்பராமாயணம் அஷ்டப்பிரபந்தம் முதலிய இலக்கிய நூல்களும் பெரும்பாலும் அச்சேறாமலிருந்தன; சில அச்சேறியிருந்தும் துர்லபங்களாயிருந்தன. அவற்றை ஜீயர் ஸ்வாமி தமது திருக்கையாலெழுதிக்கொடுத்து அடியேனுக்குப் பாடம் செய்வித்தருளின பரமாநுக்ரஹத்தை அடியேன் நினையாத நாளில்லை. திருத்தகப்பனார் பரமபதித்த பிறகு ஏறக்குறைய பத்து ஸம்வத்ஸரங்கள் ஸ்ரீ ஜீயர்ஸ்வாமி எழுந்தருளியிருந்தார். ரஹஸ்ய வ்யாக்கியானங்களும் நாலாயிரதிவ்வியப்ரபந்த வ்யாக்கியானங்களும் வரியடைவே காலக்ஷேபம் ஸாதித்தருளியதும் ஜீயர் ஸ்வாமியே.

## 56 ஸ்ரீ ஜகத்தரு காதி ஸ்வாமி

'ஸ்ரீமுககும்பஸ்வாதீஜாதமநந்தார்ய ஸூரிமஹமீடே, ஸ்ரீக்ருஷ்ண ஸூரிதநயம் வாதிபயங்கரகுலாப்திசந்த்ரமஸம்'' என்கிற நித்யாநுஸந்தேய திருநக்ஷத்திரத்தனியனின்படி ஸ்ரீமுகஸம்வத்ஸரம் மாசி மீ



ஸ்வாதீ நக்ஷத்திரத்தில் இந்த விபூதியில் வந்து தோன்றி அறுபத்திரண்டு ஸம்வத்ஸரம் வாழ்ந்தருளி ஸ்ரீ ஸ்வாமி செய்தருளின அதிமாநுஷ க்ருத்யங்கள் அவாங்மனஸகோசரமென்று ஒரே வார்த்தையில் தலைக்கட்டத் தக்கது. ஆயினும் ஸ்வல்பமே விஜ்ஞாபிக்கிறேன் ஸ்ரீ காஞ்சியில் ஸன்னிதி வீதியில் வடவண்டைவாடையில் ஸ்ரீஸுதர்சனாழ்வானுடைய ரக்ஷைபெற்ற மிகப் பெரிய திருமாளிகை 'காதிஅனந்தாசாரியர் திருமாளிகை' என்றும் 'காரணை யனந்தாசார் திருமாளிகை என்றும் ப்ரஸித்தி பெற்றது இந்த ஸ்வாமியின் முன்னோர்கள் காரணை யென்னும் அக்ரஹாரத்தில் வாழ்ந்து வந்ததனால், ஏறக்குறைய நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்பு வாழ்ந்தவரும் முதன்முதலாக வடதேசங்களுக்கெழுந்தருளி சிஷ்ய ஸம்பத்தைப் பெற்றவரும் புஷ்கரக்ஷேத்ரத்தில் விக்ரஹப்ரதிஷ்டை பெற்றிருப்பவருமான ஸ்ரீமதுபயவே பெரிய அனந்தாசார்ய ஸ்வாமிக்கு 'காரணை அனந்தாசாரியர்' என்கிற ப்ரஸித்தியிருந்துவந்தது அந்த மஹாஸ்வாமியின் ஸ்தானத்தில் எழுந்தருளியிருந்த காதி ஸ்வாமி இளமையில் அடியேனுடைய திருத்தகப்பனரிடம் சில வருஷங்கள் கல்வி பயின்று திருப்பதியில் எழுந்தருளியிருந்த ஜகத்விக்க்யாத வித்வத்ஸார்வபௌமரும் தமக்கு ஸாக்ஷாத்மாதுலருமான ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீ ரங்காசார்ய ஸ்வாமி திருவடிவாரத்தில் சென்று பத்தெட்டு ஸம்வத்ஸரங்கள் அங்கேயே குடிவாழ்ந்து ஸகல சாஸ்த்ர பாரங்கதராய் தீப துத்பந்ந ப்ரதீபமாய் விளங்கினர். அத்த காலத்தில் காஞ்சியில் அவருடைய நிர்வாஹங்களையெல்லாம் திருத்தகப்பனரே முக்கியஸ்தராயிருந்து பார்த்துவந்தார். திருத்தகப்பனர் பரமபதித்த



போது ஸ்ரீகாதி ஸ்வாமி மார்வாடத்தில் சிஷ்ய ஸஞ்சாரமாக எழுந்தருளியிருந்ததனால் செய்தியறிந்து சிலநாளைக்கெல்லாம் காஞ்சீபுரி யெழுந்தருளி அடியேனை த்விதீய புத்ரனாக அபிமானித்தருளித் தமது திருமாளிகையிலேயே இருத்திப் பதினேழாவது பிராயம்வரையில் நியாய



ஸ்ரீமதுபயவே காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் ஜகத்குரு காதி
**கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி**

வியாகரணங்களை அதிகரிப்பித்தருளினர் ஸ்ரீ காதி ஸ்வாமி. இடையிடையில் சிஷ்யஸஞ்சாரார்த்தமாக மாதக் கணக்கில் வடநாட்டுக்கு எழுந்தருளநேரும் அப்போதுகளில் அடியேனையும் விடாமல் உட

னழைத்துச் சென்று நிர்விக்நமாக வித்யாப்யாஸத்தை நடத்திப்போருவர். சில ஸமயங்களில் தம் திருமாளிகைக்கு அருகே யெழுந்தருளியிருந்த வித்வான் இளங்காடு ரங்காசாரியர் ஸ்வாமியிடம் வாதக்ரந்தங்கள் வாசிக்கும்படி நியமித்தருள்வர் திருத்தகப்பனுர் எழுந்தருளியிருந்தபோதே (கூடஸ்த) அண்ணு ஸன்னிதியில் வேதாந்த வைஜயந்தீ என்கிற பாடசாலையை ஸ்தாபித்தருளி ஏறக்குறைய பத்து ஸம்வத்ஸரங்கள் அதன் மூலமாகப் பல உபாத்யாயர்களைக்கொண்டு வித்யாப்யாஸம் விசேஷமாகச் செய்வித்தருளினுர் ஸுதர்சன அச்சுக்கூடம் நிறுவி அதன் மூலமாக அனேக சாஸ்த்ரக்ரந்தங்களையும் ஸம்ப்ரதாய க்ரந்தங்களையும் அச்சிடுவித்து மஞ்ஜுபாஷிணி யென்னும் ஸம்ஸ்க்ருத பத்ரிகையை வாரந்தோறும் நடத்திவந்தது முதலான வைபவம் வாசாமகோசரம். ... ... ... ※

## 57 ஸ்ரீமத் புதுப்பேர் வேங்கடாசார்ய ஸ்வாமி

இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் ஸாஹித்ய வியாகரணங்கள் பயின்று சிறந்த வித்வானுய் ஸ்ரீ காஞ்சியில் ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமி ஸ்தாபித்திருந்த வேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் இரண்டு மூன்ருண்டு அலங்காரக்ரந்தங்களுக்கும் வியாகரண சாஸ்த்ரத்துக்கும் ப்ரதாநோபாத்யாயராக எழுந்தருளியிருந்தார். இவரிடத்தில் குவலயாநந்தரஸகங்காதராதிகளும் ஸித்தாந்தகௌமுதியும் அதிகரித்தேன. அந்த ஸ்வாமி சிலவாண்டுகள் கழித்து உத்தமாச்ரமியாய் அழகிய மணவாள ஜீயராயிருந்து கன்னடதேசத்தில் திருநாடலங்கரித்தார் ※

## 58 ஸ்ரீமதுபயவே மாம்பள்ளம் ஸுதர்சனாசார்ய ஸ்வாமி

இந்த மஹாபுருஷர் திருநாட்டுக்கெழுந்தருளி 35 ஸம்வத்ஸரமாகிறது, உலகத்தில் மிகவும் ப்ரஸித்தமாக வழங்கிவருகின்ற ×ந பூதோ ந பவிஷ்யதி× என்கிற வாக்கியமானது இந்த ஸ்வாமி ஒருவருக்கே தகும். இந்த உலகத்தில் மற்ற மஹான்கள் ஸம்பாதிக்கும் யோக்யதைகள் மற்றும் பலரிடத்தும் காணக்கூடியவையே யாகும். இந்த ஸ்வாமி ஸம்பாதித்திருந்த யோக்யதைகள் முக்காலத்திலும் அநிதரஸாநாரணமென்பதை விஜ்ஞாபிப்பதற்கும் அடியேன் அநர்ஹன் தென்னுடு முழுதிலும் இவருடைய யோக்யதைகள் நன்கு பரவியிருப்பதால் அடியேன் எடுத்துரைப்பது பிஷ்டபேஷணமே யாகும். வேதத்திலும், ஆழ்வாருளிச் செயல்களிலும், ஆசார்ய திவ்ய ஸூக்திகளிலும், இதிஹாஸ புராணங்களிலும், காவ்ய நாடகாலங்காரங்களிலும் இந்த ஸ்வாமி பரிச்ரப்பட்டு ஸம்பாதித்திருந்த யோக்யதை ஒருவர்க்கும் ஒரு புருஷாயுஸ்ஸில் ஸம்பாதிக்கக் கூடியதல்ல என்பது ஸத்யம், இந்த ஸ்வாமி பெரும்பாலும் வித்யாக்ரஹணம் செய்தது ஸ்ரீபெரும்பூதூரில். திவ்யதேச வாஸத்தையே பரமபுருஷார்த்தமாகக்கொண்டு பலபல திவ்யதேசங்களில் வாழ்ந்துகொண்டு நியதமு மத்தாணிச் சேவகம் புரிந்தார் நம்பெருமாள் ஸந்நிதியில் ஏழெட்டு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து வேதபாராயண கைங்கரியம் நிர்வஹித்தருளினுர். ஸ்ரீ காஞ்சியில் வேத வேதாந்தவைஜயந்தீ பாடசாலையைத் தொடங்கிவைத்தவர் இந்த ஸ்வாமியே; அடியேன் முதலான இருபது வித்யார்த்திகளுக்கு க்ரமாந்தம் ஓதுவித்தருளினுர். ... ... ※

## 59 ஸ்ரீ விரக்தி பாஷ்யகாராசார்ய ஸ்வாமி

திருப்புட்குழி ஸமீபத்திலுள்ள முஸர்பாக்கத்தில் ஸ்ரீமத் விரக்தி பாஷ்யகாரர் ஸ்வாமி யெழுந்தருளியிருந்தார். இவர் வியாகரண மீமாம்ஸைகளில் பரிபூர்ணபாண்டித்யம் பெற்றிருந்ததோடு உபய வேதாந்தங்களிலும் அகாதமான ஞானமுடையவர் அவரை 'நீறுபூத்த நெருப்பு' என்றே யாவரும் சொல்லுவர்கள் காஞ்சீபுரத்தில் ஸ்ரீ யதோக்தகாரி ஸன்னிதி ப்ராந்தத்திலுள்ள பல பெரியார்கள் ஸம்ப்ரதாய க்ரந்தங்களையெல்லாம் காலக்ஷேபம் செய்யவேணுமென்று ஆவல் கொண்டு இந்த மஹாஸ்வாமியைக் காஞ்சிக்கு எழுந்தருளப்பண்ணி அவ்விடத்திலேயே ஸ்திரவாஸமாகவைத்து யதோக்தகாரி ஸன்னிதியில் பொய்கையாழ்வார் திருமண்டபத்தில் நித்யமும் காலைமாலைகளில் ஸம்ப்ரதாய க்ரந்த ப்ரவசநம் நடந்துவரும்படி ஏற்பாடு செய்திருந்தார்கள். அப்படி 15, 20 வருஷகாலம் நடந்தது. அக்காலத்தில் பிரபல உத்யோகஸ்தர்கள், வக்கீல்கள், வைதிகர்கள் பலரும் இந்த ஸ்வாமி பக்கலிலே உபயவேதாந்த ரஹஸ்யங்களை யெல்லாம் வரியடைவே ச்ரவணம் செய்துவந்தார்கள். இந்த ஸ்வாமி ஸன்னிதியில் மைஸூர் அனந்தாழ்வார் வாதாவளிகள் அதிகரித்தேனடியேன். ... ※

## 60 ஷஷ்டி திருவேங்கடாசார்ய ஸ்வாமி

இவர் அடியேனுடைய ஸாக்ஷாந் மாதுலர். அடிக்கடி அடியேன் உதாஹரிக்கும் ஸ்ரீமத்பரமஹம்ஸ அழகியமணவாளராமாநுஜ (ஷஷ்டி) ஜீயர் ஸ்வாமியின் பூர்வாச்ரம—ஔரஸகுமாரர் ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியில் நியாயமீமாம்ஸைகளை அதிகரித்து ஸ்ரீபாஷ்யமும் ஸேவித்து அனந்தாழ்வார் வாதார்த்தங்களிலும் தேர்ச்சி பெற்றவர் ஜீயர் ஸ்வாமி ஸன்னிதியிலே ஸம்ப்ரதாய க்ரந்தங்களையெல்லாம் பலகாய் ஸேவித்தவர். இவருடைய அப்ரதிம பாண்டித்யம் ப்ரகாசிக்க வழியில்லாமல் போயிற்று. ஏனென்னில், அடியேனுடைய திருத்தகப்பனார் இளமையில் திருநாடலங்கரித்தபடியால் எங்களுடைய பூர்விகமான சுரோத்ரியக்ராம பரிபாலன பாரத்தை அடியேனுடைய திருத்தாயார்க்குத் துணையாக இவர் ஏற்றுக்கொள்ள நேரிட்டது க்ராமத்தில் பலவகையான வ்யவஹாரங்களும் தொடர்ந்ததனால் இவர் அஸ்தமிதாந்யபாவராய் அவற்றிலே வியாபரிக்க நேர்ந்தது ப்ரவசனத்திற்கு வழியில்லாமல் போயிற்று. ஓர் இருபத்தைந்து ஸம்வத்ஸரகாலம் இங்ஙபனயான காலக்ஷேபத்தினால் வித்யாவ்யாஸங்கம் அநவகாசபராஹதமாயிற்று ஆயினும் சாஸ்த்ரங்களில் ஆழ்ந்த வ்யுத்பத்தியுடையவராயிருந்தார் அடியேனுக்கு ஜ்ஞாநாபிவிருத்தியைச் செய்வித்த மஹோபகாரகர்களில் இவரும் பரிகணநீயரே. ... ... ※

## 61. நிகண்டுக்களின் கோளாறுகள்

இக்காலத்தில் பலர் நிகண்டுக்கள் எழுத விரும்புகிறார்கள் தம் தம் நெஞ்சில் தோன்றினபடி எதையாவது எழுதி அச்சிட்டு வெளியிட்டு விடுகிறார்கள் திருஞான சம்பந்தப்புலவரென்னுமொரு பெரியார் 'சைவ வைணவப்பெயர் விளக்கம்' என்றொரு நிகண்டு எழுதிப் பதிப்பித்திருக்கிறார். சைவசம்பிரதாயத்திலும் வைணவ சம்பிரதாயத்திலும் தோன்றியுள்ள பல பெரியார்களின் பெயர்களை அகராதி முறையில் வரிசைப் படுத்தி அவர்களின் வரலாறுகளையும் ஒருவாறு எழுதியுள்ள இந்நூலின் சில பகுதிகளை நாம் யாத்ருச்சிகமாகக் காண நேர்ந்தது. ஸ்ரீ வைஷ்ணவ ஆசிரியர்கள் பெயர்கள் சிலவற்றை உற்றுநோக்கினோம், பெரும்பாலும் விபரீதமாகவே காண்கிறது, அப்புள்ளார் என்கிற பெயரை





ஸ்ரீமதுபயவே. அ. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி
லக்ஷ்மீபவனம் — மன்னார்குடி.

## ஸ்ரீ அண்ணாஸ்வாமி அய்யங்கார் 38வது வித்வத் ஸதஸ்ஸு.

**மன்னார்குடி**

நாளது துன்மதி௵ பங்குனி௴ 5௳ (18—3-82) வியாழக்கிழமை காலை 9 மணிக்கு உபக்கிரமித்து 7௳ (20—3—82) சனிக்கிழமை முடிய ஷ வித்வத் ஸபை மன்னார்குடி அக்ரஹாரம் முதல் தெரு "லக்ஷ்மீ பவனத்தில்" நடைபெறும். ஷ தேதிகளில் தினம் காலை 8 மணி முதல் 11 மணிவரை வேதம், திவ்யப்பிரபந்தம், மதத்ரய வேதாந்தங்களிலும் பரீக்ஷை, வாக்கியார்த்தங்களும் பிரபல வித்வான்களின் உபன்யாசங்களும் நடைபெறும்

வித்வான்களும், ஆஸ்திகர்களும் விஜயம் செய்ய வேணுமாய் பிரார்த்திக்கப்படுகிறது.

யெழுதி அவருடைய வரலாறும் எழுதிவருகையில் ''இவர் திருவாய்மொழிப் பிள்ளையென்னும் ஆசிரியரின் சீடரான வரவரமுனியென்கிற மணவாளமாமுனியால் தாபிக்கப்பட்ட எட்டு சிச்சர்களில் ஒருவர். இவர் ஆத்ரேய குலத்துத் தோன்றியவர். பத்மநாபாசாரிய ரென்பவருடைய செல்வப்புதல்வர், வேதாந்ததேசிகரென்கிற உலகப் பிரசித்தரான பேராசிரியர் முதலானுர் இவருடைய சீடராவர்'' என்று எழுதப்பட்டுள்ளது. இந்த விபரீதத்தை என்னவென்று சொல்லுவோம். மணவாள மாமுனிகளின் சிஷ்யர்களான அஷ்டதிக்கஜாசாரியர்களில் அப்புள்ளார் என்பவர் ஒருவருளரென்பது உண்மையே. அவர் ஆத்ரேயகுலத்தில் தோன்றியவருமல்லர், பத்மநாபாசாரியரென்பவருடைய புதல்வருமல்லர் வேதாந்ததேசிகருடைய குருவுமல்லர் ஆத்ரேய பத்மநாபாசார்யருடைய புதல்வரான அப்புள்ளார் நடாதூரம்மாளென்னும் பேராசிரியருடைய பதம்பணிந்தவர் அவர் மணவாளமாமுனிகளுக்கு மிக முற்பட்டவர் அப்பேராசிரியரைப் பணிந்தவர் வேதாந்த தேசிகர் என்பது உண்மையே ஆகவே அப்புள்ளாரென்னும் பெயரால் இருவருளர் ஒருவர் தேசிகருடைய ஆசாரியர் மற்றொருவர் மணவாளமாமுனிகளின் சிஷ்யர் உண்மை இப்படியிருக்க, தேசிகர் அப்புள்ளாருடைய சிஷ்யர் என்கிற வளவி அறிந்திருந்து அந்தக்கிடாம்பியப்புள்ளாரையும் மணவாள மாமுனிகளின் சிஷ்யரான அப்புள்ளாரையும் ஒருவராகவே மயங்கி விபரீதமாக எழுதிவிட்டார் இப்படி ஒன்றிரண்டல்ல; பல விபரீதங்கள் காண்கின்றன பிள்ளைலோகாசார்யர் செய்த நூல்களைப் பிள்ளைப் பெருமாளையங்கார் செய்ததாகவும், அவர் செய்த நூல்களைப் பிள்ளை லோகாசார்யர் செய்ததாகவும் எழுதப்படுகிற இத்தகைய விபரீதங்களும் பல பல. ... ... ... ✻

## 62 இதுவுமது

பல வருடங்களுக்கு முன்னமே அச்சிடப்பட்டு வெளிவந்திருக்கின்ற நிகண்டுகளிலும் இப்படிப்பட்ட விபரீதங்களை விபுலமாகக் காண்கிறோம் சென்னைப் பச்சையப்பன் கலாசாலைத் தமிழாசிரியர் சிங்கார வேலு முதலியாரவர்கள் அபிதான சிந்தாமணி யென்றொரு பெரிய நிகண்டு இயற்றி 1934ஆம் வருடத்தில் அச்சிடுவித்து வெளியிட்டிருக்கிறார் அதில் மொத்தம் 1634 பக்கங்களுள்ளன அதில் 1242ஆம்





ஸ்ரீமதுபயவே V N வேங்கடவரதாசாரியர் ஸ்வாமி. B.A., B L.,
(அட்வகேட் எழும்பூர்)கோயிலில் திருமலை பெருமாள் கோயில்
தேவஸ்தான தர்சனஸ்தாபகர்

பக்கத்தில் மணவாளமாமுனிகள் என்று பெயர் குறித்து அவருடைய வரலாறும் எழுதப்பட்டுள்ளது அவர் க்ருஹஸ்தராயிருந்தபோது அரசாங்கத்தில் உத்யோகஸ்தராயிருந்தாராம்; ஏராளமான பணம் கையாண்டு விட்டாராம் அதைப்பற்றிக் கேள்வியுண்டான காலத்தில் பயப்பட்டு ஸந்நியாசியாக மாறிவிட்டாராம் இப்படியெல்லாம் கைபோன போக்கில் பலரைப்பற்றிப் பல கதைகள் எழுதப்பட்டிருக்கின்றன இதை ஆதாரமாகக்கொண்டு வைணவர்களும் இக்கதைகளைத் தங்கள் புத்தகங்களில் ஆதரிக்கத் தொடங்கியிருக்கிறார்கள் 600 ஆண்டுகட்கு முன்பிருந்த வைணவப்பேராசிரியர்களின் வரலாறுகள் குருபரம்பராப்ரபாவம் முதலிய நூல்களைத் தவிர்த்து வேறு நூல்களால் அறியப்பட ப்ரஸக்தியில்லை

ஒருவருடைய வரலாற்றை மற்ருெருவருடைய வரலாருக மயங்கியெழுது வதும், காரண விசேஷங்களால் கற்பனைபண்ணி யெழுதுவதுமான ஸம்பவங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன சைவசமய குரவர்களின் வரலாறுகளை வைணவர்கள் தங்கள் பரம்பரையில் தெரிந்துகொள்ள ப்ரஸக்தியில்லை அப்படியே சைவர்களும் ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களின் வரலாறுகளைத் தெரிந்துகொள்ள இடமில்லை. இதற்காகப் பிறருடைய உதவியை நாடும்போது அவர்கள் மாச்சரியம் காரணமாகவோ தமது விபரீதஜ்ஞானம் காரணமாகவோ எழுதிக்கொடுப்பதை வேதமென நம்பி வெளியிட்டு விடுகிருர்கள் நாளடைவில் அவை பிரபலப்பிரமாணமாக உலகில் கௌரவம் பெற்று விடுகின்றன. இவ்வநியாயங்களை எங்கே முறையிடுவது.

இருளும் மருளுமான இத்தகைய அபாஸ நூல்களைக் கண்டு பிராமாணிகர்கள் மருளவேண்டாவென்று இப்போது சுருக்கமாக எச்சரிக்கை செய்து நிற்கிறோம். ... ... ✻

## 63 அபத்தங்களில் ஓர் ஆச்சரியம்

ஸந்தியா வந்தன மந்த்ரம் தர்ப்பண மந்த்ரம் ஸ்தோத்ர பாடங்கள் முதலானவை இளமையில் கற்பிக்கப்படும்போது கற்பிக்கின்றவர்களாலோ கற்கின்றவர்களாலோ அவற்றில் அபத்தங்கள் இமவந்தந் தொடங்கியிருங்கடலளவும் பெரும்பாலும் ஏகரீதியாயிருந்து வருவது மிகவும் ஆச்சரியத்தைத் தருகின்றது ஒன்றிரண்டு விஷயங்கள் கேண்மின்.

திருக்கச்சிநம்பிகள் அருளிச்செய்த தேவராஜாஷ்டகம் ஸகல தேசங்களிலும் பரவியுள்ளது இதில் 'ஸம்ஸார மருகாந்தாரே துர்வ்யாதி வ்யாக்ரபீஷணே, விஷய க்ஷுத்ரகுல்மாட்யே த்ருஷாபாதப சாலிநி' என்பது ஒரு ச்லோகம். இந்த ச்லோகத்தின் முடிவில் சாலிநி என்றுதானுள்ளது; சாலிநே என்று கிடையாது அது அநந்விதம் ஆனால் மற்ற மூன்று பாதங்களும் ஏகாராந்தமாகவே யிருப்பதால் இதுவும் ஏகாராந்தமாகவேதான் இருக்கவேணுமென்று கருதியோ வேறு எந்த காரணங்கொண்டோ சாலிநே என்றே சொல்லிவருமவர்களை நம் நாட்டில் பெரும்பாலும் காண்கிறோம். ஒருகால் யாத்திரையில் பல வூர்களில் பலபேர்கள் வாயில் இந்த ச்லோகம் அநுஸந்திக்கப்படுவதைக் கேட்க நேர்ந்தது; ஒருவர் தப்பாமல் சாலிநே என்றே சொல்லக்கேட்டோம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



**ஸ்ரீ உ, வே. ஸ்ரீரங்கம்**
**குண்டலம் R. திருமலாசாரியார்**

[திருவரங்கச் செல்வன் வேதபாராயண கைங்கர்ய நிரதராயிருந்த குண்டலம் ஸ்ரீ உ. வே வித்வான் ரங்காசாரியசர் ஸ்வாமியின் குமாரர்; தகப்பனுரை அடியொற்றி ஷ்டி கைங்கர்யத்தில் ஈடுபட்டுள்ளவர்.]

# காஞ்சி மஹான்

ஸ்ரீ உ வே ஸ்ரீரங்கம் குண்டலம் R. திருமலாசாரியர்

காஞ்சியில் வருடந்தோறும் நடைபெறும் வரதராஜரின் வைசாகோத்ஸம் அனைவரு அறிந்ததே. அதுபோல கடந்த 32 வருடங்களாக வருடம்தோறும் நடைபெற்றுவரும் பங்கு விசாகோத்ஸவமும் (ஸ்ரீ உ. வே. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமியி அவதாரத் திருநாள்) அனைவரும் அறிந்த உத்ஸவமாகும். இவ்வுத்ஸவத்தின் நாயகரா ஸ்வாமி இந்த இருபதாம் நூற்றுண்டில் நமக்குக் கிடைத்த தவப்பயனுவார்.

நம்முடைய வேதங்கள் பற்றிய ஆராய்ச்சிகளில் 50 ஆண்டுகளுக்கு மேலாக ஈடுபட் வருவதுடன் தமக்கே உரிய முறையில் அபூர்வமான விளக்கங்களை வெளியிட்டிருக்கிறு வேதபாஷ்யங்களிலும் பதபாடங்களிலும் காணப்படும் சில குற்றம் குறைகளைச் சுட்டி காட்டிய தைரியமும் பெருமையும் இவர் ஒருவருக்கே உண்டு

நமது ஸம்ப்ரதாயத்தைப் பற்றி ஆயிரக்கணக்கான உபந்யாஸங்களும் புத்தகங்களு வெளியிட்டு நம் ஸம்ப்ரதாயத்தை வளர்த்து வருகிறுர். இதற்கு ஆகும் செலவைப் பற்றியோ பணத்தைப் பற்றியோ ஒருநாளும். கவலைப்படுவதில்லை. விழித்திருக்கும் நேரமெல்லா இத்தொண்டைப் பற்றியே நினைப்பு இதுவரையில் காபி தேனீரை ருசி பார்த்த கிடையாது.

92 வயதானுலும் பணியில் தளர்ச்சி இல்லை. தன்னம்பிக்கை அதிகம். ஏற்ற பணி அடிமுதல் நுனிவரையில் தானே செய்வார் இன்றைக்கும் பன்னிரண்டு திருமண் காப் களும், திருமணித் தாவடங்களும் இல்லாமல் இவரை ஸேவிக்கவே முடியாது. இவைகளுட இவர் அவதரித்தார் போலும் என்று எண்ணத் தோன்றும். புன்சிரிப்பு பூத்த முகத்துடன் குழந்தையானுலும் முதியவரானுலும், எவ்வருணத்தவரானுலும் மனம் குளிரப் பேசுவார்.

வாதம் புரிவதில், மாற்றுரின் பலம் அறிந்தே, அதைக் கழித்து, பிறகே உண்மை யான முடிவைத் தன் பலம் கொண்டு நிலைநாட்டுவார். இதனுல் இவர் தோன்றிய குல பெயரான ''பிரதிவாதி பயங்கரம்'' என்ற விருதுக்கு நூற்றுக்கு நூறு பொருத்தமானவரா விளங்குகிறுர். பல விருதுகளும் அரசாங்க மதிப்பும் இவரை நாடி வந்து சிறப்புறுகின்றன.

இந்தத் தள்ளாத நிலையிலும் வரதன் உத்ஸவங்களில் கைங்கர்யம் செய்வதையும் வைணவத் தொண்டை சிறிதும் விடாமல் செய்து வரும் மனேபலம் படைத்துள்ளார். ஸ்ரீவைஷ்ணவர்களின் பெயருக்கு முன் வழங்கி வரும் ''ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபன சார்யோபய வேதாந்தாசார்யர்'' என்ற அடைமொழி இக்காலம் இவர் ஒருவருக்கே உரித்த தாகும். பிறருக்கு இது உபசாரமான சொல்லாகவே ஆகும்.

இருபதாம் நூற்றுண்டில் வசிக்கும் நாம் பெரும் தவம் செய்தவர் எனப் பெரும கொள்ளலாம்—இவருடன் கூடிவாழப் பெற்ற பாக்யத்தாலேயே. ஸ்ரீரங்கநாச்சியார் இவருக்குத் தொடர்ந்து ஆயுளையும் சக்தியையும் கொடுத்து தன் பணியை இவர் மூலம் மேலு வளர்க்கப் பிரார்த்திக்கிறேம்.

(நன்றி : கீதாசார்யன்)



## 54, எம்பெருமான் தானேகூறும் தசாவதாரங்கள்.

கீதையில்''என்னுடைய ஜன்மங்கள் அஸங்க்யேயங்கள்''என்றுநிற்கச்செய்தே யும்தசாவதாரங்களென்று ஒரு ப்ரஸித்தி வந்திருக்கின்றது; *பத்தினுய தோற்றமோடு* என்கிறுர் திருமழிசைப் பிரான். *மீனுயாமையுமாய் நரசிங்க முமாய்க் குறளாய்க் கானுரேனமுமாய்க் கற்கியாமின்னங் கார்வண்ணனே என்கிறுர் நம்மாழ்வார். *அன்னமு மீனுருவுமாளரியுங் குறளுமாமையு மானவனே ஆயர்கள் நாயகனே * என்கிறுர் பெரியாழ்வார். *மீனேடாமை கேழலரி குறளாய் முன்னுமிராமனுய்த் தானுய்ப். பின்னுமிராமனுய்த் தாமோ தரனுய்க் கற்கியுமானுன் தன்னை *என்கிறுர் திருமங்கையாழ்வார். கூரத்தாழ் வானும் பட்டரும் தங்கள் ஸ்தவங்களிலே தசாவதாரஸ்துதியை இயற்றுகி ருர்கள். தேசிகனும் ''தேவோ நச் சுபமாதநோது தசதா நிர்வர்த்தயந் பூமிகாம்'' என்று தொடங்கி தசாவதாரஸ்தோத்ர மியற்றியுள்ளார். இவற் றுக்கெல்லாம் சிகரமாக மஹாபாரதத்தில் சாந்திபர்வணி மோக்ஷ தர்மத்தி லிருந்து ஒரு அரிய பெரியவிஷயம் விஜ்ஞாபிக்கிறேன்.

அதில் முந்நூற்று முப்பத் தொன்பதாம் அத்யாயத்தில்-நாரதமஹர்ஷி ச்வேதத்வீபத்தில் எம்பெருமானைக் கண்டு பலவிஷயங்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளுகிறுர். பவிஷ்யத்தான தசாவதாரங்களையும் சரித்திர வரலாற்றுடன் பகவான் தன் சோதிவாய் திறந்து பணிக்கக் கேட்டுணர்கின்றுர். ''ச்ருணு நாரத! தத்வேத ப்ராதுர்ப்பாவாந் மஹாமுநே. மத்ஸ்ய: கூர்மோ வராஹச்ச நரஸிம்ஹச்ச வாமந:; ராமோ ராமச்ச ராமச்சக்ருஷ்ண: கல்கீதி தே தச, பூர்வம் மீநோபவிஷ்யாமி......'' என்று தொடங்கி தசாவதார சரித்திரங்களை அநதிஸம் க்ஷேப விஸ்தரமாகக் கூறுகின்றுர் பகவான் அதைச் சிறிது விஜ்ஞாபயே

(1) நான் முதலில் மீனமாக அவதரித்துப் பெரியகடலில் முழுகு கின்ற உலகங்களை வெளிப்படுத்திப் பிரஜைகளை நிலைநிறுத்துவேன் (2)ஹேம கூடபர்வதத்துக்கொப்பான கூர்மா வதாரஞ்செய்து அமிருதத்துக்காக மந்த ரகிரியைத்தரிப்பேன். (3)பிறகு வராஹரூபத்தைத் தரித்துக்கொண்டு கடலில் மறைந்த பூமியை எல்லாப்பிராணிகளுடையவும் நன்மைக்காகத் தன்னிலை யில்கொண்டுவந்து சேர்ப்பேன். அப்போது ஹிரண்யாக்ஷனென்கிற அஸுர னைக் கொல்லப்போகிறேன். (4)பிறகு நரஸிம்ஹாவதாரத்தையெடுத்து ஹிரண் யகசிபு வென்கிற அஸுரனையும் தேவகாரியத்துக்காகக் கொல்வேன். (5)பின்பு விரோசனனுடைய புத்திரனை பலியென்கிற பெரியஅஸுரன் உண்டாவான். அவன் இந்திரனையும் அவனது ராஜ்யத்திலிருந்து நழுவச் செய்வான். அவனுல் மூவுலகமும் அபஹரிக்கப்பட்டு இந்திரனும் விலகியிருக் கும்பொழுது காச்யபரிடமிருந்து அதிதியினிடத்தில் பன்னிரண்டாவது புத்திரனுகப் பிறப்பேன். பிரமசாரியாகி யாகசாலையை அடைந்து உத்த

மர்களான வேதியர்கள் துதிக்க அவனுடையயாகத்தைத் துதிப்பேன். அதைக்கேட்டுப் பலியானவன் பிரீதியடைவான் பிறகு அவனிடம் மூன்றடி அளவுள்ள ஸ்தலம் கொடுக்கவேண்டுமென்று யாசிப்பேன். அவன் மந்திரிகளால்தடுக்கப்பட்டும் என்னிடம் மிகவும் பிரீதியுடன் கொடுப்பான். பிறகு தானஜலமானது என்கையில் விழுந்தவுடன் மூன்று அடிகளுக்குள்ளடங்கிய ராஜ்யத்தை இந்திரனுக்கு அளிப்பேன். தேவர்களை அவரவர் அதிகாரங்களில் நிலைக்கச்செய்வேன். மஹாபலியைப் பாதாளத்தில் தள்ளுவேன். (6) திரேதாயுகத்தில் பரசுராமனாக அவதரிப்பேன் ஸேனைகளும் வாகனங்களும்நிறைந்த க்ஷத்ரிய ஜாதியை நாசம்செய்வேன். (7) திரேதாயுகத்துக்கும் த்வாபரயுகத்துக்கும் ஸந்தியாம்போது தசரதபுத்ரராமனாகிப் பூமண்டலாதிபதியாவேன். ஏகதரும்த்விதரும் த்ரிதருடைய சாபத்தால் தம் உருவமிழந்து வானரத் தன்மையை அடைவார். அந்தவம்சத்தில் பிறக்கும் வானரங்கள் எனக்குத் தேவகாரியநிமித்தம் துணையாவர்கள் ராவணனைப் பரிவாரத்துடன் கொல்வேன் அவனுடைய ராஜ்யத்தைக் கிரமப்படி விபீஷணனுக்குக் கொடுப்பேன் நான் அயோத்தியில் வஸிக்கின்ற எல்லாரையும் அழிவற்ற .லோகத்தை அடையச் செய்வேன். (8) த்வாபரயுகத்துக்கும் கலியுகத்துக்கும் ஸந்தியானது. முடியும்பொழுது என்னுடைய அவதாரமானது மதுராபட்டணத்தில உண்டாகும். நான் அந்த அவதாரத்தில் தேவகண்டகர்களான அநேகம் அஸுரர்களைக் கொன்று குசஸ்தலியென்கிற த்வாரகாநகரத்தை இருப்பிடமாகச் செய்வேன். அந்த நகரத்தில் வஸித்துக் கொண்டு, நரகன் முரன் முதலான அசுரர்களைக் கொல்வேன். ப்ராக்ஜோதிஷநகரத்திலுள்ள அஸுரர்களைக் கொன்று அவன் செல்வங்களைக் குசஸ்தலிக்குக்கொண்டுவருவேன். தவிரவும் ஒருவனாகப் பிறந்த ந்ருகனென்பவனைச் சாபத்தினின்று விடுவிப்பேன். அந்த அவதாரத்தில் பேரனை அநிருத்தனுக்காகச் சோணிதபுரமென்கிற பாணாஸுரனுடைய நகரத்தையடைந்து பெரும்போர்புரிவேன். பாணாஸுரனுக்கு நன்மையைச் செய்வதில் பற்றுள்ள ,சிவனையும் ஸுப்ரமண்யனையும் ஜயிப்பேன்.பிறகு பாணனை ஜயித்து உடனே ஸௌபமென்கிற நகரத்தில் வஸிப்பவர்களெல்லாரையும் கொல்வேன். காலயவனனுடையவதமும்என்னாலேயே நடக்கும். கம்ஸனையும் கேசியையும் அரிஷ்டனையும் சாணூரனையும் முஷ்டிகனையும் ப்ரலம்பனையும் தேனுகனையும் கொல்வேன். யமுனையின் பெரிய மடுவில் காளியனை வதஞ் செய்வேன். கோகுலத்தில் இந்திரன் வர்ஷிக்க ஏழுராத்திரி கோவர்த்தன மலையைஅநாயாஸமாகத்தரிப்பேன். பிறகு மழை நின்றபொழுது பர்வதத்தின் உச்சியிலிருந்து கொண்டு உடனே இந்திரனோடுகூட ஸம்வாதம்செய்வேன். பௌண்ட்ரக வாஸுதேவனையும் கொல்வேன். ·கிரிவ்ரஜத்தில் ஜராஸந்தனென்னும் அஸுரன் அரசனாவான். என்னுடைய புத்திரன் ஆலோசனையினால் அவனுடையவதம் உண்டாகும். தர்மபுத்ரருடைய யாகத்தில்



சிசுபாலனைக் கொல்வேன். எனக்கு இந்திர புத்ரனான அர்ஜுனனொருவனே நல்லஸஹாயனாவான். அப்பொழுது யுதிஷ்டிரரைத் தம்பிகளோடு அவருடைய ராஜ்யத்தில் ஸ்தாபிப்பேன் பூமியின் பாரத்தை இறக்கிவிட்டு ஆத்மஞானத்தை ஆச்ரயித்து துவாரகைக்கும் பிரளயத்தைச் செய்வேன். த்வாரகையை ஸமுத்ரத்தில் முழுகச் செய்வேன்......இவ்வண்ணமாகக் கதை சென்றுகொண்டே யிருக்கிறது எம்பெருமான் தானே சோதிவாய் திறந்து அருளிச்செய்த வரலாறுகளுக்கு மிகுந்தஏற்ற முண்டல்லவா? தேசிகனருளிச்செய்த தசாவதார ஸ்தோத்திரத்திற்கு அடியேனெழுதி வெளியிட்டுள்ள அவதாரரஹஸ்யரத்னப்ரபா என்கிறமணிப்ரவாள வியாக்கியானத்தில் சரித்திரங்களை விரிவாக விளக்கியிருப்பது கண்டுகளிக்க ... (ஶ்ரீ)

## 55. இரண்டு திறவுகோல்கள்

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு ஒரு திறவுகோலும், லோகாசார்ய ஸித்தாந்தத்திற்கு ஒரு திறவுகோலும் முக்கியமாகத் தெரிந்து கொள்ளத்தக்கவை. “சரீராத்மபாவம்” என்பது விசிஷ்டாத்வைதஸித்தாந்தத் திறவுகோல்; ‘ஸர்வேச்வரன் ஸகல சேதநா சேதநங்களையும் சரீரமாகக் கொண்டவன், என்கிற உண்மையைச் செவ்வனே தெரிந்துகொள்ளும் வேதாந்திக்கு ஸகல உபநிஷத் வாக்யங்களும் எளிதாக அந்வயித்துவிடும். ஒன்றிலும் ஒரு அவத்யமும் தோன்றமாட்டாது—என்பது சீரியதோர் கொள்கை. இதை நன்கு தெரிந்து கொண்ட வித்வான் முன்னிலையில் எந்த மதாந்தரஸ்தனும் பங்கமடைந்தே தீர்வன் என்கிறார் ஸ்ரீ வேதாந்ததேசிகன் “யத்யேதம்யதிஸார்வபௌமகதிதம்” இத்யாதியான ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரச்லோகத்தினால். அதைப் பெரியாரிடம் கேட்டுணர்வது. அதுபோல, “எந்த விதத்திலும் எம்பெருமானுடைய பெருமையிலேயே முழுநோக்கு” என்பதே லோகாசார்ய ஸித்தாந்தத்தின் ஸாரம் என்று தெரிந்துகொள்ளவேண்டும் இதுவே இந்த ஸம்பிரதாயத்திற்குத் திறவுகோல். இதர ஸம்ப்ரதாயத்தில் சேதநகருமங்களுக்கே ஆதிக்யம்தெரியவரும். இந்த ஸம்ப்ரதாயத்தில் அப்படியன்றிக்கே ஸர்வேச்வரனுடைய க்ருஷிக்கே ஸர்வாத்மநா ஆதிக்யம் காணும் இதனை நன்கு தெளிவிக்கின்றேன். இந்த ஸம்ப்ரதாயஸ்தர்கள் “ஒருதடவை நமஸ்காரம்” செய்வதென்றும் பிறர் “பலதடவைநமஸ்காரம்” செய்வதென்றும் காண்கின்றது. பகவானை நமஸ்கரிப்பதென்பது மிகச் சிறந்ததொருகாரியமே.இதனை ஒருதடவைக்குப்பலதடவையாகச் செய்தால்நல்லதல்லவென்று யாரேனும் நினைக்கமுடியுமோ? நமஸ்கரிப்பவனுடைய கரணக்ராமமும் க்ருதார்த்தமாய், நமஸ்கரிக்கப்படுபவனான எம்பெருமானுடைய திருவுள்ளமும் ஸுப்ரஸந்நமாவதற்கு உறுப்பான காரியமன்றோ இது. அப்படியிருக்க, ஒருதடவைதான் நமஸ்காரம் செய்ய வேணுமென்று ஒரு விரதமாகக் கொண்டிருக்கவேண்டிய அவசியம் என்ன? என்று ஒவ்வொருவிவேகிக்கும்

இந்த சங்கை தோன்றும். நமஸ்கார விஷயத்தில் தென்னாசார்யர்களின் திருவுள்ளம் கேண்மின். நம்மைப் பார்த்தால் நாம் எத்தனை தடவை நமஸ்கரித்தாலும் போராது. எம்பெருமானைப் பார்த்தால் ஒரு தடவை நமஸ்கரிப்பதும் மிகையாகும். அப்பெருமான் கீதை முதலியவற்றில் தன்னை அல்ப ஸந்துஷ்டனாகச் சொல்லிக்கொள்ளுகிறான் "பத்ரம்புஷ்பம் பலம் தோயம்" இத்யாதிகள் அவனுடைய அம்ருதமொழிகளாகக் காண்கின்றன. தேவதாந்தரங்கள் மிகவும் சிரமப்பட்டு ஆராதிக்கப்படவேண்டியவை யென்றும், எம்பெருமான் ஆராதனைக்கு மிக எளியன் என்றும் ப்ரஸித்தம். ஆழ்வார்கள் அவனுடைய பெருமையைப் பேசுமிடத்து 'தொழுது மாமலர் நீர்சுடர் தூபங் கொண்டு எழுதுமென்னுமிது மிகையாதலின்" என்றும் "தொழக் கருதுவதே துணிவது சூதே,' என்றும் இப் புடைகளிலே அருளிச் செய்கிறார்கள். *பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம* என்கிற உபநிஷத் வாக்யத்திற்கு "சதே பூயிஷ்டாம் நமஉக்திம்விதேம" என்று அந்வயம் காட்டி நம: என்று வாயினால் சொல்லுவதும் எம்பெருமான் திருவுள்ளத்தாலே மிக்க கனத்ததாகும், என்று நம் பூருவர்கள் அர்த்தம் செய்தருளுகிறார்கள். பட்டர் "அஞ்ஜலிபரம்வஹதே" என்கிறார். நாம் ஒரு அஞ்ஜலி செய்துவிட்டாலும் அது அத்தலைக்குப் பெரிய பளுவாகத் தோன்றுமென்பதை நன்கு காட்டுகின்றார். ஆகவே ஆராதனைக்கு எளியனான எம்பெருமான் முன்னிலையில் நாம் பலகால் விழுந்தெழுந்தால் அவன் திருவுள்ளம் என்னாகுமோ? 'நம்மையும் தேவதாந்தரங்களைப்போலே நினைத்துவிட்டார்கள் போலும்!' என்று அவன் திருவுள்ளம் புண்படலாகுமோ என்னவோ வென்று அஞ்சி, "ஆராதனைக் கெளியன்" என்கிற அவனுடைய பெருமைக்குக் குறைவு வாராதபடி நடந்து கொள்வோமென்றே நமஸ்காரத்தில் ஆவ்ருத்தி ஸஹிக்கப்படவில்லை.

... ... ...

## 56 நம்முடைய முக்கியமான குறிக்கோள்

நாம்சேதநராகப் பிறந்திருக்கிற வாசிக்கு ஏதோசைதந்ய கார்யமாக ஸ்வல்பம் செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம்; இது கார்யகரமேயன்று; அவன் திருவுள்ளத்திலிரக்கமே கார்யகரம்; அது நம்முடைய ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமுமடியாக விளையக்கூடியது; ஆகிஞ்சந்யத்துக்கு எதிரிடையாக அதிகப்ரவ்ருத்திகளைக் காட்டினோமாகில் நாம்ஏதோ உபாயாநுஷ்டாநம் செய்கிறோமாகத் திருவுள்ளம்பற்றி எம்பெருமான் கைவாங்கி நிற்க நேரும்; அப்படி அவன் உதாஸீநனாகைக்கு நாம் அவகாசம் கொடுக்கலாகாது என்பதே முக்கியமான குறிக்கோள். உபாயாநுஷ்டானங்கள் செய்யும்படி அவனே சாஸ்த்ரங்களில்விதித்திருக்கும்போது அவற்றை யதேஷ்டமாக நாம் செய்தாலென்ன? செய்யவேண்டியதுதானே என்று



பிறர் நினைக்கலாம். தென்னாசார்யர்கள் அங்ஙனம் நினைப்பவர்களல்லர் "நெறிகாட்டி நீக்குதியோ?" என்று நம்மாழ்வார் அருளிச்செய்தபடி, தன்னைவிட்டு நீக்குவதற்காக (நம்மை நன்கு சோதிப்பதற்காக) அவன் காட்டினவழிகளிலே நாம் கிடந்து துவளலாகாது; "கரம்பறத்தலைசிரைத்து உன் கடைத்தலை யிருந்து வாழுஞ் சோம்பரை யுகத்திபோலும் சூழ் புனலரங்கத்தானே" என்று தொண்டரடிப்பொடியாழ்வாரருளிச்செய்தபடி திண்ணிதான அத்யவஸாயங் கொண்டிருப்பதேஉற்றது—என்கிற உறுதி தென்னாசார்யர்களின் கருவிலேயேஊறிக்கிடப்பதாகும். ... ...

## 57. நம்பிள்ளைஸூக்திகளிரண்டு

நம்பிள்ளையினுடைய திவ்யஸூக்திகளிலே இரண்டுஸூக்திகளை இங்கெடுத்துக்காட்டி இவ்விஷயத்தை நெஞ்சில் பதிய வைக்கின்றேன். (1) திருவாய்மொழியில் "பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கு அரிய வித்தகன்" என்ற விடத்து ஈட்டில்—"நம்முடையவர்கள் எம்பெருமானையே உபாயமாகப் பற்றிநிற்க, அல்லாதார் அசேதநக்ரியாகலாபங்களைப் பற்றுகிறாப்போலேயிறே துர்யோதனன் நிலை" என்றுள்ளது இதனால் நம்முடையவர்கள்படியும் அல்லாதார்படியும் அறியத்தக்கது. (2)மேலே அந்தப் பதிகத்திற்கு அடுத்தபதிகத்திலே (1-4-7) "என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு' என்ற விடத்து ஈட்டில்—"தேவரீர் க்ருபைக்குத் தண்ணீர்த் துரும்பாக ஏதேனும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் பண்ணிற்றுண்டோ வென்று நம்பிள்ளை யருளிச்செய்யும்படி" என்றுள்ளது. இந்த ஸ்ரீஸூக்தியை நன்கு விமர்சிக்கவேணும். எம்மெருமானிடத்தில் தூதுவிடுகிற ப்ரகரணம்இது. என்ன தப்பு செய்து விட்டதாக உபேக்ஷித்திருக்கிறீரென்று கேளுங்கோளென்று இங்கே மூலமுள்ளது. "நாங்கள் ஏதேனும் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்து விட்டதாக எண்ணி உபேக்ஷித்திருக்கிறீரா வென்று கேளுங்கோள்" என்பதாக நம்பிள்ளை விவரணம் செய்தருளுகிறார். இதனால் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்வது எம்பெருமானுடைய க்ருபைக்கு ப்ரதிபந்தகம் என்று ஸ்பஷ்டமாக விளங்குகின்றது இப்படி யருளிச்செய்திருக்கிற நம்பிள்ளை பகவத்ஸந்நிதியில் ப்ரதக்ஷிண நமஸ்காராதிகள் செய்திருக்கமாட்டாரா? செய்திலரென்றால் இதை யாரேனும் நம்பமுடியுமா? அது சாஸ்த்ரார்த்தந்தானாகுமா? எதற்காக இங்ஙனே நம்பிள்ளை யருளிச்செய்தார்? என்று விவேகிகள் விமர்சிக்கவேண்டுமன்றோ? விமர்சித்தால், அதிகப்ரவ்ருத்தி அவத்யமென்றதாகத்தேறும் மத்தனை போக்கி ப்ரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்வது பாவமென்றதாகாது. சிறிய திருமடலில், "செங்குறிஞ்சித்தாரார் நறுமாலைச்சாத்தற்குத் தான்பின்னும் நேராதனவொன்று நேர்ந்தாள்' என்றவிடத்துப்பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்

கியான ஸ்ரீஸூக்தியையும் சேர்த்து முன்னேகாட்டிய நம்பிள்ளை ஸ்ரீஸூக்திக்கு அர்த்தம் செய்யுமளவில் தென்னாசார்யர்களின் திருவுள்ளம் நன்கு புலப்படும். உபாயகோடியில் எள்ளளவும் அந்வயியாமல் ஸ்வரூபத்தளவிலேநிற்கும்படி சில செய்வதே உற்றது; எதையேனும் அதிகப்படியாகச் செய்தால் அது உபாயகோடியிலே அந்வயித்து ஆகிஞ்சந்யத்தைச் குலைத்து எம்பெருமானுடைய திருவருளுக்கு இடையூறாக நிற்குங்கொல்! என்கிற அதிசங்கை இவர்களுக்கு உள்ளதென்னுமிடம் விளங்காநின்றது எந்த விஷயத்திலும் சாஸ்த்ரங்கள் ஒரு வழியையேகாட்டமாட்டா! பல வழிகளையும் காட்டிநிற்கும். ஒவ்வொருஅதிகாரிகள் ஒவ்வொரு வழியைப் பற்றி நிற்பது ஸஹஜம்.

## 58. ஸக்ருத்ப்ரணாமத்தில் தோன்றும் ஒரு சங்கை

கீழேவிவரித்தபடி லோகாசார்யஸம்ப்ரதாயஸ்தர்கள் ஒரு தடவை நமஸ்கரிப்ப தென்றுள்ளது. 'பலமுறை நமஸ்காரம் செய்வதனால் ப்ரத்யவாய முன்டோ? பகவத் பாகவத விஷயங்களில் ஒரு தடவைக்குப் பல தடவையாக நமஸ்கரிப்பதனால் ஸ்வரூபம் நிறம் பெறுமே யல்லது கெட்டுப்போய் விடாகதே. ஆகவே ஒரு தடவையே நமஸ்கரிக்க வேணுமென்று ஒரு நிபந்தனை கொள்ளவேண்டுமோ?பலதடவைநமஸ்கரிக்கக்கூடாதென்று சாஸ்த்ரம் மறுத்திருப்பதாகத்தெரியவில்லையே தேஹத்தில் சக்தியற்றவர்கள் ஒரு தடவையோ அரை தடவையோ நமஸ்கரிக்கட்டும்; சக்தியும் உத்ஸாஹமுமுள்ளவர்கள் பலமுறை நமஸ்கரித்தால் அதைக் குற்றமாகக் கொள்ளும்படி ஒரு ஸம்ப்ரதாயம் இருக்கத்தகுமோ?' என்றிங்ஙனேயொரு சங்கைதோன்றக் கூடியதுண்டு.

## 59. தோன்றின சங்கைக்குப் பரிஹாரம்

இதில் நம் ஆசாரியர்களின் திருவுள்ளத்தை விளங்கவுரைக்கிறோம் கேண்மின். எந்த விஷயத்திலும் சாஸ்த்ரங்களின் போக்குபலவகைப்பட்டிருக்கும் "மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து" என்னுமாபோலே நூற்கடல்களை நன்கு கடைந்து நுண்பொருள்களைக் கண்டுபிடித்துப் பரமாசாரியர்கள் காட்டியருளின அனுஷ்டானமே பரம சாஸ்த்ரம், ஸக்ருத் ப்ரணாம விஷயத்தில் என்ன நுண்பொருள் காணலாகும்?என்னில், கேண்மின். நமஸ்காரத்தின் ப்ரயோஜனம் என்ன? என்பதை முந்துற முன்னம் விமர்சிப்போம் "நந்த்ருநந்தவ்யபாவோயம் ந ப்ரயோஜநபூர்வக: நீசோச்சயோஸ் ஸ்வபாவோயம் நந்த்ருநந்தவ்யதாத்மக:' என்று அஹிர்புத்ந்யஸம்ஹிதையிலுள்ள வசனத்தை தேசிகன் முதலானார்களும் எடுத்துக் காட்டியுள்ளார்கள் பெரியாரைக் கண்டால் சிறியார், தங்களுடைய சிறுமைக்கும் எதிர்த்தலையின்.



பெருமைக்கும் ப்ரதர்சகமாக நமஸ்காரம் செய்யவேணு மென்றது. வேறொரு ப்ரயோஜநமும் இதற்கில்லை யென்றும் சொல்லிற்று. ஒருகால் தொழுத மாத்திரத்தினால் ஸ்வநிகர்ஷமும் பரோத்கர்ஷமும் ப்ரதர்சிதமாயிற்று. பலகால் தொழவேணு மென்கிற நிர்ப்பந்தத்திற்கு ப்ரஸக்தியில்லை.

## 60. சாஸ்த்ரவசனங்களின் விமர்சம்

சாஸ்த்ரங்களில், ஒற்றைக் கையால் நமஸ்கரிப்பது அபசாரம். ஒரு ப்ரதக்ஷிணம் பண்ணுகை அபசாரம் என்று சொல்லியிருப்பது போல ஒரு முறை நமஸ்கரிப்பது அபசாரம் என்று சொல்லப்படவில்லை. "ஏகேந பாணிநா யஸ் து ப்ரணமேதி புருஷோத்தமம், 'ந்யாய்யஸ் தஸ்ய கரச்சேத இதி வேதவிதோ விது:" என்றும், "ஏகஹஸ்தப்ரணாமச்ச ஏகஞ்சாபி ப்ரதக்ஷிணம் என்றும் இத்தகைய ப்ரமாணங்களையே ஸ்தோத்ர பாஷ்யாதிகளில் ஸ்ரீதேசிகாதிகள் உதாஹரிக்கக் காண்கிறோம். ஏகப்ரணாமத்தை நிஷேதிக்கும் வசனம் காண்பரிது. அப்படியொரு வசனம் கிடைத்தால் அது தேவதாந்தர விஷயமாயிருக்கும்.

## 61. ஸ்ரீவைகுண்டகத்யஸூக்தியின்பொருள்

எம்பெருமானார் ஸ்ரீவைகுண்ட கத்யத்தில் "ப்ரணம்ய உத்தாயோத்தாய புந: புந:ப்ரணம்ய" [தொழுது எழுந்தெழுந்து மீண்டும் மீண்டும் தொழுது] என்றருளிச் செய்திருக்கும் விஷயத்தில் தெளிவு பிறப்பிக்கிறோம். இங்கு "ப்ரணம்ய உத்தாயோத்தாய புந: புந: ப்ரணம்ய" என்றது ஓரிடத்திலேயே இருந்துகொண்டு பலமுறை நமஸ்கரிப்பதைச் சொல்லுவதன்று. அந்த வாக்கியத்திற்கு முன்னே "தூராதேவ" என்றருளிச் செய்திருப்பதனால் எம்பெருமானைக் கிட்டுமளவும் காலால் நடந்துசெல்லாமல் தெண்டனிட்டுக் கொண்டே வழியைக் கடந்து ஸ்ரீமந்நாராயணனை அணுகுவதாகவே அங்குப் பொருள்படும். இக்காலத்தில் இந்நிலத்தில் அஸக்ருத் ப்ரணாமகர்த்தாக்கள் செய்வது போன்ற செயல் அங்கு விவக்ஷிதமன்று தெண்டன் ஸமர்ப்பித்துக் கொண்டே போய் வழியைக்கடந்து எம்பெருமானைக் கிட்டினபிறகு அங்கு ஓரே தடவை நமஸ்கரிப்பதென்னுமது அவ்விடத்திலேயே அடுத்தபடியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. "யாசமாந: ப்ரணம்ய ஆத்மாநம் பகவதே நிவேதயேத்" என்று அந்த வாக்யஸமாப்தியுள்ளது காண்க. இங்ஙனமல்லாமல் ஓரிடத்திலேயே நின்றுகொண்டு பலமுறை தொழுவதைத்தான் "உத்தாயோத்தாய புந: புந: ப்ரணம்ய" என்கிற வாக்கியம் சொல்லுகிறதென்று கொண்டாலும் குறையொன்றுமில்லை. "ந சாஸ்த்ரம் நைவச க்ரம:" என்கிற ரீதியிலே நூல்வரம்புக்கு அடங்காத அவ்விபூதியிலே நிகழுமது கொண்டு என்ன ஸாதிக்கலாகும்?

## 62. நித்யக்ரந்தஸூக்தி விளக்கம்

இந்நிலத்தில் நம்பூருவாசார்யர்களின் அநுஷ்டானம் ஸக்ருத் ப்ரணாமமேயென்பதை அந்த எம்பெருமானார் தாமே ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ளபடி பாரீர். அவ்வாசிரியர் திருவாராதனக்ரம மருளிச்செய்கிற நித்யக்ரந்தத்தில் —“ஆராதநாபிமுகோ பவ; இதி மூலமந்த்ரேண ப்ரார்த்ய தண்டவத் ப்ரணம்ய உத்தாய” என்றருளிச் செய்திருப்பது ப்ரஸித்தமிறே. இது கொண்டு ஸ்ரீவைகுண்டகத்யஸ்ரீஸூக்தியின் பொருளை நாம் விவரித்தபடியே தெளிய ப்ராப்தம்.

## 63. நமோநம:நமோ நம:

ஸ்தோத்ர ரத்னத்தில் இருபத்தோராம் ச்லோகத்தில் ‘நமோ நம; நமோ நம:’ என்று பலகால் அருளிச்செய்திருப்பதை ஸமந்வயப் படுத்தத் திருவுள்ளம் பற்றிய தேசிகன் அவ்விடத்து (ஸ்தோத்ர) பாஷ்யத்தில், “ப்ரசம்ஸாயாம் ப்ரதிஜ்ஞாயாம் ப்ரலாபே தர்ஜநேபிச, பயே ச விஜயேசைவ பௌந:புநயம் அலங்க்ருதி:” என்கிறவொரு ச்லோகத்தை யெடுத்துக் காட்டியுள்ளார். இந்த ச்லோகத்தின் பொருளாவது: ஸ்தோத்ரம் செய்தல், ப்ரதிஜ்ஞை செய்தல், அழுதல், வெருட்டுதல், அச்சந்தோற்றச் சொல்லுதல்‘ வெற்றி தோற்றச் சொல்லுதல் முதலிய ஸந்தர்ப்பங்களில் ஒரு சொல்லையே அடுத்தடுத்துச் சொல்வதானது ஒருவகையான அலங்காரமாகும் என்பது இந்த ச்லோகத்தின் பொருள். உலகத்தில் இதை நாம் நன்றாகக் காண்கிறோம்‘ ‘பாம்பு பாம்பு பாம்பு’ என்று பலமுறை சொன்னாலும் உள்ளது ஒரு பாம்பேயல்லது பல பாம்புகள் வந்துவிடமாட்டா. *பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு பலகோடி நூறாயிரம்* என்று நூறாயிரந்தடவை சொன்னாலும் ‘விஜயீபவ’ என்று ஒருகால் சொல்வதற்கு என்ன அர்த்தமோ அந்த அர்த்தமேயன்றோ தேறுவது. அப்படியே, நமோ நம:, *தொழுது தொழுது* என்று எத்தனை பர்யாயம் சொன்னாலும் அலங்காரமேயாகு மத்தனையென்று தேசிகன் தாமே ஸ்பஷ்டமாக நிர்ணயித்தார்.

## 64. பகவத்க்ருபையின் பெருமை

“பகவத்க்ருபை நிர்ஹேதுகமா?” ஸஹேதுகமா?” என்பது ஒரு விசாரம் நமது நற்குண நற்செய்கைகள் காரணமாக எம்பெருமானுடைய திருவருள் தோன்றுகின்றதென்று ஒப்புக்கொண்டால் ஸஹேதுகம் என்றதாகும். அப்படியல்லாமல் அவ்வருள் தானே தோன்றுகின்றதென்று ஒப்புக்கொண்டால் நிர்ஹேதுகம் என்றதாகும் பகவத்க்ருபை, தானே தோன்றுகின்றதென்று எப்படி ஒப்புக்கொள்ளமுடியும்? அப்படி தோன்றுவதானால் என்றைக்கும் எல்லார் விஷயத்திலும் தோன்றலாமே. அருளுக்கு இலக்காகாதார் ஒருநாளும் ஒருவரும் இல்லாதபடியன்றோ இருக்கவேண்டும். அப்படி காணாமையாலும், சில கால



ஸ்ரீமதுபயவே வேளுக்குடி வரதாசார்யஸ்வாமி
“வாகம்ருதவர்ஷீ” சென்னை

(மற்றொரு திருத்தல்) 65ஆம் பக்கத்தில் மன்னார்குடி ஸ்ரீ அண்ணாஸ்வாமி அய்யங்கார் 38வது வித்வத் ஸதஸ்ஸைப் பற்றின வெளியீட்டில் ஸதஸ்ஸு இனி நடக்கப்போவதாக வெளிவந்துள்ளது. குறிப்பிட்டிருக்கும் தேதிகளில் மூன்று நாள் ஸதஸ்ஸு நடைபெற்று விட்டது, அச்சுக்கூடத்தில் நேர்ந்த தாமதத்தினால் இந்த ஸஞ்சிகை காலங்கடந்து வெளிவருகின்றதத்தனே. ... ... ✱



ஸ்ரீமதுபயவே P. S, ஸ்ரீசைலம் ஸ்வாமி, B.A.B.L

Advocate, Madras.



விசேஷங்களில் சில அதிகாரிகள்மீது மாத்திரம் அருள் தோன்றக் காண்கை யாலும் அப்போது ஒரு ஹேதுவை முன்னிட்டுத் தோன்றினதாகவே கொள்ள வேணும் ஆகவே அருள் ஸஹேதுகமே யல்லது நிர்ஹேதுகமென்கைக்கு ஔசித்யமில்லை என்று சங்கிக்கக்கூடும் இங்கு உண்மை யென்னவென்பதை அடுத்தபடி சொல்லுவோம். ... ... ... ... ...

## 65. நம்மிடமுள்ள ஹேது விசேஷங்கள்

அவனது மிகக் கனத்த அருளுக்கு ஹேதுவாக நம்மிடத்தில் என்ன சரக்கு உள்ளதென்று ஆராய்ந்து பார்த்தால் ஒரு அணு மாத்திரம் கிடைக்கக் கூடும்; விஷயப்ரவணரான நாம் வேசிகளைப் பின்தொடர்ந்து அடிக்கடி கோவில்களிலே நுழைந்து புறப்பட நேரும். நம்முடைய வயலில் பட்டிமேய்ந்த பசுவை அடிப்பதாகத் துரத்திக் கொண்டு போம்போது அது ஒரு கோவிலை ப்ரதக்ஷிணஞ் செய்து கொண்டு ஓடுகிறவளவிலே அதை விடமாட்டாத ஆக்ரஹத்தாலே நாமும் அக்கோவிலை வலஞ் செய்து போகக்கூடும். சிசுபாலாதிகளைப் போலே நிந்தை செய்வதற்காக அடிக்கடி பகவானுடைய நாமங்களைச் சொல்லக்கூடும். இவ்விதமாகச் சில ஸுக்ருத விசேஷங்கள் காரணமாக எம்பெருமானருள் நம்மீது தோன்றிற்றென்றால் இதைக்கொண்டு ஸஹேதுகமென்று சொல்லிவிடலாமோ? கொடிய தண்டனைக்குரிய பாவங்களையன்றோ நாம் செய்திருப்பது. இதில் அதிஸ்வல்பமான ஸுக்ருதம் கலந்திருப்பதுகொண்டு எம்பெருமான் அருள்செய்தானென்றால் அநுக்ரஹோந்முகனான அவன் திருவுள்ளத்தால் ஸஹேதுகமானால் ஆகலாம். "எந்நன்றி செய்தேனா என்னெஞ்சில் திகழ்வதுவே" "என்னுணர்வினுள்ளேயிருத்தினேன் அதுவுமவனதின்னருளே" "வெறிதேயருள் செய்வர்" என்றிவை போலும் பாசுரங்களையநுஸந்திக்கப் பிறந்த நம் நினைவால் நிர்ஹேதுகமேயாகக்கடவது. ... ... *

## 66. நாம் அநுஸந்திக்கவேண்டியவிதம்

நம்மிடத்தில் சில குணங்கள் இருந்தாலுங்கூட அவற்றை அஸத்கல்பமாக நினைத்து 'அமர்யாத: க்ஷுத்ர: சலமதிரஸூயாப்ரஸவபூ: *சுவிலாத தீவினைகளைத்தனை செய்தனன்கொல்*பாவமே செய்து பாவியானேன்' என்று அநுஸந்திக்க வேண்டியதானாப்போலே பகவத்க்ருபைக்கு உறுப்பாக ஸ்வல்ப ஹேதுக்கள் இருந்தாலுங்கூட அவற்றை நாம் அஸத்கல்பமாகவே நினைக்கவும் 'இவையும் இல்லாமலே அவன் அருள் செய்யவல்லவன்' என்று அநுஸந்திக்கவும் ப்ராப்தமாகையாலே நிர்ஹேதுகமென்கிற ஸித்தாந்தமே நிலை நிற்கும்: எம்பெருமானருளாகிறமிகச்சிறந்த பலனுக்கு ஹேதுக்கள் ஸத்ருசமன்று என்று சொல்லாமே தவிர, நிர்ஹேதுகமென்று சொல்லிவிடலாகுமோ? என்று ஆக்ஷேபங்கள் விளைவதுண்டு. தேசிகன் ரஹஸ்யத்ரயஸாரத்தில் "ப்ரதாந,



ஸ்ரீமதுபயவே.
R. V. சேஷாத்ரிஐயங்கார் B.A. B.L,
அட்வொகேட். ஸாரஸ்வதஸாரஜ்ஞர்—மதராஸ்.



ஹேது: ஸ்வாதந்த்ர்யவிசிஷ்டா கருணா விபோ: என்று கல்வெட்டுச் செய்து போனார். திருவாய்மொழியில் முதற்பத்தில் பத்தாந் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய நிர்ஹேதுக கருணையை ஆழ்வார் அநுபவித்து ஈடுபடுவதாக நம்பிள்ளை திருவடிகள் வியாக்கியானித்தருளினார்கள். அதையநுஸரித்து தேசிகனும் அவ்விடத்திற்கு *'அவ்யாஜோதாரபாவாத்'* என்று ச்லோகமிட்டருளினார். ... ... ... ... ...

## 67. பகவத்க்ருபையைப்பற்றி ஸாரமான வார்த்தை

இவ்விஷயத்தில் ஸாரமாகச் சொல்லுவதாவது—எம்பெருமானை வசீகரிப்பதற்கு உபாயமாக சாஸ்த்ரங்களில் கர்மஜ்ஞானபக்தி ப்ரபத்திகள் கூறப்பட்டுள்ளனவென்பது ப்ரஸித்தம். சேதநர்களை ரக்ஷித்தருள்வதில் இயற்கையாகவே ருசியுடையனான எம்பெருமான் *'ஸம்ஸாரதந்த்ரவாஹித்வாத் ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே,* என்கிறபடியே இத்தலையில் சிறிது எதிர்பார்க்கிறானென்று சொல்லிவைத்ததுண்டு ஒரு பக்கத்தில். எம்பெருமானுடைய திருவாக்கைப் பார்த்தாலோ *'நாஸௌ புருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந'* என்று காண்கிறது; "நான் புருஷகாரத்தைக்கொண்டும் கடாக்ஷிப்பதில்லை; என்றைக்கோ வொருநாள் யாரோவொரு அதிகாரியை என் இச்சையினாலே நான் கடாக்ஷிப்பேன்" என்பது மேலே காட்டின ச்லோகத்தின் பொருள். இங்ஙனம் பேசுகின்ற எம்பெருமானது திருவருளை ஸஹேதுகமென்று நினைக்க நாமார்? நம்பக்கல் கைம்முதல் கொண்டே எம்பெருமான் நம்மைக் காத்தருள்கின்றானென்று கொள்வது ஹேயமாகும் *மருவித்தொழும் மனமே தந்தாய்* *என்னைத் தீமனங் கெடுத்தாய்* என்கிற அநுஸந்தானம் அக்ருத்ரிமமாகக்கடவது. ... ... ... ... ... ...

## 68. ப்ரபத்தியைப்பற்றின ஆராய்ச்சிகள்

ப்ரபத்தி உபாயமா அன்றா என்பது ஒரு விசாரம். உபாயமென்பர் சிலர்; உபாயமன்றென்பர் தேசிகாதிகள். பகவத் க்ருபையின் நிர்ஹேதுகத்வ நிரூபணம் பண்ணினது கொண்டே ப்ரபத்தியின் அநுபாயத்வமும் நிஷ்கர்ஷிக்கப்பட்டதாகும். மேலும் தனிப்படவும் நிரூபிக்கப்படுகிறது. 'கடையில் சென்று எண்ணெய் வாங்கிக்கொண்டுவா' என்று கட்டளையிடப்பெற்றவொருவன் அது வாங்கக் கோணியையோ கூடையையோ எடுத்துக்கொண்டு புறப்பட்டானாகில் 'எண்ணெயின் ஸ்வரூபத்தையே இவன் தெரிந்து கொள்ளவில்லை போலும்' என்று நினைக்கத் தடையில்லையன்றோ. அதுபோல, ப்ரபத்தி உபாயமென்று சொல்லப்புகுமவர்கள் ப்ரபத்தியின் ஸ்வரூபத்தையே உள்ளபடி யறிந்திலர் போலும் என்றே நினைக்கவேண்டியதாகும். ... ...

## காஞ்சி. யதோக்தகாரி ஸன்னிதி.

**இந்த கோஷ்டியில் ஸேவைஸாதிக்கும் ஜீயர் ஸ்வாமி ஸ்ரீமத் பரமஹம்ஸ அழகிய மணவாள ராமாநுஜஜீயர் ஸ்வாமி.**
**(வைகுண்டவாஸி)**



**சென்ற ஸாதாரண ஸம்வத்ஸரத்தில் மணவாளமாமுனிகளுக்கு அறுநூருண்டு நிறைவு மஹோத்ஸவம் உலகமெங்கும் கொண்டாடப்பட்டபோது திருவெஃகாவில் நடந்த திருவீதியுத்ஸவத்தில் இயல்கோஷ்டியின் காட்சி.**



## 69. நியாஸதசகஸ்ரீஸூக்தி

“ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம் ஸ்வபரத்வேந நிர்ப்பரம், ஸ்வதத்த ஸ்வதியா ஸவார்த்தம் ஸ்வஸ்மிந் ந்யஸ்யதி மாம்ஸவயம்” என்பது தேசிகனுடைய ஸூக்தி இதில் ஒன்பதின்கால் ஸ்வசப்த ப்ரயோகம் பண்ணியிருக்கிருர் இதனுல் சேதநனுடைய முயற்சி நாற்றம் வேரற அறுக்கப்படுகின்றமை யறிந்தால் உபாயமென்றும் ஸாத்யோபாயமென்றும் வாய்திறக்க வழியேயில்லை. ... ... ... ... ... ...

## 70. ப்ரபத்தியைப்பற்றிச் சிறந்தத்ருஷ்டாந்தம்

இதில் ஸாரமான ஒரு வார்த்தை. ரத்னம் என்கிற ஒரு வஸ்துவை எடுத்துக் கொள்வோம். இது ஜீவனத்திற்கு உபாயமா? அன்று? என்று விசாரம்வரின் ஒரு அதிகாரிக்கு உபாயம், மற்றொரு அதிகாரிக்கு அநுபாயம் என்றுதானே சொல்ல வேண்டியதாகிறது ஏனெனின், வாணிஜ்யத்தை ஜீவிகையாகவுடையவர்கள் ரத்னத்தை விற்று ஜீவிக்கக் காண்கிறோமாதலால் அத்தகைய அதிகாரிகளுக்கு ரத்னம் உபாயமே. சக்ரவர்த்திபோல்வாரிடத்தில் அந்த ரத்னம் இருக்குமாகில் அது ஜீவநோபாயமாக ஆக்கப்படுகின்றதன்றே. ஸ்வயம் போக்யமாகவன்றோ அணியப்படுகின்றது. இப்படி எந்த வஸ்துவும் அதிகாரீ பேதத்தாலே உபாயமாகவும் போக்யமாகவும் நிற்கும். ரப்பத்தியைநாம் உபாயமாகக் கொள்ளப் பிறந்தோமல்லோம் “ப்ரபத்தியை” என்று விசேஷித்துச் சொல்லவேண்டியது மில்லை; எதுவும் நமக்கு உபாயமன்று. எந்த நன்மையும் ஸ்வரூபத்தில் சேர்ந்ததாகவே கொள்ளப்படுகிறது.

## 71. ப்ரபத்திலக்ஷணஸூத்ர மொன்று

“பகவத்ப்ரவ்ருதி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியே ப்ரபத்தி” என்பது ஆசார்யர்களின் ஸூத்ரம். அசித்வ்யாவ்ருத்த வேஷமாகவும் ஸ்வரூபாதிரேகமில்லாதபடியாகவு முள்ளதற்குமேலே மிகையான ப்ரவ்ருத்திகள் நேர்ந்தால் ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமுள்ளதாக எம்பெருமான் திருவுள்ளம்பற்றி நம்மை ரக்ஷிப்பதில்தான் கைவாங்கி நிற்கநேரும். ஆகவே இங்ஙனம் பகவத்ப்ரவ்ருத்திக்கு விரோதியாகக் கூடிய ஸ்வப்ரவ்ருத்தியில் நின்றும் நிவ்ருத்தியடைவதே ப்ரபத்தியாம். இவ்வர்த்தத்தைக் கூரத்தாழ்வான் *க்ஷாம்யஸ்வோதபிஸத்திவிராமமாத்ரத்* என்கிற ஸ்ரீஸூக்தியால் காட்டியருளினர். *சசால சாபஞ்ச முமோச வீர:*என்கிற ராமாயண ச்லோகங் கொண்டு இதை ரஸமயமாக்கியருளிச் செய்வார்கள். *வனத்திடரை ஏரியாம் வண்ணமியற்று மிதுவல்லால் மாரி யார் பெய்கிற்பார் மற்று*என்கிற பூதத்தாழ்வார் பாசுரத்தின் நமது திவ்யார்த்ததீபிகையுரையைக் காண்க. ... ...

**ஆழ்வார் திருவடிகளே சரணம்.**
**எம்பெருமானார் திருவடிகளே சரணம்.**
**ஜீயர் திருவடிகளே சரணம்.**



ஸ்ரீ உ. வே. கோ.கம்அண்ணன் ரங்கராஜாசாரியர் என்கிற **ராஜகோபாலாசாரியர்**

ஸ்ரீ உ. வே. பெருமாள்கோயில் ப்ரதிவாதி பயங்கரம் (செல்வமணி) **ரங்கநாதாசாரியர்**



## 72. ப்ரபத்திஸ்வருப நிருபணம்

ப்ரபத்தியாவது என்ன? த்வமேவோபாய பூதோ மே பவேதி ப்ரார்த்த நாமதி:, சர்ணுகதி:* என்று சாஸ்த்ரம் சொல்லுகிறது. எம்பெருமானையே உபாயமாக அத்யவஸிக்குமதுவே ப்ரபத்தியென்பது. இத்தகையதான ப்ரபத்தியானது தன்னிடத்தில் உபாயத்வத்தை எங்ஙனே ஸஹிக்கும்? ப்ரபத்தியென்கிற வஸ்துதேறும்போதே அதன் அநுபாயத்வமும் தேறியே தீரும்.

## 73. நியாயஸித்தாஞ்ஜன காரிகை

*இயம் கேவல லக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா,
ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம்புநஸ் ஸஹகாரிணும்*

என்பது தேசிகனுடைய ஸ்ரீஸூக்திகளில்தலையானது. எம்பெருமானொருவனையே உபாயமாகக் கொள்வதாகிற இந்த ப்ரபத்தி யானது தன்னிடத்தில் உபாயதவ புத்தியைத் தடைசெய்கின்றது; ப்ரபத்திக்கே உபாயத்வ மில்லாதபோது அதன் ஸஹகாரிகளான வற்றுக்கு அது இல்லையென்னுமிடம் தனிப்படச் சொல்லவேணுமோ? என்பது இந்த ச்லோகார்த்தம். ... ...

## 74. நியாஸதிலகஸூக்தி

சாஸ்த்ரங்களில் ஒன்று விதிக்கப்படுமாஞல் அது உபாயமாக (ஸாதனமாக) இருந்து தீரும் என்பது பொதுவான வொருகொள்கை. உபாயமாக மாட்டாததை சாஸ்த்ரம் எதற்காக விதிக்கும்? எப்போது விதி ஏற்படுகிறதோ அப்போது விதிக்கப்படுகின்றவதின் உபாயத்வமும் கூடவே ஸித்திக்குமாதலால் சரம ச்லோகத்தில்*மாம் ஏகம் சரணம் வ்ரஜ* என்று விதிக்கப்படுகின்ற ப்ரபத்திக்கு உபாயத்வம் அநிவார்யம்—என்று பிறர் நினைக்கக் கூடியதுண்டு. இதனையும் ந்யாஸதிலகமென்கிற க்ரந்தத்தில் தேசிகனே எடுத்துக்காட்டி அழகாக ஸமாதானமும் வகுத்துள்ளார். *ஹேதுர்வைதே விமர்சே*என்கிற ச்லோகம் காண்க இதன் கருத்தாவது—ப்ரபத்தியானது விதிக்கப்பட்டிருப்பதனுல் உபாயமென்று சொல்ல வேண்டியிருந்தாலும் இங்கு அப்படி கொள்ளவேண்டா; ஒவ்வொரு வித்யையிலும் எம்பெருமானுக்கு ஒவ்வொரு ரூபம் அறியக்கடவதாயிருக்கிற கணக்கிலே இந்த ப்ரபத்தி வித்யையில் 'இதராநபேக்ஷ உபாயத்வம்' (பிறிதொன்றை எதிர்பாராத உபாயத்வம்) அறியத்தக்க ரூபமாதலால்—என்று ச்லோகத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. இதுதான் ஸாரமான வார்த்தை.

கார்த்திகையில் கார்த்திகை நாள்.
திருமங்கை மன்னன் திருவடிகளே சரணம்.



ஸ்ரீமதுபயவே. முதலியாண்டான் குமார
வேங்கடாசார்யஸ்வாமிக்குத் திருமாளிகையில்
நேற்றைக்கார்த்திகை மாதத்தில் நடந்த
ஷஷ்டியப்தபூர்த்திமஹோத்ஸவத்தில்
நடைபெற்ற திவ்யப்ரபந்த கோஷ்டியின்
காட்சி

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீ உ. வே. ஸ்ரீமான் P. B. அனந்தாச்சார்யர்,
அட்வகேட், சென்னை-1.



**ஸ்ரீமான் உ, வே, தி. அ. வேங்கடசவரதாசாரியர்**
''ப்ரஸங்கபாஸ்கரர்',





**ஸ்ரீமதுபயவே. வித்வான் திருமலை அனந்தாண்பிள்ளை சதாபிஷேகம்
கோவிந்தநரஸிம்ஹா சாரியர்ஸ்வாமி. கோயில்**

## 75. ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்திகள்

ஸ்ரீபாஷ்யகாரரின் சில ஸூக்திகளையுஞ் சாட்டுவோம்; *உபபத்தேச்ச* (3-2-4.) என்கிற ப்ரஹ்ம ஸூத்திரத்தின் பாஷ்யத்திலே —''ப்ராப்யஸ்ய பரமபுருஷஸ்ய ஸ்வப்ராப்தௌ ஸ்வஸ்யைவ உபாயத்வோபபத்தே: நாயமாத்மா ப்ரவசநேந லப்ய:... தநூம் ஸ்வாம்* இதி அநந்யோபாயத்வசரவணுத்'' என்றும், ''அம்ருதஸ்யைஷஸேது:'' இதி அம்ருதஸ்ய ஸ்வஸ்ய ஸ்வயமேவ ப்ராபக இதிஸேதுத்வவ்யபதேசோபபத்தேச்ச'' என்றும்; *பலமத உபபத்தே:*(3-2-37 ) என்கிற ஸூத்திரத்தின் பாஷ்யத்திலே—''ஸ ஏவ ஹி ஸர்வஜ்ஞஸ் ஸர்வ சக்திர் மஹோதாரோ யாகதாந ஹோமாதிபிருபாஸநந்ச ஆராதித: ஐஹிகா முஷ்மிக போகஜாதம் ஸ்வஸ்வரூபாவாப்திரூபம் அபவர்க்கஞ்ச தாதுமீஷ்டே; நஹிஅசேதநம் கர்ம க்ஷணத்வம்ஸி காலாந்தரபாவிபல ஸாதநம் பவிதுமர்ஹதி,'' என்றும் அருளிச் செய்துள்ளார்.







**ஸ்ரீமத் பரமஹம்ஸ த்ரி தண்டி**
**சின்ன ஸ்ரீமந்நாராயண ஜீயர் ஸ்வாமி.**

## 76. கீதார்த்தஸங்க்ரஹ ரக்ஷாஸூக்தி

மேலேகாட்டியஸ்ரீபாஷ்ய ஸூக்திகளை யநுஸரித்தேதேசிகனும் கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷையிலே* நிஜகர்மாதி பக்த்யந்தம். குர்யாத் ப்ரீத்யைவ காரித,: உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீ*: என்கிற ச்லோக வியாக்கியானத்தில்—''ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வ அநுபபத்திதர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ஸ்யாத் இதி பாவ: அந்தத: தைஸ்தைராராதிதோ பகவாநேவ ஹி ஸர்வத்ரோபாய,'' என்றருளிச்செய்தார்.





| ஸ்ரீமான் | ஸ்ரீமான் | ஸ்ரீமான் |
|---|---|---|
| P. T விஜயராகவன் (ரகு) | K. B ஸ்ரீதரன் (துரை) | K. K. A ராகவன் |

## 77. ப்ரபத்தி உபாயமென்பதன் உண்மைக்கருத்து

''ப்ரபத்தி உபாயம் என்று வாய்திறக்கவே கூடாதென்று ஒரு ஆசிரியர்க்கும் திருவுள்ளமில்லை. திருக்கச்சிநம்பிகள் மூலமாகப் பேரருளாளன் எம்பெருமானார்க்குப் பணித்த ஆறு வார்த்தைகளில் ''மோக்ஷோபாயம் ப்ரபத்தி'' என்றுள்ளது; எம்பெருமானாரும் ஸ்ரீ வைகுண்டகத்யத்தில் ''தத்ப்ராப்தயே ச தத்பாதாம்புஜ த்வயப்ரபத்தேரந்யத் ந மே கல்பகோடி ஸஹஸ்ரேணாபி ஸாதநமஸ்தீதி மந்வாந:'' என்றருளிச்செய்தார். அந்த கத்யத்திலே *''அம்ருதஸாக ராந்தர் நிமக்ந ஸர்வாவயவஸ் ஸுகமாஸீத''* என்ற விடத்திற்கு வியாக்கியானமருளிச் செய்யா நின்றபெரியவாச்சான்பிள்ளை ''ப்ரபத்தியையே உபாயமாகக் கொண்டு ப்ராக்ருத மண்டலத்தைவிட்டு'' என்றருளிச் செய்தார். பிள்ளை லோகாசார்யரும் ஸ்ரீ வசநபூஷணத்தில் ''ப்ரபத்த்யுபாயத்துக்கு இக்குற்றங்களொன்றுமில்லை'' என்றருளிச்செய்தார். அவ்விடத்திற்கு வியாக்கியான மருளிச் செய்யா நின்ற மணவாளமாமுனிகள் —''இக்குற்றங்களொன்றுமில்லை யென்கையாலே மற்றொரு குற்றமுண்டென்னுமிடம் தோற்றுகிறது; அதாவது ஆபாத ப்ரதீதியிலே உபாயத்வப்ரதிபத்திக்கு அர்ஹமாம்படியிருக்கை''என்றருளிச் செய்தார் ... ... ... ...

## 78. திருவாலிதிருநகரி மஹோத்ஸவாநுபவம்

ஐம்பதறுபது வருஷங்களுக்கு முந்திய நிகழ்ச்சியொன்றை விஜ்ஞாபிக்கிறேன். மாதாமஹஸ்ரீஜீயர் ஸ்வாமியோடு ஒருஸம்வத்ஸரம் [திருக்கார்த்திகை யுத்ஸவம்] திருமங்கை மன்னன் மஹோத்ஸவம் ஸேவிக்கத்திருநகரி விடைகொண்டிருந்தேன். [இதையெழுதத் தொடங்கும் போது உள்ளமுருகுகின்றது. எழுதக்கையோடவில்லை] அதிசயோக்தியன்று; ப்ராந்தங்களிலிருந்து எழுந்தருளின ஸ்வாமிகளும் சேர்ந்து இருநூறு ஸ்வாமிகளுக்குக் குறையாமல் இருபக்கங்களிலுமெழுந்தருளியிருந்து அதிகம்பீரமாக அருளிச் செயல் ஸேவிக்கிறார்கள். பெரிய திருமொழி ஸேவித்தாகிறது ஒருசைவப்பண்டாரம் உடம்பெல்லாம் நீறணிந்து ஒருபக்கமாக நின்று கொண்டு ச்ரவணாநந்தம் பண்ணுகிறான். மிகவும் பரவசனாய் விட்டான். பிள்ளைப் பெருமாளையங்கார் கலம்பகத்தில் என்னையுமறந்து தன்னையுமறந்ததே என்று பணித்தபடியாய் விட்டான் கத்திக்கத்தியழுகிறான், விக்கியழுகிறான் கோஷ்டி முடிந்தவுடனே ஜீயர்ஸ்வாமியருகே விடைகொண்டு அழுது கொண்டே விண்ணப்பிக்கிறான். “எங்கள் சைவசமயத்திலும் தேவாரத் திருமுறைகள் எண்ணிறந்தவையுண்டு; ஓதுவார் என்றுமிருக்கிறார்கள். ஒருவர்க்கும் ஒருசெய்யுளும் கண்டபாடம்கிடையாது. ஏடுபார்த்துப்பாடிக்கொண்டு போவார்கள். இப்படி கோஷ்டியாக வீற்றிருந்து வானம்பிளக்கச்சேவிப்பது சத்தியமாய்வானவர்கட்கும் கேட்கும். நானும் திருவாய்மொழியில் சிலபாசுரங்கள் சுற்றிருக்கிறேன். இப்படிப்பட்ட கோஷ்டியில்கூடவிருந்து சேவிக்குங்குலத்தில் பிறக்கபாக்கியமில்லாமல் போயிற்றேயென்றுதானழுகிறேன்” என்று சொல்லி மேலும் மேலும் அழுதுகொண்டே ஜீயர்ஸ்வாமிதிருவடிகளில் விழுந்து கிடந்தான். இருபது ஸம்வத்ஸரங்களுக்குமுன்பு சிலநாள் அவ்வுத்ஸவம் ஸேவிக்க அடியேன் அங்குவிடைகொண்டிருந்த போது இருபது முப்பது ஸ்வாமிகளையே ஸேவிப்பது அரிதாயிருந்தது *புராயத்ரஸ்ரோதः புலிநமது நாதத்ர ஸரிதாம்* என்கிற உத்தரராமசரிதச்யோகம் நினைவுக்குவந்தது.

## 79. ஸ்ரீபெரும்பூதூர் நிகழ்ச்சியொன்று.

திருவுள்ளூர்பிராந்தத்தில் பாலவேடு என்பதோர் அக்ரஹாரம். அவ்விடத்தில் ஸ்ரீமதுபயவே ரங்கராமாநுஜாசாரியர்ஸ்வாமியென்னும்வடகலைவித்வான் ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்வாமியுத்ஸவத்திற்கு ப்ராயிகமாய் வருவதுண்டு. வரும்போதுகளில் அங்குள்ளவித்வானகளோடு ஏதாவது வாத கேளி நடத்துவர் ஒருஸமயம். ஸ்வாமிவாழிதிருநாமத்தில் “அறுசமயச்செடியதனை அடியறுத்தான் வாழியே என்றுள்ளது; அடுத்த நாள்பாட்டில் “சங்கரபாக்கரயாதவ பாட்டப்ரபாகரர் தங்கள்மதம் சாய்வுற வாதியர்மாய்குவரென்று சது மறை வாழ்ந்திடுநாள்” என்றிருக்கிறது இதில் அறுசமயங்களைச்சொல்லவில்லையே,,



என்று பெரிய பூர்வபக்ஷம் பண்ணிக்கொண்டிருக்கிறார் அங்குள்ளவித்வான்கள் ஏதோஸமாதானம் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள் அருகிருந்த அடியேன் “ஸ்வாமிந்! தங்கள்மதத்தைவிட்டுக் கணக்கிடுகிறதே, அதையும் சேர்த்தால் அறுசமயமாகவில்லையா? என்றேன். இதுஅவர்க்கு விளங்கவில்லை. தங்கள்மதம் என்று ஒருமதமா? என்றார் “உங்கள் வீட்டில் எல்லாரும் ஸௌக்கியமா?” என்று கேட்பதற்கு தங்கள் வீட்டில் என்று தானே கேட்பது வழக்கம்; அதே போல் உங்கள்மதம் என்றபடி என்றேன் அதற்கு அவர் ஸ்வாமி பாஷ்யகாரர் எங்கள் மதமாகிய வடகலை மதத்தையும் கண்டித்து விட்டதாகச் சொல்லுகிறீரோ? என்றார். நான் சொல்லவில்லை; தேவரீர் எடுத்த பாசுரம் சொல்லுகிறது. என்றேன். சிரிப்புடன்அன்றைய வாதகேலி முடிந்தது. இதுஐந்தாவது திருநாள் நிகழ்ச்சி. தொடர்ந்துஇரண்டு நாள் இந்தசர்ச்சை நடந்தது.

## 80. மறுநாளைச் செய்தியையுங் கேண்மின்

முன்னாள் செய்தியை மறக்க வேண்டா; ஸ்ரீபெரும்பூதூருத்ஸவத்திற்கெழுந்தருளின பாலவேடுவித்வான் மறுநாள் அவ்வூரிலுள்ள கிலஸயூத்யர்களைத் துணைகொண்டு—“ஓய்காஞ்சீபுரம் ஸ்வாமிந்!” தங்கள்மதம் என்பதற்கு உங்கள் மதம்என்று பொருள்சொன்னீர் எங்கள்மதமான வடகலைமதத்தையும் ஸ்வாமி பாஷ்யகாரர் கண்டித்துவிட்டதாகச் சொன்னீர். அப்படி ஸ்வாமி கண்டித்தவைகளில் ஒன்று சொல்லுவீரா?” என்று கேட்டார் அதற்கு அடியேன் சொன்னேன். ‘உங்கள் மதக்கோட்பாடுகளில் ஒன்று சொன்னீராகில் அதற்கு ஸ்வாமியின் கண்டனம் காட்டுகிறேன்” என்றேன். “ஆகா சொல்லுகிறேன்; எங்களுக்கு உபாயாநுஷ்டானம் முக்கியம், அதில்லாமல் மோக்ஷம்கிடைக்காது” என்று வளவளவென்று சொல்லி இதை பாஷ்யகாரர் எங்கே கண்டித்திருக்கிறார். “சொல்லும்” என்றார் அதற்கு அடியேன் “இதற்குப் பிரபலமான கண்டனம் ஸ்வாமி தேசிகனே பரக்கஸாதித்தருளியிருக்கிறாரே, பாஷ்யகாரர் வரைக்கும் போகவேணுமா?” என்றேன் இப்படி அடியேன் சொன்னதற்கு அவர் *கோபஸ்ய வசமேயிவாந்* என்னும்படியாய் விட்டார். “ஸ்வாமிந் விநயத்துடன் விஜ்ஞாபிக்கிறேன், சீறியருளாமல்கேட்டருள வேணும் என்று சொல்லி உடனே பாடசாலையிலிருந்து ஸ்ரீதேசிகக்ரந்தமாலா ஸ்ரீகோசத்தை வரவழைத்து,—ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்தில்

## 81. ஸ்வாமி தேசிகன் அருளிய ஸ்ரீஸூக்திகளாவன

“*கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிறபடியே ஜீவனுக்குகர்த்ருத்வம் ப்ராமாணிகமே யாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதியோக்யமுமாயிருக்கும். ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்

ணிற்றும் *வரத! தவகலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபிமே நோதியாத்* என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம் போலே அண்ணாந்திருக்கிற விவனை ஸ்வாதீந ஸர்வ விஷய அப்ரதிஹதகர்த்ருத்வ முடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று... *என்னுணர் வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவன தின்னருளே யென்றும் *இசைவித் தென்னையுன் தாளிணைக் கீழிருத்துமம்மானே யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாய பூதனான அவன் செய்விக்கச் செய்கிற வ்பாஜமாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக வெண்ணுகை உசிதமன்றென்று ஏகசப்தத்துக்கு தாத்பர்யம்''—என்றுள்ளபங்க்திகளையும்,

## 82. விரோதபரிஹாரமென்னும் ரஹஸ்யத்தில்

''பக்திபோலே ப்ரபத்தியும் சோதிதமான உபாயமாய் நின்றது. இது பகவத்ப்ரஸாத வ்யவஹிதமாகையாலே ஸாக்ஷாத் பலஹேதுவன்றென்னுமிடம் பக்த்யாதிகளுக்கும் துல்யமாயிருந்தது. இப்படியிருக்க ப்ரபத்தியை உபாயமன்றென்று விசேஷித்துச் சொல்லுமவர்களுக்கு தாத்பர்யமென்னெனில். சாஸ்த்ரங்கள் பக்தியைப்போலே ப்ரபத்தியையும் உபாயமாக விதிக்கச் செய்தேயும் இவ்வுபாயத்தினுடைய அநுஷ்டான சரீரத்தைப் பார்த்தால் பரந்யாஸ ப்ரதானமாய் நீயே உபாயமாக வேண்டுமென்று அபேக்ஷிக்கிறபடியே பரஸ்வீகாரம் பண்ணிக்கொண்டு உபாயாந்தரஸ்தானத்திலேநிற்கிற ஈச்வரனுடைய நிரபேக்ஷோபாயத்வம் இவ்வித்யைக்கு வேத்யாகாரமாய் நிற்கையாலே வித்யாந்தரங்களிற் காட்டில் இவ்வாசியைப்பற்றப்ரபத்தியை உபாயமன்றென்றார்கள்,,என்றுள்ளபங்க்திகளையுங்காட்டினேன்;அதற்கு வெகுசாதுர்யமாகபதில் ஸாதித்தார் (அதாவது)—தேசிகன் யதிராஜஸப்ததியில்—*யதிக்ஷமாப்ருத்த்ருஷ்டம் மதமிஹநவீநம் கதமிதம்? * என்று பாஷ்யகாரர் தர்சனத்தை நவீநமென்றுஸாதித்திருக்கிறார். பரமதாநுவாதமேயொழியஸ்வமதமன்றே; அதுபோல இதுவுமென்று உண்மையாயிருக்க, யாரை மயக்குகிறீர். என்று சொல்லிக் கொண்டே நெகிழ்ந்து விட்டார். ... ... ...

## 83. எங்குப் போனாலும் உன் எழவுதான்

ஒரு குடும்பத்தில் பரம ஸாத்விகர் ஒருவர். அவர்க்குப் பிசாசு போன்ற ஒருத்தி வாழ்க்கைத் துணைவியாக அமைந்தாள். கணவனை மதிக்க மாட்டாள். அலக்ஷியமாகப் பேசுவாள். இதைப்பொறாத கணவர்க்கு ஒன்று தோன்றிற்று. அந்தத்தெருக்கோடியில் ஒரு பௌராணிகர் ஸ்ரீராமாயண ப்ர



வசனம் செய்து கொண்டிருந்தார். பல பெண்டுகள் சென்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். இவளும் நித்தியம் கேட்டு வந்தாளாகில் புத்தி திருந்தப் பெறுவாள் என்று தோன்றிற்று ஒரு நாள் கட்டளையிட்டார். போகிற பெண்டுகளையும் இவளைக் கூப்பிடச் செய்தார் கணவர். ஒரு நாள் கதை கேட்கப் புறப்பட்டுப்போனாள். அன்று அத்ரிபகவானாச்ரமத்திற்குப் பெருமாளும் பிராட்டியும் எழுந்தருளுகிறார்கள் அத்ரிமஹர்ஷியின் தர்மபத்தினியான அநஸூயை ஸீதாபிராட்டிக்குப் பதிவ்ரதா தருமத்தைப் பரக்க உபதேசிக்கிறாள். ஸீதாதேவி அவளுக்கு விடையிறுக்கிறாள். இதையெல்லாம் கேட்டுக் கொண்டு வீடுவந்து சேர்ந்தாளிவள். இன்று இன்ன கதை நடக்கிறதென்று கணவர்க்குத் தெரியும்; அதனால், இன்று இவளுடைய புத்தி கொஞ்சம் திருந்தியிருக்குமென நினைத்த கணவர் மனைவியை நோக்கி கல்யாணீ! கதை கேட்டாயா? எப்படியிருக்கிறது?'' என்று வினவினார். அதற்கு அவள் சொல்லுகிறாள்— ''எங்குப் போனாலும் உன்னெழவுதான் எழச்சொல்லுகிறது; உன்னைப்போன்ற ஆண்பிள்ளைகள் எழுதிவைத்ததுதானே புராணங்கள்'' என்று. இதற்கு மேலும் எழுத வேணுமா? ... ... ... ...

## 84. ஆபதர்த்தம் தநம் ரக்ஷேத்

ஓர் அக்ரஹாரத்தில் ஒரு பூஜாரி. அவர் தம் மூரிலிருந்து ஐந்தாறு மைல் தூரத்திலுள்ள இரண்டு மூன்று சிவாலயங்களுக்குப் பூஜாரி. தம் மூரிலிருந்து பகலில் புறப்பட்டுச் சென்று பூஜைகளை முடித்துக்கொண்டு இரவு ஒன்பது பத்து மணிக்கு ஊர் திரும்புவர். வழியில் கள்ளர்களிருந்தாலும் இவர் ஏழையென்று தெரிந்து கொண்ட அவர்கள் ஒன்றும் செய்யமாட்டார்கள். அதனால் அஞ்சாமல் நள்ளிருளிலும் போய் வருவர். இப்படி பல ஆண்டுகள் கழிந்தன பூஜாரிக்குத் தாம் பூஜை செய்யும் கோவில்களில் வருமானம் அதிகமாகக்கிடைத்ததனால் வயிர மோதிரங்கள் கன மகரகுண்டலங்கள் தங்க அரைநாண் முதலியன செய்வித்து அணியத் தொடங்கினார் இவர் பகலில் போகும் போது கள்ளர்கள் இதைக்கவனித்தார்கள் அவர் இரவில் திரும்புவதை எதிர்பார்த்திருந்தார்கள். இரவில் ஒன்பது மணிக்குத் திரும்புகிறார் பூஜாரி. ஸர்வஸ்வாபஹாரமும் ப்ரஹாரமும் கேட்கவேணுமோ? அவர் படித்தவர். சிரமத்துடன் ஊர்வந்து சேர்ந்து அங்குள்ளவரிடம் சொல்லுகிறார்—''*ஆபதர்த்தம் தநம்ரக்ஷேத்* என்கிற வசனத்திற்கு இப்போது தான் உண்மையான பொருள் தெரிந்தது. ஆபதர்த்தம்—ஆபத்காலத்தில் உதவுகைக்காக என்று இதுகாறும் பொருள் நினைத்திருந்தேன், அது தவறு. ஆபத்தை விளைப்பதற்காக என்பதுதான் உண்மையான பொருள் என்று இப்போதுதான் தெரியவந்தது -என்று உபந்யாஸம் செய்தார். ஊரார் செய்தியறிந்து வருந்துவார் சிலர்; சிரிப்பார் சிலராயினர். ... ... ...

## 85. [நெடுங்காலமாக நானும் கண்ணனும் சந்தித்துப் பேசுவதுண்டு, ஒருநாள் பேச்சை இங்கு உபஹரிக்கிறேன். நேற்று மார்கழி மீ 15 ஆம் தேதி நிகழ்ந்த பேச்சு]

**கண்ணன்**—கல்லுயர்ந்த நெடுமதிள் சூழ்கச்சிமேய அண்ணா! உன்னைத் தேடிக்கொண்டு கச்சிப்பதிக்குச் சென்றிருந்தேன்; நீ சென்னையிலிருப்பதாக வறிந்து, இதோ இங்கு வந்திருக்கின்றேன்; என்ன விஷயம் சொல்லு.

**அண்ணா**—கார்முகில் வண்ணா என் கண்ணா! யசோதைப்பிராட்டி உன்னை நோக்கிச் சொன்ன வார்த்தைகளில் ஒரு வார்த்தை நினைவிருக்கிறதா உனக்கு? *கண்ணா! நீ நாளைத்தொட்டுக் கன்றின்பின் போகேல் கோலஞ் செய்திங்கேயிரு* என்றாளல்லவா? அப்படி நானும் உன்னை இங்கே இரு என்கிறேன்; இருக்கிறாயா?

**கண்ணா**—என்னெஞ்சிடங்கொண்ட அண்ணா! என்னை உனக்கே தந்த கற்பகமன்றோ நான்! என்தாய் என்னை இங்கேயிரு என்று சொன்னது ஏழு நாளைக்கு மட்டுமே. "திண்ணார் வெண் சங்குடையாய்! திருநாள் திருவோண மின்றேழுநாள்" என்று சொல்லி அந்த ஏழுநாளைய மஹோத்ஸவத்திற்காக மட்டுமே இங்கேயிரு என்றாள்; நீ என்னை எத்தனை நாளிருக்கச் சொன்னாலும் இருப்பதென்கிற திடஸங்கல்பத்தோடன்றோ இன்று நான் வந்திருக்கிறேன். என்னை நீ தெய்வமாக நினைக்காமல் அந்தரங்க நேசனென்று நினை. அப்படியே நினைத்தேனென்று சொல்லு.

**அண்ணா!**—கள்ள மாதவா கண்ணா! இந்த உன் வார்த்தையைக் கேட்கும்போது எனக்கு ஒருபுறம் ஸந்தோஷமும் ஒரு புறம் கலவரமும் உண்டாகிறது. எதனாலென்று கேட்கிறாயோ? சொல்லுகிறேன் கேள் "சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீயெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்" என்கிற உன் சரிதையொன்றை நாள் தப்பாமல் நாடோறும் அநுஸந்தித்து வருகிறேன். நீ திருவாய்ப்பாடியில் வாழ்ந்தபோது மாலிக னென்பவனோடு தோழமை கொண்டாயாம்; தோழனான அவனையே தலையறுத்தாயாம்; இதை நினைக்க நினைக்க அஞ்சவேண்டியிருக்கிறதல்லவா? கண்ணா! இந்தக் கதை மெய்தானே?

**கண்ணா**—மெய்தானா? என்று அண்ணா! நீ கேட்கலாமா? இக்கதையை நான் மஹர்ஷிகளுக்குக் காட்டிக்கொடாமல் பெரியாழ்வா ரொருவர்க்கு மட்டுமேயன்றோ காட்டிக்கொடுத்தேன். அவ்வாழ்வார்க்கு இதில் ஒரு விப்ரதிபத்தியுமுண்டாகவில்லையே. நான் செய்த அச்செயல் யுக்தந்தானென்பதை அவர் விளக்கியிருப்பது உனக்குத் தெரியாதா?



**அண்ணா**—பாலாலிலையில் துயில்கொண்ட கண்ணா! எனக்கு ஏன் தெரியாது? அவ்வாழ்வார் இக்கதையைச் சொன்னவுடனே "ஆமாறு அறியும் பிரானே!" என்று சொல்லி உன் செய்கையை யுக்தமென்று ஸமர்த்தித்திருக்கிறபடியை நான் அறிந்தே யிருக்கிறேன். உன் சரிதைகளில் ஸமர்த்தன மில்லாததுண்டோ? தோழமைகொண்ட விடத்திலே தலையறுப்பதுமுண்டு என்றறிந்த பின் உன் தோழமைக்கு நான் எப்படி உகப்பது?

**கண்ணா**—கற்குங்கல்விச்சாரமறிந்த அண்ணா! *ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்* இத்யாதியான என்னுடைய அரிய பெரிய அருள்மொழிகளை விட்டிட்டு இந்தச் சிறு கதையைப் பற்றிக்கொண்டு ஏதோ பேசுகிறாயே. இது தகுதியன்று; இதை அறவே மறந்துவிடு. நான் காட்டின விச்வரூபங் கண்ட அர்ஜுனன் "விஹார சய்யாஸந போஜநேஷு" என்றதை அறிவாயே’ அப்படியெல்லாம் அவனோடு கலந்திருந்த நான் அதற்கும் மேலாகவன்றோ உன்னோடு கலந்து களிப்பேன். இப்போதைய விசேஷத்தைச் சொல்லண்ணா.

**அண்ணா**—இப்போது * மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளென் பதறிவாயே. முப்பதும் தப்பாமே உன்சிறுச் சேவகங்களை நான் சொல்லி ஓராயிரவரை * வண்பொன்னிப் பேராறு போல் வருங்கண்ண நீர் கொண்டவர்களாக ஆக்கிவருகின்ற அதிசயத்தை நீ கண்ணாரக் காணவேண்டாமா? இன்று * வல்லானை கொன்ற கதையையும் * மாற்றாரை மாற்றழிக்கவல்ல மாயத்தையும் பேசப்போகிறேன்; அப்படி எட்டிப்பார்; எத்தனைவர் எதிர்பார்த்திருக்கிறார்களென்று பார்’ எழுந்திரு; என்னோடு கூடவே நீயும் வா. "கட்கிலீயுன்னைக் காணுமாறருளாய்’. என்பார்க்கு உன்னைக் காட்டிக்கொடுக்கலாகாதா? எழுந்திரு போவோம். மணி 5-55 ஆய்விட்டது கண்ணா!

**கண்ணா**—என்னுள்ளங்குளிருமண்ணா! நீயெழுந்து செல்; பின்னாலே வருகிறேன். தினப்படியாக நான் வந்து கேளாமலில்லை. அப்படியே இன்றும் வந்துகேட்கிறேன். எம்பெருமானார் இருக்குமிடங்களைச் சொல்லுகின்ற அமுதனார் "உணர்ந்தமெய்ஞ்ஞானியர் யோகந்தொறும், திருவாய்மொழியின் மணந்தருமின்னிசை மன்னுமிடந்தொறும்" என்றாப்போலே என்கதை நடைபெறுமிடந்தொறும் நான் இருந்தே தீருவேன்.

**அண்ணா**—அப்படி நீ சொல்லிவிடக் கூடாது. "எம்மழகனார், அணியாய்ச்சியர் சிந்தையுள் குழகனார்" என்னநின்ற நீ எல்லாருங் காண என் பக்கத்திலே வீற்றிருந்து * ஸ சாபி ராம: பரிஷத் கதச் சநை:" என்னும் படியாகவேணும்,

கண்ணு—என்னருமைத் தோழனை அண்ணு! பிள்ளை லோகாசார்
யருடைய ஸ்ரீஸூக்திகளை நீ கண்டபாடம் செய்துவைத்து அவற்றை இன்று
நீ பொய்யாக்கப்பார்க்கலாமா? ''இரா மடமூட்டுவாரைப்போலே உள்ளே
பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும்'' ''கண்காண
நிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றுதபடி நின்று''
...இந்த ஸ்ரீஸூக்திகளைப் பழுதாக்கப்பார்ப்பது தகுமா அண்ணு?

அண்ணு—ஆறுமணி அடித்துவிட்டது உன் இஷ்டப்படி யிருந்து கேள்
எட்டு மணிக்குமேல் நாம் கலந்துபேசுவோம் ... ... ...

## 86. ஆசார்ய சிஷ்யர்களின் ஹாஸ்ய கதையொன்று

மிகச் சிறந்த வித்வானுெருவர், ஆசார்யபீடம் வஹிப்பவர், ஆஸ்தான
வித்வான்கள் நால்வருடன்சிஷ்யயாத்திரை புறப்பட்டார். கல்கத்தாமகாநகரம்
சென்று சேர்ந்து அவ்வூரில் தம்முடைய சிஷ்யர்களில் தலைவனுன; ஒரு
ஸேட்டுக்குத் தம்முடைய வரவைத் தெரிவிக்கவேண்டி முதல்வரான ஆஸ்
தானவித்வானை அவனிடமனுப்பினுர். அவர் வந்து ஸேட்டைக் கண்ட
வுடனே ஒன்றும் பேசத்தோன்ருமல், திகைத்து நின்ருர், ஏனென்ருல் அந்த
ஸேட்டு மிகவும் ஸ்தூலகாயர். அங்கிருக்கிற வாசற்படிவழியாக அந்த ஸேட்
போக்குவரத்து செய்யமுடியாதென்று அவருடைய எண்ணம். ஆகவே இவன்
எப்படி இந்த பங்களாவினுள்ளே வந்து சேர்ந்தானென்கிற விசாரம் அந்த
வித்வான் மனதில் தோன்றிவிட்டது அதனுல் ஒன்றும் வாய்திறவாமல்
திகைத்து நின்ருர். அதுகண்ட ஸேட் 'நீர்யார்? எதற்காக வந்தீர்? ஏன்
நிற்கிறீர்' என்று கேட்க, அதற்கு வித்வான் 'ஸேட்ஜீ! அதைப்பற்றிப் பிறகு
பேசுகிறேன்; என்னுடைய பெரிய ஸந்தேஹத்தை நீமுதலில் தீர்க்கவேணும்
இந்த பங்களா கட்டினபிறகு நீஇதனுள்ளே புகுந்திருக்க முடியாது, முன்னு
டியே உன்னை உள்ளே உட்காரவைத்து இது கட்டியிருக்கவேண்டும் என்று
நினைக்கிறேன். இப்படிதானு? வேறு விதமா? சொல்லாய் சீமானே!' என்ருர்.
இதுகேட்டவுடனே ஸேட்டுக்குக் கோபம் உண்டாயிற்று ஏதோ சிறிது
பருத்திருக்கிருேமென்று நம்மை இப்படி பரிஹாஸம் செய்கிருனேயிவன்! என்று
சீறி 'இந்த பிராமணனை ஒருஅறையில் அடையுங்கள்' என்று கட்டளையிட்
டான். அப்படியே வித்வான் அடைபட்டுக்கிடக்க. ஆசாரியர் வெகு நாழிகை
எதிர்பார்த்தும்,முன்னஞ்சென்றவித்வான் வரக்காணுமல் இரண்டாவது ஆஸ்
தான வித்வானை ஸேட்டிடம் போகவிட்டார். அவர் வந்து வாசலிலேயே
செய்தி விசாரித்து நடந்ததைத் தெரிந்துகொண்டு ஸேட்டிடம் சென்று,
'ஸேட்ஜீ! எங்களில் ஒருவன் இங்கு வந்து ஏதோ தவருன கேள்வி கேட்ட
தாகத் தெரிகிறது அவன் முழுமூடன்' ஏதோ வொருவிதமாக இந்த பங்களா
வுக்குள் நீபுகுந்தாய்விட்டது; அதைப்பற்றி இப்போது ஏன் விசாரம்?



நாளைக்கு நீமரணமடைந்துவிட்டால் உன்னை எவ்வழியாலே வெளிப்படுத்து
வது என்கிற விசாரமன்ருே இப்போது செய்யத்தக்கது; அதை விட்டுஎப்படி
உள்ளே புகுந்தாய்?, என்கிற வீண் விசாரத்தை அந்த மூடன் ஏதுக்குச்
செய்தான்?' என்ருர். அதுகேட்ட ஸேட்டு அளவிறந்த கோபங்கொண்டு
அவரையும் உள்ளேயடைக்க உத்தரவிட்டான். அவரும் அடைபட்டுக்
கிடக்க,ஆசாரியர் நெடுநேரம் எதிர்பார்த்து விட்டு மூன்ருமாஸ்தான வித்
வானை ஸேட்டிடம் போகவிட்டார் இவர் வந்து வாசலிலேயே, முன்வந்த
இருவருடையவும் செய்தியை விசாரித்தறிந்து ஸேட்டிடம் வந்து, 'ஸேட்ஜீ
எங்களில் இருவர் இவ்விடம் வந்து மிக மூடத்தனமான பேச்சுக்களைப்
பேசினதாகக் கேட்டு மிக வருந்துகிறேன் நீ மரணமடைந்தொழிந்த பிறகு
எப்படி உன்னை வெளியிற்கொண்டு போவதென்கிற விசாரம் ஏதுக்கு?
சுவர்களை ஜாடாக இடித்துவிட்டு எளிதில் கொண்டுபோகத் தடை
யென்ன? ஏதுக்கு வீண்விசாரம் கொண்டார்கள் எங்கள் வித்வான்கள்?அந்த
மஹாமூடர்களை விட்டுத்தொலை' என்ருர். அதுகேட்ட ஸேட்டு இன்னமும்
கோபம் பொங்கி அவரையும் உள்ளேயடைக்க உத்தர விட்டான் அவரும்
அடைபட்டுக்கிடக்க, வெகுநாழிகை பொறுத்து ஆசாரியரால் அனுப்பப்பட்ட
நான்காம் வித்வான்ஓடிவந்துமுன்னேவந்த மூவருடையவும் செய்திகளை வாச
லிலேயே விசாரித்தறிந்து கொண்டு ஸேட்டிடம் வந்து ,ஸேட்ஜீ! எல்லா
விஷயங்களையும் கேள்விப்பட்டேன்; என்ன அநியாயமான வார்த்தை! இந்த
பங்களா எவ்வளவு மநோஹரமாயிருக்கிறது! இதையிடித்து உன்னை வெளிப்
படுத்துவதென்பது ஐயோ, என்ன பேச்சு! எதற்காக இடிக்க வேண்டும்?
நீ மாண்டபிறகு உன்னைக் கத்தியினுல் சதைசதையாக அறுத்தால் ஒரு
புட்டுக்கூடையில் வெளியேற்றமுடியாதா? ஒருகூடையில் முடியாதென்ருல்
நாலைந்து கூடைதான் ஆகட்டுமே; நாலைந்து நிமிஷத்தில் அநாயாஸமாக
வெளியேற்றக் கூடியதாயிருக்க, சுவர்களையிடிப்பதும் வாசற்காலைப்பேர்ப்
பதுமான ஆலோசனைகள் என்ன அநியாயம்! என்ருர். ஸேட்டுக்குக்
கோபம் தாங்கமுடியவில்லை. நால்வர்க்கும் கொடுந்தொழில் புரியக் கட்ட
ளையிட்டான். இப்படி நால்வரும் சென்று திரும்பிவாராமலேயிருக்க, ஆசாரி
யர் செய்தியறிவதற்கு நேராக ஓடிவந்து நால்வரின் செய்தியைக் கேட்டறிந்து
ஸேட்டிடம் சென்று; மஹாப்ரபோ! மஹாமூடர்களான நால்வரின் செய்
தியைக் கேட்டறிந்தேன்; நீ மாண்டபிறகு இந்த பங்களாவை யார் ஆள
முடியும் உன்னை சதைசதையாக அறுப்பதென்பதும் கூடைகளில் கொண்
டுபோவதென்பதும் என்ன அநியாயமான பேச்சு உன்னை இந்த பங்களா
விலேயே கொளுத்தி சுடுகாடாக்க முடியாதா? நீயே ஆலோசித்துச் சொல்லு
என்கிருர் கதை மேலேயும் சொல்லவேணுமா? இவர்களோ மஹாவித்
வான்கள் நிற்கிறேன். வால்மீகிமுனிவர் நாரதமுனிவரை நோக்கி ப்ரச்னம்
பண்ணுகையில் ''வித்வாங்க?'' என்றொரு கேள்வியும் ''க:ஸமர்த்த:'' என்று
மற்றொரு கேள்வியும் கேட்டது சரிதானே. ... ...

## 87. ஆழ்வார்திருநகரிப்பிள்ளைகளிருவர்பேச்சு

அடியேன் நாற்பத்தைந்து வருடங்களுக்குமுன் இரண்டு மாத
காலம் ஆழ்வார்திருநகரியிலிருந்து கொண்டு ஆசார்யஹ்ருதயப்ரவசனம்
பண்ணினகாலத்தில் பிள்ளைகளிருவர் பெரும்பாலும் கூடவேயிருந்து
துணைபுரிவர். ஒருநாள் இருவரையும் ஒன்று கேட்டேன்; "பொய்சொல்லாமல்
பதில் சொல்லுங்கள்; நீங்கள் மூன்று வேளையும் தப்பாமல் ஸந்தியாவந்
தனம் செய்வதுண்டா? சொல்லுங்கள்' என்றேன்; முதல்வன் சொன்னன்
—"ஸ்வாமிந்! இதில்பொய்சொல்ல என்ன இருக்கிறது? இவ்வூரில்தீர்த்
தத்தைத் தேடிப்போகவேணுமா? தாமிரபர்ணி வாசலில் ஓடுகிறது; ஸந்தி
யாவந்தனம் மூன்றுவேளையும் தவருது பண்ணுகிறேன்" என்ருன். மற்ருெரு
வன் சொன்ஞன்—"ஸ்வாமீ! அவனுக்கு இரண்டுபாவம்: அடியேனுக்கு
ஒரேபாவம்; ஒருவேளைகூட ஸந்தியாவந்தனம் செய்யாமல் இருப்பதுஒரு
பாவம்; தவருமல் செய்கிறேனென்றது. மற்ருெருபாவம்; எனக்குஸந்தியா
வந்தனம் பண்ணுதபாவமொன்றே; பொய்சொல்லுகிற பாவமில்லை'—என்று.
இதைக்கேட்டுச்சிரித்துமாளவில்லை. பிறகு அடியேன் பலகால் திருநகரிக்கு
விடைகொண்டதுண்டு; அந்தப்பிள்ளைகளைக்கண்டு பேசவேணுமென்ருசை;
அவர்கள் தென்படுவதில்லை. ... ... ... ... ... *

## 88. ஆழ்வார் திருநகரியம்மையாரின்பேச்சு.

கீழே தெரிவித்த ஸந்தர்ப்பத்திலேயே ஒருநாள்பின்மாலை தாமிரபர்ணி
யில்நீராடச்சென்றேன் அன்றுத்வாதசி. ஒருஅம்மையார் போஜனம் செய்து
விட்டு ஆற்றில் கண்டூஷம்பண்ணுகிருள். அந்த அம்மை பரிசிதையாகை
யாலே "பாட்டியம்மா! பாரணையாய்விட்டதா என்ன? என்றேன்; ஆச்சுது
என்ருள். "த்வாதசியானலும் பாரணைக்கு ஸூர்யோதயமாகவேண்டாவா?
என்றேன். உடனே அந்தஅம்மா "வகுளபூஷணபாஸ்கரோதயமானவிடத்திலே
ஸூர்யோதயமாகவில்லையென்று நீராசொல்லுவது. நீரா இந்தவூரில்ஆசார்யஹ்
ருதயம் சொல்லவந்திருக்கிறீர்? என்ருள்? எனக்கோ மிகவும் லஜ்ஜையாய்
விட்டது. தீர்த்தமாடித்திருமண்காப்பணிந்து கொண்டு அந்த அம்மையைத்
தேடிச்சென்று தெண்டனிட்டு விடைகொண்டேன். நம்நாட்டுப்பெண்களுக்கு
இங்ஙனே பேசத்தெரியுமா?

## 89. நித்யஸ்மரணத்திலுள்ள திருத்தகப்பஞரநுபவமொன்று.

அடியேனுக்கு திவ்யப்ரபந்தஸந்தைகள் பெரும்பாலும் திருத்தகப்பஞர்
பக்கலிலேயாயிற்று. பெரியாழ்வார் திருமொழி ஸந்தையாகிறது; அதில்
இரண்டாம் பத்தில் மூன்ருவது திருமொழியாரம்பமாகிறது. "போய்ப்



பாடுடையநின்தந்தையும் தாழ்த்தான் பொருதிறல் கஞ்சன்கடியன்;,
என்கிற முதல்பாதமாயிற்று. மேல் "காப்பாருமில்லை கடல்வண்ணுவுன்னை'
என்று ஸாதிக்கவேணும். சொல்லெடுக்கும் போதே திருவாய் திறக்க
மாட்டாதே விக்கி விக்கியழுகிருர். அடியேனுக்கு ஸந்தையாகும்போதெல்லாம்
பிதாமஹி கூடவேயிருந்து கேட்டிருப்பள் "என்னரங்கஸாமீ! அழுகிருய்!
தேள் கொட்டிற்ரு? பாம்புகடித்ததா? என்று கேட்கிருள் அவளுக்கும் ஒன்றும்;
சொல்லமாட்டாதேவிக்கி விக்கியழுகிருர். ஒருநாழிகைபொறுத்து,"காக்குமியல்
வினஞன கண்ணபெருமானுக்குக் காப்பாரைஎங்கிருந்து கொண்டுவருவது!'
என்று சொல்லிப் பின்னையும்விக்கியழுகிருர்.

அன்பர்களே! இது அடியேனுடைய பத்தாவது பிராயத்தில் நிகழ்ச்சி
இப்பிராயத்தில் நினைவிருக்கப்ரஸக்தியே கிடையாது தொண்டமண்டலம்
ஸ்கூல்ஹால் உபந்யாஸங்களிலும் மற்றும் பலப்ரகரணங்களிலும் இதைப்
பாவசஞய்ச் சொல்லியிருக்கிறேன். இயல்கோஷ்டிகளில் அந்தப்பாசுரம்
ஸேவிக்கும் போது பலர் என்முகத்தைப்பார்ப்பர்கள். அடியேன் முன்னடி
ஸேவிப்பதை விட்டுப்பின்னடிஸேவிக்கப்புகுவேன். ... ... ...

## 90. (மாதாமஹ) ஸ்ரீஜீயர்ஸ்வாமியின்ஸ்மரணம்

அடியேனுடைய பூர்வாச்ரமமாதாமஹரான (கீழ்ப்ரஸ்தாவித்துள்ள)
ஸ்ரீஜீயர்ஸ்வாமியின் அநுபவங்களில் பலபல விஜ்ஞாபிக்க வேண்டியதுண்டு
இப்போது ஒன்றையே விஜ்ஞாபித்து நிகமிக்கிறேன். ஸ்ரீவசநபூஷண
ஆசார்யஹ்ருதயாதி ரஹஸ்யங்களின் மூலம் ஸந்தைஸாதித்தருளினது
ஸ்ரீஜீயர்ஸ்வாமியே தத்வத்ரயரஹஸ்யத்தில் ஈச்வரப்ரகரணம் ஸந்தையா
கிறது. அதில் கடைசி சூர்ணிகை:-

"ஸ்வஸ்வாமி பாவத்தை மாருடிக்கொண்டு அஜ்ஞரைப்போலேயும்
அசக்ததரைப்போலேயும்அஸ்வதந்த்ரரைப் போலேயுமிருக்கச்செய்தேயும்
அபாரகாருண்யபரவசஞய்க் கொண்டு ஸர்வாபேக்ஷிதங்களையும்

கொடுத்தருளும்" என்பது. இதைத்தம் திருவாக்காலே ஸாதிக்கமாட்டாதே
திருக்கண்களைத் துடைத்துக்கொண்டு ஸ்ரீகோசத்தைப் பார்த்து நீயேசொல்
லிக்கொள் என்று ஸாதித்து விட்டு உள்ளேயெழுந்தருள்வர். எம்பெரு
மான் எதைவிட்டாலும் விடுவன்; கருணையைமட்டும் விடமாட்டான்; விட
அவஞலாகாது என்று உள்ளொமுருகிக் குரல்தழுத்தருளிச்செய்வார் ...

## 91. ஸஹஸ்ரநாம பாஷ்யப் பெருமை

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு த்ரிமதஸ்தர்களாலும் பாஷ்யமியற்றப் பட்டுள்ளது. அவற்றுள் நமது விசிஷ்டாத்வைத ஸம்பிரதாயத்திற்கான பாஷ்யம் பட்டருடையதேயாம் அதற்கு பகவத்குணதர்ப்பணமென்று திருநாமம்சாத்தினது சாலப்பொருத்தம். குணநுபவஞ் செய்யக் குதூஹலமுள்ளவர்கள் ஈடுமுப்பத்தாருயிரப்படியென்கிற பகவத்விஷயதிவ்யக்ரந்தத்தில் போதுபோக்கவேணுமென்பது ப்ரஸித்தம். அதில் அவகாஹிக்க ப்ராப்தியற்ற சுத்தஸம்ஸ்க்ருதபண்டிதர்கள் சாஸ்த்ரஜ்ஞானமுள்ளவர்கள் அற்புதமாகக் குணநுபவஞ்செய்யவிரும்பினுல் அவர்களுக்கு பட்டருடைய ஸஹஸ்ரநாம பாஷ்யமே தஞ்சமென்னத்தகும். ஏற்கெனவே ஸஹஸ்ரநாமத்திற்கு சங்கர பாஷ்யம் தோன்றியுள்ளது. நிர்க்குணப்ரஹ்மவாதிகள் எம்பெருமானுடைய திருநாமங்களுக்கு அர்த்தஞ் சொல்லப்புறப்படுவது ஸாஹஸமென்றே பட்டர் திருவுள்ளம் போலும். பகவத்குணங்களை அற்புதமாக அனுபவிப்பதற்கென்றே அமைந்த இந்த ஸஹஸ்ரநாமத்திற்கு ஆழ்வார்களின் ஈரச்சொற்களில் ஆழ்ந்தவர்களன்றே பொருள் சொல்ல முன்வரவேண்டும்; அவ்வருளிச்செயல்களுக்கு அதிமாத்ரம் வைதேசிகர்களான புறச்சமயிகள் இதற்குப் பொருளுரைப்பதாக இழிந்து மனம்போனபடியெல்லாம் வியாக்கியானம் செய்திருப்பதுஎன்னே! என்று மிகவருந்தியபட்டர் தாம் வியாக்யானிக்க எம்பெருமானுருடைய நியமனம் பெற்றிருந்தார். குணநுபவத்திற்கென்று இட்டுப் பிறந்தவர்களில் தலைவரன்றே பட்டர். அருளிச் செயலமுதக் கடலில் அல்லும் பகலும் குடைந்தாடி அரும்பெரும் அற்புதமாக அநுபவித்தும் அநுபவிப்பித்தும் போந்த பரம ஸிகஸார்வபௌமரான பட்டர் அருளிச்செய்த பாஷ்யத்தை நம்மவர்களிலும் பரிபூர்த்தியாக ஸேவிப்பவர்கள் மிகச்சிலரே. உண்மையில் இந்த பாஷ்யத்தை யநுபவிக்க அதிகாரிகள் துர்லபர்கள்; ஏனென்றல் 'பரிசிதமிவ அதாபி கஹநம்-பஹுமுகயவாணீ விலஸிதம்'' என்று ஸ்ரீரங்கநாச்சியாரை நோக்கித் தாம்வேண்டினபடியே அதிகம்பீரமான வாக்விலாஸங்களைக் கொண்டே பெரும்பாலும் இந்த பாஷ்யத்தை அமைத்தருளியுள்ளார் ஆகவே இதற்கு அதிகாரிகள் மிகச் சிலரேயாவர். ... ... ... ...

---

இந்த திவ்யக்ரந்தத்தில் அவிஜ்ஞாதா என்னும்
திருநாமபாஷ்யத்தில் ''ந தே நிரஸநீயா: அபிது சோசநீயா:,,
என்றருளிச் செய்தது எவ்வளவு கம்பீரமான ஸ்ரீஸூக்தி!
பட்டர் திருவடிகளே சரணம்.

---





நிகழும் துன்மதியாண்டு மாசிமீ 7வ (19—2—82) ஏகாதசி வெள்ளிக்கிழமை கூடின பஞ்சபர்வோத்ஸவப் புறப்பாடு தேவப்பெருமாளுக்குத் திருவடி ஸன்னிதிவாசலில் இயல் தொடக்கம்.

## 92. ஐதிஹ்யங்களின் ப்ராமாண்யம்

முதன் முதலாக இன்னாரால் சொல்லப்பட்டதென்று தெரிந்து கொள்ள முடியாமல் பரம்பரையாய்ச் சொல்லப்பட்டு வருகிற புராதந வ்ருத்தாந்தங்களுக்கு ஐதிஹ்யமென்று பெயர். 'இதிஹ' என்கிற வட சொல்லின் மேல் 'ஸ்வார்த்தேஷ்யஞ்' ப்ரத்யயம் ஏறி ஐதிஹ்யமென்று ஆயிற்று. இதிஹ, இதிஹ இப்படியாம் இப்படியாம் என்று வெகுகாலமாகச் சொல்லிவரும் கதை ஐதிஹ்யம் என்றதாயிற்று. பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் திருவரங்கம் பெரிய கோயிலிலுள்ள மநுஷ்ய திர்யக் தாவர வர்க்கங்களை நித்ய ஸூரிகளாகவும் முக்தர்களாகவும் முழு

ஆஷூக்களாகவும் கொள்ளவேணு மென்பதைத் தெரிவித்தருளவேண்டி யருளிச்செய்த ×அஹ்ருத ஸஹஜதாஸ்யஸ் ஸூரய:× இத்யாதிச்லோகத்தில் நான்காம் பாதத்தில் ''இதிஹஸ்ம ப்ராஹுூ:'' என்றார். இது நான் புதிதாகச் சொல்லுவதன்று; அநாதிகாலமாகப் பரம்பரையாய்ச் சொல்லப்பட்டு வருகிறது.' என்கிற விவக்ஷையில் 'இதி ஹ ஸ்ம ப்ராஹுூ:' என்றருளிச் செய்தபடி

கர்ண பரம்பரையாகவே வந்த ஐதிஹ்யங்கள் கால விசேஷங்களில் ப்ராமாணிகர்களால் ஏடுபடுத்தப்படுகின்றன அங்ஙனம் ஏடுபட்ட ஐதிஹ்யங்கள் நம்பத்தகுந்தவைதானா? என்கிற விசாரம் பிற்காலத்தவர்களுக்கு விளைவதுண்டு. ஏடுபடுத்தினவர்கள் யாவரோ, அவர்களிடத்தில் தேவதாப்ரதிபத்தியுள்ளவர்கள் நம்புவதும், மற்றையோர்கள் நம்பாமற் போவதும் உள்ளது பழைய ஏட்டுப் பிரதிகளை அச்சுப்பதிப்புக்குக் கொண்டுவருங் காலத்தில் அவரவர்கள் [முத்ராபகர்கள்] யதேஷ்டமாகப் புதிய கதைகளைச் சேர்ப்பதும் பழைய கதைகளை மாறுபடுத்துவதுமுண்டு இதனால் ஐதிஹ்யங்களைப் பூர்த்தியாக நம்புவதற்கு இடமில்லாமலிருக்கிறதென்று சிலபல பெரியோர்கள் வருந்திச் சொல்ல நாம் கேட்டிருக்கிறோம்

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஆழ்வார்கள் விஷயமாகவும் ஆசாரியர்கள் விஷயமாகவும் பல ஐதிஹ்யங்கள் ப்ரஸித்தமாக வுள்ளன இவற்றில் இதர மதஸ்தர்களின் ப்ரதிபத்தி எப்படிப்பட்டதென்கிற விசாரம் நமக்குவேண்டா நம்முடைய தர்சநத்தைச் சேர்ந்தவர்கள் யாவரும் இவ்வைதிஹ்யங்களை ஸமரீதியான ப்ரதிபத்தியுடன் கொண்டாடி வருகிறார்களாவென்றுபார்த்தால் இது தேறுவதில்லை விச்வகுணதர்சகாரர் ''விததைதிஹ்ய ஸஹஸ்ரவர்ணநேந'' என்று ஒன்று எழுதிவைத்துப் போனார் அதை ஒரு நிதியாகக்கொண்டு ஒவ்வொரு விஷயத்திலும் அதையே யெடுத்துச் சொல்லுவார் பலருளர் பொய்யான ஐதிஹ்யங்களும் கலந்துபோயிருக்கின்றனவென்பதை நாமும் இசைவோம் தாவதா ஐதிஹ்யங்கள் யாவும் பொய்யானவையென்று சொல்லி விடுவது யுக்தமன்று

திருவெவ்வுளூரில் திவான்பகதூர் T T ரங்காசாரியர் என்று ஒரு மஹநீயர் இருந்தார் இவருடைய காலம் நாற்பது ஐம்பது வருஷங்களுக்கு முன்பு என்று கொள்ளுங்கள் இவர் லௌகிக உத்யோகத்தில் சிறந்த பதவியில் வாழ்ந்தவராயினும் வைதிகத்திலும் நன்றாகப் படிந்திருந்தவர் உபய வேதாந்த க்ரந்தங்களையும் அதிகரித்திருந்தவர் வேதாந்ததீபிகையென்கிற பத்ரிகைக்குச் சில வருஷங்கள் ஸம்பாதகராகவுமிருந்தார் இந்த மஹான் நவீன 'ஆராய்ச்சித் துறையில் அபிநிவேசமுள்ளவராதலால் நமது ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் வழங்கும் ஐதிஹ்யங்களை ஆராயப்புகுந்து விப்ரதிபத்திகள் செய்யத் தொடங்கினார்; முந்துறமுன்னம் திருமங்கையாழ்வாருடைய சரித்திரத்தை விமர்சிக்கப்புகுந்து, அவ்வாழ்வார் நாகபட்டினத்தில் ஸூவர்ணமயமாயிருந்த ஜைனபௌத்தவிக்ரஹங்களை ''ஈயத்தாலாகாதோ இரும்பினாலாகாதோ? ......மாயப் பொன் வேணுமோ மதித்துன்னைப்பண்ணுகைக்கே'' என்று சொல்லி ப்ரஹரித்து ஹரித்துக் கொண்டுவந்து ஸ்ரீரங்க பிராகார மண்டபாதி நிர்மாணகைங்கர்யத்தில் உபயோகித்தார் என்று குருபரம்பரா ப்ரபாவத்தில் எழுதப்பட்டுள்ள சரித்திரத்தை யெடுத்துக்கொண்டு ''இது மிகவும் அநீதியான வரலாறு; ப்ராமாணிகர்களாய் யோக்யர்களாய்ப் பரம பக்தர்களான ஆழ்வார்கள் இப்படி அநீதியான செயல்களைச் செய்தார்களென்று எழுதிவைப்பது நமது பரமபாவனமான மதத்திற்கு இழுக்காகும்'' என்று விபுலமாக எழுதி வேதாந்ததீபிகையில் பிரசுரமும் செய்துவிட்டார், அப்போது அதைக்கண்ட நாம் 'ஒரு ப்ரதிஷ்டிதரான மஹான் இப்படி ஸஹஸா எழுதிவிட்டாரே!' என்று மிக வருந்தி அவருக்கு அந்தரங்கமாக வொரு விண்ணப்பமெழுதலானோம். (அதாவது) வெறுந் தமிழ் வசன நூற்களில் மட்டும் காணும் ஐதிஹ்யங்களில் தேவரீர்கள் எவ்விதமாக ஆராய்ச்சி செய்தாலும் செய்க. கூரத்தாழ்வான், பட்டர், வேதாந்த தேசிகன் போன்ற பூருவாசாரியர்களின் ச்லோகபத்தங்களாய் ஸர்வஸம்ப்ரதிபந்நங்களான திவ்யஸூக்திகளினால் நிர்விவாதமாக ஏற்படுகிற ஐதிஹ்யங்களிலும் விவாதப்படுவதும், ஹாஹாகாரம் செய்வதும் தேவரீரைப் போன்ற ஆஸ்திகர்களுக்குத் தகுமா? பட்டர் ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்தில் ஜிதபஹ்ய ஜிநாதிபணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டப வப்ரகணாந்விததே பரகால கவி: ப்ரணமேமஹி தாந்× என்கிற ச்லோகரத்நத்தில் நிஸ்ஸந்தேஹமாகப் பொறித்துவைத்த திருமங்கையாழ்வார் சரித்திரத்தை தேவரீர் அநியாயக் கதையென்று எழுதிவிட்டால் இதை ஸ்ரீவைஷ்ணவ





ஏகாதசி வெள்ளிக்கிழமை புறப்பாட்டில் திருமுற்ற வெளியில் இயல்சாற்று (19—2—82)



உலகம் ஏற்குமா? அந்த ச்லோகம் பிற்காலத்தவர்களால் கல்பிக்கப்பட்டு பட்டர் ஸ்ரீ ஸூக்திமத்யே புகுத்தப்பட்டதென்று தேவரீர் திருவுள்ளமா? இவ்வளவு கம்பீரமான ச்லோகம் பட்டர் தவிர வேறொரு வ்யக்தியால் நிருமிக்க முடியுமா? ஏறக்குறைய ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு அவதரித்த இந்த ச்லோகத்தைக் காற்கடைக்கொண்டு நெஞ்சில் தோன்றினதை எழுதி வெளியிட்டுவிடுவது யுக்தமாகுமா?...இத்யாதிகள் விஜ்ஞாபனம் செய்திருந்தோம் உண்மையில் அவர் பரமாஸ்திகராகையாலே அந்த பட்டர் ஸ்ரீஸூக்தியிலே அத்யந்த ப்ராவண்யங்கொண்டு, தாம் அவசரப்பட்டு எழுதினதற்கு மஹத்தான அநுதாபமுங் கொண்டு நமக்கு பதில் எழுதினர் -"ஸ்காலித்யே சாஸிதாரம்'' என்ற முறையில் தேவரீர் சிக்ஷித்ததற்கு மிகவும் க்ருதஜ்ஞனாகிறேன் — இத்யாதி.

ஸ்ரீ காஞ்சீபுரியில் **திருவெஃகா** என்கிற திவ்யதேசத்தெம்பெருமானுக்கு **யதோக்தகாரி** யென்றுதிருநாமம். இத்திருநாமமே தமிழில் 'சொன்ன வண்ணம் செய்த பெருமாள்' என வழங்கி வருகின்றது திருமழிசையாழ்வார் காலத்தில் அவருடைய திருவடியான கணிகண்ணனைப் பல்லவமன்னவன் கச்சியிலிருக்கக் கூடாதென்று வெருட்ட, அதனால் கணிகண்ணன் ஊரைவிட்டுப் புறப்பட, அவனைப் பிரிந்திருக்கமாட்டாத ஆழ்வாரும் அவனைப் பின்தொடர, திருவெஃகாவிலெம்பெருமான் தானும் பைந்நாகப்பாய் சுருட்டிக்கொண்டு புறப்பட, கச்சிப்பதி முழுவதும் இருள் மூடிப்போக இதன் காரணத்தை யறிந்த மன்னவன் பதறியோடிச்சென்று பிழை பொறுத்தருளி மீளும்படி ப்ரார்த்திக்க, பெருமாளும் ஆழ்வாரும் கணிகண்ணனும் மீண்டு வந்து சேர்ந்தார்களென்று ஐதிஹ்யமுள்ளது. அசல மூர்த்தியான அர்ச்சாவதாரப் பெருமான் எழுந்து போனனென்பதும் திரும்பி வந்தானென்பதும் பொருந்துமோ வென்று ஸ்ரீ வைஷ்ணவர்களே கேள்வி கேட்க வருகிறார்கள் வேதாந்த தேசிகன் பணித்த யதோக்தகாரி ஸ்தோத்ரத்தில் [வேகாஸேது ஸ்தோத்ரே] ஆறுவது ச்லோகத்தில் இந்த ஐதிஹ்யம் வெகு சமத்காரமாக அநுஸந்திக்கப்பட்டுள்ளது. ×ப்ரத்யாதிசந்தி பவஸஞ்சரணம் ப்ரஜாநாம் பக்தாநுகந்துரிஹ, யஸ்ய கதாகதாநி× என்கிற ச்லோகம் ரஸவத்தரமானது. இதன் கருத்தாவது, யதோக்தகாரி யெம்பெருமான் பக்தனைப் பின் சென்று போவதும் வருவதுமான ஸஞ்சாரப்ரகாரத்தை யநுஸந்தித்தால் அஸ்மதாதிகளுக்கு ஸம்ஸாரகாந்தாரத்தில் போவது வருவதான

ஸஞ்சாரம் தொலையுமென்கை. அடுத்த ஏழாவது ச்லோகத்திலும் "ச்ரிதஜந பரதந்த்ரம்" என்பதனால் இவ்வைதிஹ்யம் ஸூசிதமாயிருக்கின்றது, ஸூசனையிருக்கட்டும் 'பக்தாநுகந்து: கதாகதாநி" என்று ஸுஸ்பஷ்டமாகவன்றோ வுள்ளது. மஹாமேதாவிகளான பூருவர்களுக்குத் தோன்ருத அநுபபத்திகளன்ரோ இக்காலத்து விமர்சகர்களுக்குத் தோற்றுகின்றன கண்ணழிவு சொல்லமுடியாத பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளினுலும் இவர்கள் தெளியவில்லையென்ருல் இவர்களைப்பற்றி "ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி" என்னவேணுமத்தனை ... ※

**இந்தத் தொண்ணூற்றிரண்டு உபந்யாஸமாலையை**
**மதுரேண ஸமாபயே.**

## (ஒரு திருத்தக் குறிப்பு)

ஸ்ரீ மதுபயவே. ஸ்ரீரங்கம் குண்டலம் R திருமலாசாரியர் ஸ்வாமி இதில் பிரசுரமாகியிருக்கிற "**காஞ்சீ மஹான்**" என்கிற தமது கட்டுரையைத்தமது திருவுருவப்படத்துடன் தாமே அச்சிடுவித்து ஆயிரம் பிரதிகளை நமக்கு அனுப்பிவைத்தார். கீழே 'நன்றி கீதாசார்யன்" என்றிருப்பதால் கீதாசார்யனுடைய பதிப்பாகவுமிருக்கலாம் அதிலுள்ள அதிமாத்ர ப்ரசம்ஸையை "ஆசம்ஸாசாம் பூதவச்ச" என்கிற வியாகரண ஸூத்ரப்படி அமைந்ததாக ஏற்றுக்கொள்ளுகிறேன். (ஆனுல் ஒரு திருத்தம்) அடியேன் இயற்றியுள்ள வேதவிசாரக்ரந்தங்களைப்பற்றி யெழுதுகையில், "நம்முடைய வேதங்கள்பற்றிய ஆராய்ச்சிகளில் ஐம்பது ஆண்டுகளுக்குமேலாக ஈடுபட்டுவருவநுடன் தமக்கே உரியமுறையில் அபூர்வமான விளக்கங்களை வெளியிட்டிருக்கிருர் வேத பாஷ்யங்களிலும் பதபாடங்களிலும் காணப்படும் சில குற்றங்குறைகளைச் சுட்டிக்காட்டிய தைரியமும் பெருமையும்......" இத்யாதிகளை யெழுதியுள்ளார். இதில் **வேதங்களில்** என்றதை **வேதத்தில்** என்று திருத்துக. **பதபாடங்களிலும்** என்றதை அறவே அடித்துவிடவேணும். அநாதியான பதபாடத்திற்கு விருத்தமாக வித்யாரண்ய பட்டபாஸ்கர பாஷ்யங்கள் தோன்றியுள்ளன என்பதே அடியேனுடைய விபுல நிருபணம்

(பத்ராதிபர்)

## மதுரேண ஸமாபயே





## ஒரு பக்தமணியின் கீர்த்தனை

ததி மதுரம் மது மதுரம் த்ராக்ஷா மதுரா ஸிதாபி மதுரைவ—
மதுராதபி மதுரதரா மதுராநாதஸ்ய மாதவஸ்ய கதா.

சரணெள மதுரெள ‡சரணம் மதுரம் மதுராச் சரணுங்குலயோபி தச
சரணுபரணுவளிகா மதுரா மதுராதிபதேரகிலம் மதுரம்.

‡சரணம்—ஸஞ்சரண மென்று பொருள்.

---

அஸ்மத் குல கூடஸ்தரான வாதிபீகரமஹாகுருபணித்த வரவரமுநி சதகத்தில் மணவாளமாமுனிகளின் ஸ்ரீ ஸூக்திமாதுர்யத்தில் ஈடுபட்டு அருளிச்செய்த இரண்டு ச்லோகரத்னங்கள்.

ஸுராஹா ரா ஸாரீகரண சணயத் ஸூக்தி லஹரீ
கரீயஸ்தாம் ஸ்தோதும் ப்ரபவதி ந வாசஸ்பதிரபி
ஸ நஸ் தந்யாதந்யாத்ருசமஹிமசாலீ குருவரோ
முநீந்த்ரோ நிஸ்தந்த்ர: குசலமநுவேலம் குருவர:.

த்ராக்ஷா மதிக்ஷிபதி நிந்தநி மாகரந்த
தாராம் ஸுதாரஸஜரீ மதரீகரோதி,
யத்திவ்ய ஸூக்திலஹரீ ஸ வரோ முநீந்த்ரோ
ஜீயாந் மணமவ ஹ்ருதி ஸந்ததமாதரேண.

—: மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம் :—